# தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள்

ஆசிரியர் :

மெய். சந்திரசேகரன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

டி. டி. டி. ஐ. தரமணி,
சென்னை-600 113.

## BIBLIOGRAPHICAL DATA

| | |
|---|---|
| Title of the Book | — TANJAI MAAVATTA ORPEYARGAL |
| Author | — Mai. CHANDRA SEKARAN<br>Research Scholar, |
| | — International Institute of Tamil Studies,<br>Madras–600 113 |
| Publisher | — International Institute of Tamil Studies, Madras-600 113 |
| Publication Number | — 81 |
| Language | — Tamil |
| Edition | — First |
| Date of Publication | — November, 1983 |
| Paper Used | — 16kg D/Dy White Printing |
| Size of the book | — 21×18 Cms. |
| Printing Types used | — 10 Point |
| Number of Copies printed | — 2,200 |
| Number of pages | — VIII+240 |
| Price | — Rs. 12/- (Rupees Twelve) |
| Printers | — VEK Printers,<br>34, Kothaval Street,<br>Alandur, Madras-600 016 |
| Binding | — Paper back |
| Artist | — Easwari |
| Subject | — Tanjore District place names Studies. |




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Intitute of Tamil Studies
டி. டி. டி. ஐ. அஞ்சல், சென்னை-600 113

இயக்குநர்
டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பல கோணங்களில் ஆய்வு செய்து கொண்டு இருக்கின்றது. ஊர்ப்பெயர்கள் ஆய்வு பற்றி மூன்று ஆண்டுகளுக்கு முன்பே தனிப்பட்ட ஒருவர் தமிழ் ஊர்ப் பெயர்கள் பற்றி ஆய்வு செய்து கொண்டு இருந்தார். அவர் ஊர்ப் பெயர்கள் மட்டுமே எழுதி முடித்து இந்த ஆய்வினை நிவர்த்தி செய்ய முடியாத நிலை ஏற்பட்டது. அதற்குப் பின்பு ஒவ்வொரு மாவட்ட ஊர்ப்பெயர்கள் பற்றியும் ஆய்வு செய்யலாம், அவ்வாறு செய்தால் 16 மாவட்ட ஊர்ப்பெயர்களையும் 16 பேர்களைக் கொண்டு செய்துவிடலாம் என்று நினைத்து, இங்கு ஆய்யு செய்கின்ற மாணாக்கரையும் ஊர்ப்பெயர்களை ஆய்வு செய்தவர்களையும் கொண்டு இந்த ஆய்வு செய்யலாம் என்று நினைத்தோம். அந்த நிலையில் இப்போது 'தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள்' பற்றி நிறுவன ஆய்வாளர் மெய். சந்திரசேகரன் அவர்கள் நன்கு உழைத்து பல கோணங்களில் தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் பற்றி ஆய்வு செய்து தந்துள்ளார். இதே போன்று எல்லா மாவட்டங்களுக்கும் ஊர்ப்பெயர்கள் ஆய்வு நிகழ்த்தி தனித்தனித் நூலாக வெளிக் கொணர நினைத்துள்ளோம். அதோடு தமிழ் இலக்கியங்களில் ஊர்ப்பெயர்கள் என்ற நிலையில் மூன்று அல்லது நான்கு தொகுதி கள் கொண்டு வரலாம் என்று நினைத்துள்ளோம். அதில் தொடக்க கால இலக்கிய ஊர்ப்பெயர்கள் என்ற தொகுதி இன்னும் 6 மாதங் களுக்குள் வெளிவரும் என்று நம்புகிறோம். ஏற்கனவே 'கல்

வெட்டில் ஊர்ப்பெயர்கள்' என்ற நூலை வெளியிட்டுள்ளோம். மொத்தத்தில் 20 நூல்கள் தமிழக ஊர்ப்பெயர்கள் பற்றி வெளிவரும் போது அதை நல்ல முறையில் தொகுத்து 'ஊர்ப்பெயர் களஞ்சியம்' என்ற ஒன்றை உருவாக்கலாம் என்று திட்டமிட்டுள்ளோம்.

இந்த, 'மாவட்ட ஊர்ப்பெயர்கள்' என்ற அடிப்படையில் வருகின்ற நூல்களைப் படிக்கின்ற ஆய்வாளர்கள் தங்கள் கருத்துக்களை எங்களுக்குக் தெரிவித்தால் அடுத்து வருகின்ற மாவட்ட ஊர்ப் பெயர்கள் பற்றிய நூல்களை இன்னும் சிறந்த நிலையில் அமைய வாய்ப்பு ஏற்படும்.

இந்த நூலினை நன்முறையில் ஆக்கித்தந்த ஆய்வாளரைப் பாராட்டுகிறேன்.

நிறுவனப்பணிகள் அனைத்திற்கும்ஆக்கமும், ஊக்கமும் அளித்து வருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

அன்புள்ள,

**ச. வே. சுப்பிரமணியன்**

# நன்றியுரை

தமிழுலகிற்குப் பல்வேறு சிறந்த ஆய்வுக் கொடைகளை வழங்குவதையே தன்நோக்கமாகக் கொண்டது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். அதன் பல்வேறு ஆய்வுக் கொடைகளில் ஒன்று "ஊர்ப்பெயர்கள் ஆய்வு". ஊர்ப்பெயர்கள் ஆய்வு, ஆய்வுலகில் இதுவரை எவராலும் முழுமையாக மேற்கொண்டு செய்யப்படவில்லை. ஆங்காங்கே ஒரு சில மாவட்டங்கள் பற்றி ஒரு சிலரால் ஆய்வு செய்யப்பட்டுள்ளது எனினும் அனைத்து மாவட்டங்களை பற்றிய ஆய்வும் இதுவரை நிகழவில்லை. இக் குறையை நீக்கும்வண்ணம் உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழகத்தின் அனைத்து மாவட்ட ஊர்ப்பெயர்களையும் ஆராய்ந்து நூல்வடிவில் உலகிற்கு அளிக்க முன்வந்துள்ளது. அவ்வமைப்பில் வருவதே "தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள்" என்னும் இந்நூல்.

இந்நூலில் முதற்கண் தஞ்சை மாவட்டத்தின் பொதுச் சிறப்புகள் நவிலப்படுகின்றன. அடுத்து வட்டங்களின் சிறப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. இவற்றையடுத்து ஊர்ப்பெயர்கள் முடிபுகள் அடிப்படையிலான ஆய்வும், இலக்கியங்கள், கல்வெட்டுகள், நாட்டுக் கதைகள், நாட்டுப்பாடல்கள், கள ஆய்வின் போது வல்லார்வாய்க் கேட்டுணர்ந்த கூற்றுகள் அடிப்படையிலான ஆய்வும் தரப்பட்டுள்ளன. பின்னிணைப்பாக ஊர்ப்பெயர்கள் அகரநிரல், கல்வெட்டுப் பெயருக்கான இன்றையப் பெயர்கள், சிறப்புக்கூறுகள் பட்டியல், ஊர்ப் பெயர்கள் பற்றிய குறிப்புகள் தரப்பட்டுள்ளன.

பரந்து விரிந்த இவ்வாய்வினை என் மீதுள்ள நம்பிக்கையினால் எனக்களித்தவர் இயக்குநர், முனைவர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள். பல்வேறு சூழ்நிலைகளில் என்மனவூக்கம் தளராது இந்நூலை உருவாக்கப் பல்லாற்றனும் என்னைஆற்றுவித்த இயக்குநர் பெருந்தகை அவர்களுக்கு என் மனமொழி,

மெய்யினால் ஆய நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து இந்நூல் உருவாகப் பல்லாற்றனும் துணைசெய்த பேராசிரியர் திரு. ஆர். ஆளவந்தார் அவர்களுக்கும் திரு பூ. சுப்பிரமணியம் அவர்களுக்கும், திரு. மு கோ. இராமன் அவர்களுக்கும், முனைவர் கே. பகவதி அவர்களுக்கும் மற்றும் பல்வேறு உதவிகளைச் செய்த அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். என் முனைவர் பட்டத்திற்கான ஆய்வினிடையே இந்நூலை உருவாக்க எனக்கு அனுமதி அளித்துதவிய என் மேற்பார்வையார் முனைவர் அரங்க. விஜயலட்சுமி அவர்களுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்களின் பட்டியலைப் பெறுவதற்குக் காரணமாயிருந்த மாவட்ட ஆட்சியாளர் திரு. ச. மெய்கண்டதேவன், ஐ ஏ.எஸ். அவர்களுக்கும், அவற்றைப் பெறுவதற்கும் பிற உதவிகளுக்கும் பெருந்துணை புரிந்த வட்டாட்சியர் திரு. ச. பாலசுப்பிரமணியம், எம்.ஏ. அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை நன்முறையில் அச்சிட்டுத் தந்த வெங் அச்சக உரிமையாளர் திரு. வெள்ளையப்பன் அவர்களுக்கும் செல்வி. சாந்தி, செல்வி. சீதாலக்ஷ்மி அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அழகான மேலட்டையை வரைந்தளித்த திரு. ஈஸ்வரி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்,

இந்நூல் ஒரு பரந்துபட்ட ஆய்வினை மையமாகக் கொண்டது. பொருள் பரந்துபட்ட நிலையினது ஆதலின் இதில் ஆய்வு பெறாமல் விடுபட்டவைகளும் இருக்கலாம். இந்நூல் தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்களாய்வின் ஒரு அடிப்படை ஆய்வே ஆதலின் இதன் குறைகளைப் பொறுத்தாளுதல் ஆன்றவிந்து அடங்கியக் கொள்கைச் சான்றோர்க்குக் கடன். இந்நூல் தொடர்பான செய்திகள் மேலும் கிடைப்பின் அன்பர்கள் அவற்றைத் தெரிவிக்குமாறு பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

அன்பன்,

**மெய். சந்திரசேகரன்**

# பொருளடக்கம்

## சுருக்க விளக்கக் குறியீடு

பேரா— பேராவூரணி

நீடா—நீடாமங்கலம்

மன்—மன்னார்குடி

வேதா—வேதாரண்யம்

திருத்—திருத்துறைப்பூண்டி

பட்டு—பட்டுக்கோட்டை

ஒரத்—ஒரத்தநாடு

தஞ்—தஞ்சாவூர்

திருவை—திருவையாறு

குட—குடவாசல்

திரு—திருவாரூர்

நாகை—நாகப்பட்டினம்

நன்—நன்னிலம்

பாப—பாபநாசம்

வலங்—வலங்கைமான்

கும்ப—கும்பகோணம்

திருவிடை—திருவிடை மருதூர்

மயில்—மயிலாடுதுறை

பொ—பொறையாறு

சீர்—சீர்காழி

பதி—பதிப்பு

தொ—தொகுத்தவர்

பா.—பாடல்

ப., பக்—பக்கம்

# தஞ்சாவூர் மாவட்ட ஊர்ப்பெயராய்வு

முன்னுரை :

### ஊர்ப்பெயர்களின் தோற்றம்

ஒரு பொருளை மற்றொரு பொருளில் இருந்து வேறுபடுத்திக் காட்ட — பிரித்துக் காட்ட வழங்கப்பட்டக் குறியீடுகளே பெயர்கள் எனலாம். எல்லாப் பொருள்களும் ஒரே தன்மையல்ல. ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு தன்மையதாய் — இயல்பினதாய் இருத்தல் இயற்கை. பொருள்களின் இந்த வேறுபட்ட தன்மைகளுக்கு— அமைப்புக்களுக்கு ஏற்ப அவைகளுக்குப் பெயர்களும் வழங்கப் பட்டன. இப்பெயர்கள் எல்லாமே காரணத்துடன் வழங்கப்பட்டன அல்ல. ஒரு சில பெயர்கள் எந்த விதமான காரணமும் இன்றி இடு குறியாகவும் ஒரு சில பெயர்கள் ஏதோ ஒரு காரணங் கருதியும் வழங்கப்பட்டு வருகின்றன எனலாம். இவ்வகையில் ஊர்பெயர்களும் ஒரு சில, காரணம் கண்டறிய இயலாத தன்மையிலும் பல பெயர் கள் — பெரும்பான்மையானப் பெயர்கள் காரணத்துடனும் வழங்கி வருதலை காண முடிகிறது. தொடக்கக் காலத்தில் எல்லாப் பெயர்களுமே ஒருவித அனுமானத்தின் பேரிலேயே குறிக்கப்பட்டு வந்தன. நாளடைவில் மொழி வளர்ச்சி, நாகரீக வளர்ச்சி ஆகிய வற்றின் காரணமாக இப்பெயர்கள் ஒரு வித தெளிவுடன் நல்ல முறையில் வளரத் தொடங்கின எனலாம்.

ஆரம்பக் காலத்தில் எந்தவிதக் காரணமுமின்றிச் சில அனுமானக் குறியீடுகளால் அறியத் தொடங்கிய பெயர்கள், காலம் செல்லச் செல்ல மொழி வளர்ச்சி யாலும், நாகரீக

> வளர்ச்சியாலும் தெளிவு பெற்றுச் செப்பனிட்ட ஒரு வடிவத்தைப் பெற்றது. மொழி, இனம், நாடு இவற்றின் மாறுபாட்டிற்கேற்ப ஒரு குறிப்பிட்ட பொருள் வேறு வேறு பெயர்கள் பெறுதல் உண்டு[1]

என்பதற்கேற்ப ஊர்ப்பெயர்களும் காலத்திற்கேற்ப, மொழி வளர்ச்சி, நாகரீக வளர்ச்சி ஆகியவற்றினுக்கு ஏற்பப் பல்வேறுமாற்றங்களை பெற்றுள்ளதைக் காண முடிகிறது. அவ்வகையில் ஊர்ப் பெயர்களின் உண்மைக் காரணங்களையும், அவற்றின் பல்வேறு மாற்றங்களையும் ஆராய்ந்து காண்பதே இந்நூலின் நோக்கமாகும்.

ஊர்ப் பெயர்களின் தோற்றம் பற்றி அறிவதற்கு, அவற்றுடன் தொடர்புடையகதைகள், பாடல்கள், கல்வெட்டுக்கள், இலக்கியங்கள், சாசனங்கள், போன்ற பல்வேறு பொருள்கள் துணை செய்கின்றன. இவற்றின் துணை கொண்டு ஊர்ப் பெயர்களின் தோற்றத்தை ஆராய்ந்த போது சில உண்மைகள் தெரிய வருகின்றன.

1. நாடோடியாக அலைந்து கொண்டிருந்த மனிதன் நிலையான வாழ்க்கையை மேற்கொண்டு ஓரிடத்தில் கூட்டமாக வாழத் தொடங்கிய போது பெயர்கள் தோன்றியிருக்கலாம் என்பதே ஊர்ப் பெயர்களின் தோற்றத்துக்கான தலைமையான காரணம் எனலாம். இதனை,

> மனித இனம் ஒரு குழுவாக—சமூகமாக ஆங்காங்கே எதேனும் ஒரு பகுதியில் சிறிது காலம் நிலையாக வாழத் தொடங்கிய பின்னர் தான் இடப்பெயர்கள் தோன்றி இருக்க வேண்டும். ஒரு மனிதனை இன்னொரு மனிதனிடமிருந்து வேறு படுத்த ஆட்பெயரையும், ஒரு இனத்தை (விலங்கு, தாவரம்) இன்னொரு இனத்திடமிருந்து பிரித்துக் காட்ட இனப்பெயரையும் வழங்கியதைப் போன்று, நிலத்தின் ஒரு பகுதியை இன்னொரு பகுதியினின்று வேறு

---

1. சுசீந்திரம் கல்வெட்டுகளில் பெயராய்வு மா. நயினார். பக் 28-26

படுத்திக் காட்ட இடப்பெயர்களை அமைத்துக் கொண்ட
னர் ஆதிகால மக்கள்[2]

என வரும்கூற்று உறுதி செய்வதைக் காணலாம்.

2. ஊர்களின் – இடங்களின் தன்மைக்கு ஏற்ப பெயர்கள் வழங்கப்பட்டன. நிலத்தின் வெவ்வேறு தன்மைக்கு ஏற்ப அவ்வவ் வியல்புகளைக் குறிக்கும் வண்ணம் நிலப்பகுதிகளையும் நீர்ப்பகுதி களையும் பிரித்தறியும் வண்ணம் பெயர்கள் வழங்கப்பட்டன எனலாம். இவ்வகையிலேயே மலை, குன்று, பாறை, திட்டு, மேடு எனவும் குளம், ஏரி, கடல், ஓடை, புலம் எனவும் பெயர்கள் தோன்றின என அறிய முடிகிறது.

3. ஊரின் புறச் சூழலுக்கு ஏற்பவும் பெயர்கள் வழங்கப்பட்டன என அறிய முடிகிறது. ஊரைச் சுற்றி வளர்ந்து வரும் மரங்கள், கொடிகள், காடுகள், தோட்டங்கள் இவற்றின் காரணமாகவும், அங்கே காணப்படும் விலங்குகளின் காரணமாகவும் பெயர்கள் தோன்றுவது உண்டு. மருத மரங்கள் சூழ்ந்த பகுதி மருதவனம், மருதூர், எனவும் பனை மரங்கள் நிறைந்த பகுதி பனந்தாள், பனங்குடி எனவும் ஆலங்குடி, ஆலவேலி என ஆலமரங்கள் நிறைந்த பகுதியையும், மயில்கள் தோகை விரித்தாடிய துறையினை மயிலாடுதுறை எனவும், இவ்வாறு புறச் சூழலுக்கு ஏற்பப் பெயர்கள் தோன்றுவதையும் காண முடிகிறது.

4. சில குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளின் காரணமாகவும் பெயர் கள் தோன்றுவதுண்டு. இறைவனின் திருமணம் நடந்த இடமாக திருமணஞ் சேரியும், அதன் போது வேள்வி நடந்த இடமாக வேள்விக் குடியும் பெயர்க்காரணம் கூறப்படுவதைக் காணமுடிகிறது.

5. மன்னனின் வெற்றிக்கு அறிகுறியாகவும் பெயர்கள் வழங்கப்படுவதுண்டு. கிடாரங் கொண்ட வெற்றியைக் குறித்து வழங்கப்பட்ட பெயராக கிடாரங்கொண்டான் என்று ஒரு ஊர்பெயர் வழங்கப்படுதலைக் காணலாம்.

---

2. சுசீந்திரம் கல்வெட்டுக்களின் பெயராய்வு ப 28.

6. மன்னனின் சிறப்புப் பெயரினை — அவன் சிறப்பு கருதி அவனோ மக்களோ வழங்குவதையும் காணமுடிகிறது. அருள் மொழித் தேவன், கிடாரங்கொண்டான், ராஜராஜபுரம் போன்று வரும் பெயர்களால் இதை அறியலாம்.

7. மன்னன் மற்றவர்களுக்குக் கொடைப் பொருளாக ஊரினை வழங்கும் போது, கொடுத்த மன்னன் பெயராலோ, ஏற்றுக் கொண்ட வர்கள் பெயராலோ ஊர்ப் பெயர்கள் வழங்கப்படுவதும் உண்டு இவ்வகையில் அந்தணர்களுக்குத் தானமாக அளித்த ஊர்கள் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரில் வானவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம், திரைலோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலம், செம்பியன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம் எனவும், புலவர்களுக்கு வழங்கப்பட்ட பகுதிகள் பண்டிதக் குடி, புலவநல்லூர் புலவன்காடு, புலவர் நத்தம் எனவும், கூத்தர் போன்ற கலைஞர்களுக்கு வழங்கப்பட்ட பகுதிகள் கூத்தனூர், கூத்தாநல்லூர், கூத்தாடி வயல் எனவும், கொடையினை ஏற்றுக் கொண்டவர் பெயரில் "ஆபரணதாரிச் சதுர்வேதி மங்கலம், சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலம் எனவும் வழங்கப்பட்டுள்ளதைக் காண முடிகிறது.

8. தனி மனிதர்களின் சிறப்பு கருதியும், தனி மனிதர் சிலரின் உடைமை குறித்தும் அவர்கள் பெயராலும் ஊர்ப் பெயர்கள் தோற்று விக்கப்பட்டுள்ளன. பாஸ்கரராஜபுரம், தியாகராஜபுரம், மோகனராவ் தோட்டம், பிஷ்வா சிவராயர் தோட்டம் போன்று வரும் ஊர்ப் பெயர்களால் இதனை அறிய முடிகிறது.

9. இன அடிப்படையிலும் ஊர்ப்பெயர்கள் தோற்றுவிக்கப் பட்டுள்ளதை வாணியன் கரம்பை, அந்தணப் பேட்டை, வானாதி ராயர்புரம், வாண்டையான் இருப்பு, வேட்டைக்காரன் இருப்பு போன்ற ஊர்ப் பெயர்களால் அறிய முடிகிறது.

இன்னும் பலவேறு காரணங்களால் ஊர்ப்பெயர்களின் தோற்றம் ஏற்பட்டு இருக்கலாம் எனத் தெரிய வருகிறது. மேற் கூறப்பட்டக் காரணங்களன்றி "மங்கல வழக்குப் பெயராகவும், பல சொல்லின் முதல் எழுத்துக்களைச் சேர்த்து உருவாக்கும் உருவாக்கப் பெயராக

வும், இரு கூறுகளை இணைத்து உருவாக்கும் தழுவுபெயராகவும், உண்மையான பெயரை மாற்றி வழங்கும் தவருன பெயராகவும்[3]" ஊர்ப் பெயர்கள் தோன்றுவதுண்டு என்ப எனினும் இவ்வகையில் உருவான பெயர்கள் தஞ்சை மாவட்டத்தில் இல்லையாதலின் இவை பெரிதும் விளக்கப்படவில்லை.

## ஊர்ப்பெயராய்வு முன்னோட்டம்

பழம் பண்பாட்டை, நாகரிகத்தினை விளக்கும் ஊர்ப்பெயர்கள் ஆராய்ச்சி மேலை நாட்டிலேயே முதன் முதலில் தோற்றம் பெற்றது. ஐரோப்பியா, பிரிட்டன் போன்ற நாடுகளில்தான் முதன் முதலில் ஊர்ப்பெயராய்வு தொடங்கியது. மேலை நாடுகள் இவ் வாய்வில் வளர்ச்சியுற்ற அளவில் இன்று நாம் வளர்ச்சி பெறவில்லை எனலாம். சில ஆண்டு காலமாகவே நம்நாட்டினர் இவ்வாராய்ச் சியில் ஈடுபட்டு வருகின்றனர் எனலாம் ஆனல் மேலை நாட்டிலோ இவ்வாராய்ச்சியில் பெரிதும் வளர்ச்சியுற்ற நிலையில் இருப்பதையும் பல சங்கங்களும், ஆய்வரங்கங்களும், ஆய்வுத் தொகுதிகளும் வெளி வந்துள்ளதையும் அறியமுடிகிறது. இங்கிலாந்தில் ஆங்கில இடப் பெயராய்வுக்கழகம் இவ்வாய்வு வெளியீடாக ஐம்பது தொகுதிகள் வெளியிட்டுள்ளது. மேலும் ஸ்காட்லாந்திலும் அமெரிக்காவிலும் பெயராய்வுச் சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. முதன் முதலில் 1949-இல் அனைத்துலகப் பெயராய்வுக்குழு பெல்ஜியத்தில் உள்ள லூவெய்ஸ் என்னுமிடத்தில் 48 நாடுகளை உறுப்பினர்களாகக் கொண்டு தொடங்கப் பெற்றுள்ளது.[4] மூன்ருண்டுகளுக்கு ஒரு முறையாக பல நாடுகள் கலந்து கொண்டு கருத்தரங்கள் நடந் துள்ளன. மேலும் பல நாடுகளில் நடக்கும் பெயராய்வினைப் பற்றிய செய்திகளைத் தொகுத்து 'Onoma' என்ற இதழ் Bibliographical and Imformation Bulletion என்ற தொகுதிகளை வெளியிட்டு வருகிறது.[5] இவ்வாறு பரந்துபட்ட அளவில் ஊர்ப்பெயராய்வு மேலை நாட்டில் விரிவாகச் செய்யப்பட்டு வருகிறது.

---

3. சுசீந்திரம் கல்வெட்டுக்களில் பெயராய்வு பக். 31-32
4. திருநெல்வேலி மாவட்ட இடப்பெயராய்வு, ஆ சுப்பிரமணியன்
5. மேற்படி நூல், ப

மேலை நாடுகளைப் போல பரந்துபட்ட நிலையில் நம்நாட்டில் ஊர்ப்பெயராய்வு நடக்கவில்லை எனினும் ஓரளவிற்கு வளர்ந்த நிலையிலேயே காணப்படுகிறது எனலாம். ரா. பி. சேதுப்பிள்ளையின் ஊரும் பேரும். கி. நாச்சிமுத்துவின் கோயம்புத்தூர் மாவட்ட இடப்பெயராய்வு. எஸ். ஞானமுத்துவின் கன்னியாகுமரி மாவட்ட ஊர்ப்பெயராய்வு, மா. நயினாரின் சுசீந்திரம் கல்வெட்டுக்களில் இடப்பெயராய்வு, ஆ. சுப்பிரமணியனின் திருநெல்வேலி மாவட்ட இடப்பெயராய்வு, சரஸ்வதிபாயின் சென்னை மாவட்ட ஊர்பெயராய்வு (தெலுங்கு) ஆர். ஆளவந்தாரின் கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள், த. கோ. பரமசிவத்தின் தஞ்சை மாவட்ட இடர்பெயர்கள், போன்றவையும் "செந்தமிழ்ச் செல்வியில் அவ்வப்போது வெளிவந்துள்ள ஊர்ப்பெயராய்வுக் கட்டுரைகளும், தமிழ் நாட்டின் ஊர்ப்பெயராய்விற்கு முன்னோடியாக அமைந்தவை எனலாம். "குமர குருபரன், ஞானசம்பந்தம்" ஆகிய சமய இதழ்களில் வெளிவரும் ஒவ்வொரு ஊரைப் பற்றிய ஆய்வுரைகளும், பிறவும் தமிழ் நாட்டின் ஊர்ப்பெயராய்விற்குத் துணை செய்வன எனலாம். தற்போது சென்னை, உலகத் தமிழராய்ச்சி நிறுவனமும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகமும் தமிழ் நாட்டின் ஊர்ப்பெயராய்வினைத் தொடங்கிச் சிறப்பாகச் செய்து வருகின்றன. அவ்வகையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெளியீடாகவே இவ்வாய்வு நூல் வெளிவருகிறது.

## ஊர்ப்பெயராய்வின் பயன்கள்

ஊர்ப்பெயர்கள் மிகவும் பழமையானவை. புதைப் பொருட்களைப் போலவே ஊர்ப்பெயர்களும் பழம் பண்பாட்டினையும் நாகரிகத்தையும் உணர்த்தும் சான்றுகளாய் விளங்குகின்றன. பழம் பண்பாட்டை உணர்த்தும் காரணத்தால் ஊர்ப்பெயராய்வு மிகவும் போற்றப்பட வேண்டிய ஒன்று ஆகும்.

> "நாம் வாழும் இவ்வுலகம் இன்றைக்குச் சுமார் இரு நூறு கோடி ஆண்டுகளுக்கு முன்னர், பெரிய செஞ்ஞாயிற்றினின்றும் பிளவுண்டு வீழ்ந்த ஒரு சிறு துண்டு. வீழ்ந்த துண்டு முதல் ஒரு நூறு கோடி ஆண்டு வரை அனற்பிழம்பாய்க் கொதிப்புற்றுக் கிடந்தது. பின்னே அது படிப்படியே தணியத்தொடங்கியது. அனல் தணியத் தணிய நிலவகை

கள், உயிர்வகைகள் முதலியன தோன்றலாயின. நிலமும் உயிரும் தோன்றியவாறே பிண்டமாய்க் கிடந்திருப்பின் அவை என்றோ பட்டும் போயிருக்கும். அவைபடாமல் வாழ்வடைந்து வருதல் கண்கூடு. காரணம் என்னை? காரணம் பலபடக் கூறலாம் ஈண்டைக்கு ஒன்றைச் சிறப்பாய்க் குறித்தல் நலம். அது நிலமும் உயிரும் "ஊரும் பேரும்" பெற்றமை எண்க. ஊரும் பேரும் உலகை வாழ வைக்கும் பெற்றமை உடையன என்பதை உணர்க"[6]

என்னும் கூற்று ஊர்ப்பெயராய்வின் சிறப்பினை நன்கு புலப்படுத்தும்.

ஊர்ப்பெயராய்வின் மூலம் பழங்கால வரலாற்றினையும், பண்பாட்டினையும், நாகரிகத்தினையும் அறிய முடிகிறது. பழங்காலத்தில் வாழ்ந்த இனங்கள்-குடிகள் பற்றியும், சாதி சமய வரலாறு பற்றியும், நில அமைப்பு பற்றியும், அக்கால இலக்கியங்கள் பற்றியும், தொல் பொருளாய்வுக்குத் துணை செய்யும் வகையில் நாடு, நகரங்கள் பற்றியும் நன்கு அறிய முடிகிறது. ஊர்ப் பெயராய்வினால் கீழ் வருவன போன்ற பலவிதமான நன்மைகளை அறிய முடிகிறது.

1. பொதுவாக ஊர்ப் பெயராய்வினால் பழைய வரலாற்று உண்மைகளை அறிய முடிகிறது.

2. வரலாற்றுப் பெயர்கள், கல்வெட்டுப் பெயர்கள் ஆகியவற்றால் அக்கால அரசியல் அமைப்பு, நிர்வாகப் பிரிவுகள், மன்னர் காலம், நாட்டு நிலைமை போன்றவற்றை அறிய முடிகிறது.

3. சதுர்வேதி மங்கலமாக அளிக்கப்பட்ட ஊர்கள் பலவற்றினால் மன்னனின் கொடைப் பண்பும், அந்தணர்களுக்கு இருந்த செல்வாக்கும், சில ஊர்ப் பெயர்களினால் மன்னர்களின் பட்டப் பெயர்கள் போன்றவையும் அறிய முடிகிறது.

---

6. ஊரும் பேரும், ரா. பி. சேதுபிள்ளை, ப. III-IV

4 ஊர்களை ஒருவருக்குத் தானமாக வழங்கும்போது நிலத்தை அளப்பதால், அக்கால நில அளவை பற்றியும் அறியமுடிகிறது.

5. உச்சிக் கட்டளை வடகட்டளை, அர்த்த ஜாமக் கட்டளை, கோயில் பற்று போன்ற பெயர்களால் கோயில்களுக்கு வழங்கப்பட்ட மானியங்கள் பற்றியும், கோயில்களின் தினசரி நடப்பு நிலைபற்றியும், பிற சிறப்புக்கள் பற்றியும் அறிய முடிகிறது.

6 கூத்தாடிவயல், கூத்தா நல்லூர், கூத்தானூர் போன்ற ஊர்ப் பெயர்களால்கூத்தர் முதலான கலைஞர்களுக்கு அவைமானிய மாக வழங்கப்பட்டவை என்பதும், இவற்ருன் இவர்கள் போற்றப் பட்ட தன்மையையும் அறிய முடிகிறது.

7. புலவர் நத்தம், புலவன் காடு, புலவ நல்லூர், புலவனூர், பண்டிதக்குடி போன்ற ஊர்ப் பெயர்களால் நாட்டில் புலவர்களுக்கு இருந்த மதிப்பும், அவர்களுக்கு ஊர்கள் தானமாக வழங்கப்பட்ட தையும் அறியமுடிகிறது.

8. ஆயக்காரன்புலம் ஆவணம், சுங்கம் தவிர்த்தான் போன்ற ஊர்களால் அரசியல் அமைப்பினை — வரி நிலைமை, சுங்கம் தவிர்க்கப்பட்டமை, ஆவணங்கள் பதிவு செய்யப்பட்டமை போன்ற அரசியல்கூறுகள் தெரிய வருகின்றனர்.

9. சாதிப் பெயர்களால், ''சிலம்பில் பட்டிணப்பாக்கம், மருவூர் பாக்கம் ஆகியவற்றில் ஒவ்வொரு இனத்தவரும் ஒவ்வொரு தொழில் செய்வோரும் தனித்தனியே வாழ்ந்து வந்தனர்'' என்று கூறுப் படுவது நடை முறை உண்மையாதலைக் காணமுடிகிறது.

10. நில அமைப்பிற்கு ஏற்பப் பெயரிட்டு வழங்கப்பட்ட அக் காலப் பண்பாட்டுக் கூறினை அறிய முடிகிறது.

11. காகிதப்பட்டரை, துகிலி, கூறைநாடு (கொரநாடு) போன்ற ஊர்ப்பெயர்களால் அவ்வூர்த் தொழில் சிறப்பினை அறியமுடிகிறது.

12. பறவைகள், விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றின் பெயர்களால் இம்மாவட்டத்தில் இருந்த—இருக்கின்ற பறவைகள்,

விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றைப் பற்றி விளக்கமாக அறிய முடிகிறது.

13 தளவாய்ப்பாளையம் ஏனாதி, ஏனாதிகரம்பை, எட்டி வாழ்க்கைப் போன்ற பெயர்கள் தளவாய் போன்ற அலுவலர் நிலை பற்றியும், எட்டி, ஏனாதி போன்ற மன்னர்களால் சிறப்பிக்கப்பட்டவர்கள் பற்றியும் அறிய உதவும் வரலாற்றுச் சான்றாகின்றன

14. பாகவமேளம், பண்ணவயல், பண்ணாள், போன்ற ஊர்ப்பெயர்களால் இசைத்துறை பற்றிய சில குறிப்புகளை அறிய முடிகிறது.

15. முக்கியமாக மொழிவளர்ச்சியின் பல்வேறு நிலைமைகளைப் பற்றி ஆராய்ந்து அறிய பெரும் சான்றாக உதவுகின்றன. மொழியியல் நோக்கில் காணும் போது வடமொழி ஆதிக்கத்தின் தன்மையினையும் பேச்சு வழக்கு, எழுத்து வழக்கு மாற்றங்களையும், உயர்பொருட் பேறு, இழிபொருட் பேறு, போன்ற மொழியில் மாற்றங்களையும் அறியப் பெருந் துணை செய்கின்றன.

16. கள ஆய்வின் போது பல்வேறு வரலாற்று உண்மைகளை அறிய உதவுகின்றன. சான்றிற்கு ஒன்று. நூல் ஆசிரியரின் கள ஆய்வின் போது கிடைத்த வரலாற்று ஆய்வுக்குரிய கருத்தொன்று வருமாறு.

"வேதாரண்யம் வட்டத்தில் உள்ள செண்பகராயநல்லூர் என்னும் ஊர்ப் பற்றிய பெயர்க் காரணத்தை கூறும் போது, கரிகாற் சோழனின் இலங்கைப் படைத் தலைவன் பெயர் செண்பகராயன் என்றும், அவன் நினைவாகவே இவ்வூருக்கு இப்பெயர் வந்தது எனவும் இவ் வழியேதான் கரிகாற் சோழன் இலங்கைக்குப் படையெடுத்துச் சென்றான் எனவும், இன்று 'தலைக்காடு' என்றுவழங்கும் ஊரில் இருந்து வேதாரண்யம் வரை ராஜபாட்டையாக இருந்தது எனவும் கூறும் கருத்து.

---

7. தகவல் கூறியவர். சோ. பாலசுப்ரமணியம் ஆசிரியர், உயர் நிலைப் பள்ளி, வேதாரண்யம்

இதில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்று ஆய்வில் கணித்தறிந்து விடலாம். எனினும், இது போல வழங்கப்படும் பல கருத்துக்களில் ஒன்றினால் கட்டாயம் பெரும் வரலாற்று உண்மை கிடைக்க வரலாம் என்பது உறுதி இக்கருத்தை உறுதிப் படுத்துவது போலவே,

வேதாரண்யத்தில் "சோழ மன்னர்கள் இங்கிருந்தே ஈழம் சென்று படையெடுத்தனர் எனவும், அதன் காரணமாகவே இவ்வூர்த் தெருப் பெயர்களுக்கு சோழர்கள் பெயரை உடையதாய் தசரதமகாராஜா வீதி' சருகாலச் சோழன் வீதி எனப் பெயர் ஏற்பட்டதாய்க் கூறுவர்.[8] இப் பெயர்கள் இன்று வழக்கில் இல்லை எனினும் இவை விரிவான ஆய்விற்குரிய தொன்றாகும்.

மேலும் வேதாரண்யத்தின் வழியேதான் இராமன் சேது சென்றான். எனவும், அதன் நினைவாகவே இவ்வூர் வீதி இன்றும் 'சேதுரஸ்தா' என்று வழங்கப்படுகிறது எனவும், இவ்வூர் அருகில் உள்ள 'ராமர்பாதம்' என்னும் இடத்தையும் சான்றாகக் காட்டுவர்.[9]

இது போன்று களப்பணியின் போது கிடைக்கும் பல்வேறு கருத்துக்கள் பல மறைந்து போன வரலாற்று உண்மைகளை அறியப் பெருந்துணையாக இருக்கும்.

17. ஊர்ப் பெயர்கள் தொடர்பாக எழும் நாட்டுக்கதைகள். நாட்டுப்பாடல்கள் ஆகியவற்றல் அக்கால மக்களின் சமுதாய நிலைமை பற்றியும், இவை மூலமாக ஏற்படும் இலக்கியங்கள் பற்றியும் அறிய முடிகிறது.

இல்வாறு ஊர்ப் பெயராய்வினால் பல்வேறு விதமான முறையில் மொழி, இனம், பண்பாட்டு வளர்ச்சி, நாகரீக வளர்ச்சி, அரசியல் அமைப்பு, சமுதாய நிலை, மறைந்த பல உண்மைகள் போன்ற பல செய்திகளைப் பற்றி அறிய முடிகிறது.

---

8. தகவல் கூறியவர். திரு. மாசிலாமணி தேசிகர், வேதாரண்யம்
9. தகவல் கூறியவர். திரு. மாசிலாமணி தேசிகர், வேதாரண்யம்

## ஆய்வு அமைப்பு முறை

தஞ்சாவூர் மாவட்ட ஊர்ப்பெயராய்வு என்னும் இந்நூலில் மேற் கொள்ளப்பட்டுள்ள ஆய்வு அமைப்பு முறையே இத்தலைப்பில் சுட்டப்பட்டுள்ளது.

இந்நூல் பெரும் பிரிவாக ஐந்து பகுதிகளை உடையது. முதலிரு பகுதிகள் பொதுக் கூறாகவும், அடுத்த இரு பகுதிகள் சிறப்புக் கூறாகவும், இறுதிப் பகுதிபின்னிணைப்பாகவும் பகுக்கப்பட்டுள்ளது.

பகுதி ஒன்றில் நான்கு உட்தலைப்புக்களில் ஊர்ப்பெயர்களின் தோற்றம் பற்றியும், தோற்றத்திற்கான பல்வேறு காரணங்கள் பற்றியும், ஊர்ப்பெயராய்வின் முன்னைய வரலாறு பற்றியும், ஊர்ப்பெயராய்வு மேற்கொள்ளுவதனால் ஏற்பட்டுள்ள ஏற்படக்கூடிய பயன்பாடுகள் பற்றியும், ஆய்வு அமைப்பு முறையும் முன்னுரையாக விளக்கப் பட்டுள்ளன.

பகுதி இரண்டில் தஞ்சாவூர் மாவட்ட பொதுச் சிறப்புகள் கூறப்பட்டுள்ளன. இதில் தஞ்சாவூர் மாவட்டத்தின் இயற்கை அமைப்பு, எல்லை, அரசியல் வரலாறு, சமுதாயநிலை, மாவட்டத் தின் பிரிவுகள், மக்கட் தொகை, பரப்பளவு, சிறப்புச் செய்திகள், வட்டங்களின் பெயர்க்காரணங்கள், சிறப்புக்கள் ஆகியன விளக்கப் பட்டுள்ளன.

பகுதி மூன்றும் நான்கும் ஊர்ப்பெயர்கள் ஆய்வு செய்யப்பட்ட வரலாற்றினை விளக்குகின்றன. பகுதி மூன்றில் ஊர்ப்பெயர்களின் பொதுக்கூறு, சிறப்புக்கூறு இவை இவை எனவும், பொதுக்கூறில் காணப்படும் செயற்கைக் கூறு (கோட்டை, கொத்தளம், வீடு, வாசல் போன்றன) இவை இவை எனவும், இயற்கைக் கூறு (குன்று மலை, பாறை, மேடு, திட்டு, புலம், குளம், ஏரி, சமுத்திரம் போன்றன) இவை இவை எனவும், சிறப்புக் கூறில் அடங்கியுள்ள விலங்குப் பெயர்கள், தாவரப் பெயர்கள், ஆட்பெயர்கள், ஜாதிப் பெயர்கள், போன்ற பிற பெயர்களின் இயல்பு பற்றியும், விரிவாக விளக்கப் பட்டுள்ளன.

இதன் தொடர்பாக நான்காம் பகுதியில் வரலாற்றுப் பெயராய்வும், கதைகள், கல்வெட்டுக்கள், இலக்கியங்கள் ஆகியவற்றினால் அறியலாகும் ஆய்வு முடிவுகளும், மொழியியல் நோக்கில் ஊர்ப் பெயராய்வும் ஆய்வு முடிவும் விளக்கப்பட்டுள்ளன.

பகுதி ஐந்தில் பின்னிணைப்பாக ஊர்ப்பெயர்கள் குறிப்பும், கல்வெட்டுப் பெயர்களும் அவற்றின் இன்றைய பெயர்களும், சிறப்புக் கூறுகள் பட்டியலும், ஊர்ப்பெயர்களின் அகர நிரலும், துணை நூற் பட்டியலும் தரப்பட்டுள்ளன.

இவ்வாய்வு, மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்தில் இருந்து கிடைத்த கிராமங்களின் பெயர் பட்டியல் துணைக் கொண்டும், பிறவற்றின் துணைகொண்டும் செய்யப்பட்டுள்ளது. பெரும்பான்மை பெருங்கிராமங்களே கிடைத்தது ஆதலின் இந்நூலில் இடம்பெற்றுள்ள ஊர்கள் அனைத்தும் பெருங்கிராமங்களேயாம். ஒரே வழி சிறு கிராமங்கள் பற்றிய ஆய்வும் கூறப்பெற்றுள்ளது. ஊர்ப்பெயர்களைப் பற்றிய கதைகள், இலக்கியங்கள், கல்வெட்டுகள், களப்பணி ஆய்வு ஆகியவற்றின் துணைகொண்டே இவ்வாய்வு செய்யப்பட்டுள்ளது. மேலும் ஊர்ப்பெயர்கள் வழக்கிலும், எழுத்துச் சான்றிலும் ஆக உள்ளவையே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. ஊர்ப் பெயரின் அருகில் தரப்பட்டுள்ள எண்கள் கிராமங்களின் ரெவின்யூ எண்களைக் குறிக்கும்.

# மாவட்ட அமைப்பு

தஞ்சை மாவட்டம் தமிழகத்தின் சிறந்த ஒரு மாவட்டமாகப் போற்றப்படும் பெருமைக்குரியது. "தென்னிந்தியாவின் நெற்களஞ்சியம்" எனச் சிறப்பிக்கப்படும் இம்மாவட்டம் வடக்கில் கொள்ளிடம் ஆற்றையும், மேற்கில் திருச்சி மாவட்டத்தையும், தெற்கில் புதுக்கோட்டை மாவட்டத்தையும் கிழக்கில் வங்காள விரிகுடாவையும் எல்லையாகக் கொண்டது. இதன் மொத்தப் பரப்பளவு 9,735 கி.மீ. இம்மாவட்டத்தின் மொத்த மக்கள் தொகை 3,840,732 (1971)

இம்மாவட்டம் 20 வட்டங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. மொத்தம் சுமார் 2,600 பெருங்கிராமங்களையும், சுமார் 6,000 சிறு கிராமங்களையும் தன்னகத்தே கொண்டது. வட்டங்கள் 20 வருமாறு :

1. பேராவூரணி
2. நீடாமங்கலம்
3. மன்னார்குடி
4. வேதாரண்யம்
5. திருத்துறைப்பூண்டி
6. பட்டுக்கோட்டை
7. ஒரத்த நாடு
8. தஞ்சாவூர்
9. திருவையாறு
10. குடவாசல்
11. திருவாரூர்
12. நாகப்பட்டினம்
13. நன்னிலம்
14. பாபநாசம்
15. வலங்கைமான்
16. கும்பகோணம்
17. திருவிடைமருதூர்
18. மயிலாடு துறை
19. பொறையாறு
20. சீர்காழி

இவ்வட்டங்களில் ஒரு சில மிகச் சமீபத்திலேயே தனியொரு வட்டமாகப் பிரிக்கப்பட்டன. இனி இவ்வட்டங்களின் சிறப்பு,

தஞ்சை மாவட்ட இயற்கை அமைப்பு, அரசியல் நிலை, சமுதாய நிலை ஆகியவற்றைப்பற்றி காண்போமாக.

## வரலாற்றுச் சிறப்பு

தென்னிந்தியாவின் வரலாற்றில் தஞ்சையின் வரலாறு தனியிடத்தைப் பெற்றுள்ளது எனலாம். இம்மாவட்டத்தில் உள்ள கோயில்களும், கோட்டைக் கொத்தளங்களும், இங்கு காணப்படும் கல்வெட்டுக்களும் தஞ்சை வரலாற்றுச் சிறப்பைப் பகர்வன எனலாம். பல்வேறு காலச் சூழலில் தஞ்சையின் வரலாற்று நிலை எவ்வாறு இருந்தது என்பதைக் கல்வெட்டுக்களே பெரும்பாலும் உணர்த்துகின்றன எனலாம்.

தஞ்சை வரலாற்றில் பெரும் பங்கு வகித்தவர்கள் சோழர்களே எனலாம். சங்ககாலம் தொட்டுச் சோழர்களே புகழ் பெற்று இருந்திருப்பினும், தஞ்சையில் சோழர்கள் ஆட்சி நடைபெற்றபோதே அவர்கள் சிறப்பு பெருமளவில் புகழ்பெற்றது எனலாம். விசயாலய சோழன் முதன் முதலில் களப்பிரர்கள் ஆட்சியில் இருந்த தமிழகத்தை மீட்டு, தன் தலைநகராகத் தஞ்சையைக் கொண்டு சோழர் ஆட்சியைப் புதுப்பித்த பிறகே மீண்டும் சோழர் ஆட்சி சிறப்பான நிலைக்கு வந்தது எனலாம். விசயாலய சோழனுக்குப் பிறகு அவன் மகன் ஆதித்த சோழனும் அவன் மகனாகிய பராந்தக சோழனும், பிறகு வந்த முதலாம் இராஜராஜன், இவன் மகன் முதலாம் இராசேந்திரன் ஆட்சியிலும் இவர்களுக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த மூன்று குலோத்துங்கர்கள் ஆட்சியிலும் தஞ்சை பெரும்புகழ் பெற்று இருந்ததை இவர்கள் காலத்தில் தோன்றிய இலக்கியங்களாலும், கல்வெட்டுக்களாலும், கோயில்களாலும் அறிய முடிகிறது. அதிலும் தஞ்சையில் இன்றளவும் சிறப்புடன் காணப்படும் இராஜராஜனால் கட்டப்பட்ட பெரிய கோயிலினால் தஞ்சையில் சோழர்கள் ஆட்சி சிறப்புற்று இருந்தமையை நன்கு அறிய முடிகிறது. சோழர்கள் ஆட்சியைப் பற்றி, "உலக வரலாற்றுக் கடிதங்கள்" என்னும் நூலில்,

"சோழப் பேரரசு வலிமையடைந்து ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் நிகரின்றி விளங்கியது. சோழர்கள் கடல் ஆதிக்கம் உள்ளவர்கள். அவர்களுடைய பெரிய கடற்படை அரபிக் கடலிலும், வங்காள விரிகுடாக் கடலிலும் பெருமிதமாக வளர்ந்து வந்தது. அவர்களுடைய தலையாய துறைமுகம் காவிரி ஆறு கடலோடு கலக்கும் சங்க முகத்தில் விளங்கிய காவிரிப் பூம்பட்டிணம். இவர்களுடைய முதல் பெரிய அரசன் விசயாலயன். வடக்கே பரவிய சோழர்களை திடீரென்று ராஷ்டிரகூடர்கள் தோற்கடித்து நிறுத்தினர். ஆனால் இராஜராஜசோழன் மீண்டும் சோழர்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டினான். இது பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் நிகழ்ந்தது. அவன் இலங்கையை வென்றான். சோழர்கள் அங்கே 70 ஆண்டுகள் அரசாட்சி செய்தனர். அவனுடைய மகன் ராசேந்திர சோழனும், போர் வலிமையும் வீரமும் உடையவனாக விளங்கினான். அவன் தன்னுடைய போர் யானைகளைக் கப்பலில் ஏற்றிச் சென்று பர்மாவை வென்றான். வட இந்தியாவுக்கும் வந்து வங்காள மன்னனைப் புறங்கண்டான். இவ்வாறு சோழப் பேரரசு பெரிதும் பரவிக் கிடந்தது. குப்தர் காலத்துக்குப் பின்னர் இதைத்தான் மிகப் பெரிய பேரரசு என்று சொல்ல வேண்டும்".

என்று ஜவஹர்லால் நேரு கூறியிருப்பதில் இருந்து தென் இந்திய வரலாற்றில்—தஞ்சையில் சோழர்கள் சிறந்திருந்தமையை நன்கு அறிய முடிகிறது.

சோழர் ஆட்சிக்குப் பிறகு ஒரு சில காலம் பாண்டியர் ஆட்சியில் இருந்தது. பின்னர் விசயநகர பேரரசர்கள் சோழ மண்டலத்தைக் கைப்பற்றி ஆட்சிசெய்தனர். அவர்களுடைய பிரதிநிதிகளாக 1532 முதல் 1675 வரை தஞ்சையை நாயக்க மன்னர்கள் ஆட்சி செய்து வந்தனர். தஞ்சையில் முதன் முதலாக நாயக்கர்

1. தஞ்சாவூர் மாவட்டம், சோமலெ, பக். 25-26

ஆட்சியைத் தோற்றுவித்தவன் சேவப்பநாயக்கன் என்பவன். இவன் காலத்தில் தஞ்சை மாவட்டம் சாதி, மத பேதமற்ற நிலையில் எல்லா இனத்தவரும், எல்லா நாட்டினரும் சோழ நாட்டில் குடியேறி சிறப்புடனிருந்தனர். இவனுக்குப் பின் ஆட்சியில் இருந்த அச்சுதப்ப நாயக்கனும், இவனுக்குப் பின் ஆட்சியில் இருந்த ரகுநாத நாயக்கனும் தஞ்சையைச் சிறப்புடன் ஆண்டனர். இம்மூவர் ஆட்சியிலும் அமைச்சராக இருந்தவர் கோவிந்த தீட்சதர் என்பவர் மிகவும் புகழ்பெற்றவர். இவருடைய பெயராலேயே தஞ்சை மாவட்டத்தில் இன்றும் பல ஊர்கள் கோவிந்தபுரம், கோவிந்தக் குடி என்று வழங்குகின்றன. இதற்குப் பின் நாயக்கர் ஆட்சி அவ்வளவு சிறப்புடன் அமையவில்லை எனலாம்.

நாயக்கருக்குப் பின்னர் தஞ்சையை ஆண்டவர்கள் சிவாஜி பரம்பரையினரான மராட்டிய மன்னர்கள் ஆவர். முதன் முதலில் எக்கோஜி என்பவன் 1676லே ஆட்சியைத் துவக்கினான். இவனுக்குப் பின் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னன் இரண்டாம் சரபோஜி ஆவான். இவன் காலத்தில் தஞ்சைமாநகரம் பல சிறப்புகளைப் பெற்றது எனலாம். இன்றும் இம்மன்னனுடைய புகழ் பரவும் வகையில் இவன் பெயரில் பல்வேறு நிறுவன அமைப்புக்கள் இருப்பது கண்கூடு.

மராட்டியர் ஆட்சிக்குப் பிறகு பிரிட்டிஷ் ஆட்சி தஞ்சையில் சுமார் 150 ஆண்டுகள் இருந்தது எனலாம். பிரிட்டிஷார் தஞ்சையை "சுபாக்கள்" என்ற அமைப்பில் ஆண்டு வந்தனர். 1860ல் தஞ்சையில் கலக்டெரின் ஆட்சி அமைக்கப்பட்டது.[2] 1910ல் தஞ்சையில் வட்ட அலுவலகம் அமைக்கப்பட்டது.[3] பிரிட்டிஷார் ஆட்சியிலேயே தஞ்சைக்குப் பல்வேறு நிறுவன அமைப்புக்கள் போன்றவை ஏற்படலாயின. ஒரு சில குறைகளும் இருந்தன. எனினும் நிறைவே அதிகம் எனலாம்.

இந்தியா சுதந்திரம் பெற்றபின் தஞ்சையிலும் பல்வேறு மாற்றங்கள் ஏற்பட்டு முன்னேற்றமடைந்து உள்ளது எனலாம். இன்று தஞ்சைமாவட்டம் பல்வேறு கோட்டங்களாகவும், வட்டங்களாகவும், பெருங்கிராமங்களாகவும், கிராமப் பஞ்சாயத்துக்களாகவும்

பிரிக்கப்பட்டு மிகவும் சிறப்பான நிலையில் இருந்து வருகிறது எனலாம்.

தஞ்சை மாவட்டம் முதலில் கிழக்குத் தஞ்சாவூர் அபிவிருத்தி மாவட்டம், மேற்கு தஞ்சாவூர் அபிவிருத்தி மாவட்டம் என இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவிலும் ஆறு ஆறு வட்டங்கள் வீதம் 12 வட்டங்கள் ஆகப் பிரிக்கப்பட்டிருந்தன. அவையாவன :

1. கிழக்குத் தஞ்சாவூர் அபிவிருத்தி மாவட்டம் :-

1. மன்னார்குடி வட்டம்
2. திருத்தருப்பூண்டி வட்டம்
3. மாயூரம் வட்டம்
4. சீர்காழி வட்டம்
5. நாகப்பட்டினம் வட்டம்
6. நன்னிலம் வட்டம்

2. மேற்குத் தஞ்சாவூர் அபிவிருத்தி மாவட்டம் :-

1. தஞ்சாவூர் வட்டம்
2. ஒரத்தநாடு வட்டம்
3. பட்டுக்கோட்டை வட்டம்
4. அறந்தாங்கி வட்டம்
5. கும்பகோணம் வட்டம்
6. பாபநாசம் வட்டம்

இவ்வாறு இருந்த தஞ்சை மாவட்டம் இன்று மேலும் 11 சிறு வட்டங்கள் சேர்க்கப்பட்டு மொத்தம் 20 வட்டங்களுடன் சிறப்புடன் திகழ்கிறது எனலாம்.

வட்டங்கள் வருமாறு :-

| | |
|---|---|
| 1. பேராவூரணி | 11. திருவாரூர் |
| 2. நீடா மங்கலம் | 12. நாகப்பட்டினம் |

| | | | |
|---|---|---|---|
| 3. | மன்னார் குடி | 13. | நன்னிலம் |
| 4. | வேதாரண்யம் | 14. | பாபநாசம் |
| 5. | திருத்துறைப் பூண்டி | 15. | வலங்கைமான் |
| 6. | பட்டுக்கோட்டை | 16. | கும்ப கோணம் |
| 7. | ஒரத்த நாடு | 17. | திருவிடை மருதூர் |
| 8. | தஞ்சாவூர் | 18. | மயிலாடுதுறை |
| 9. | திருவையாறு | 19. | பொறையாறு |
| 10. | குடவாசல் | 20. | சீர்காழி |

இவ்வாறு இன்றைய தஞ்சை மாவட்டம் சுமார் 3000 பெருங் கிராமங்கள் கொண்டும், சுமார் 6000 சிறு கிராமங்கள் கொண்டும் 20 வட்டங்களுடன் சிறந்து விளங்குகிறது.

## எல்லையும் இயற்கை அமைப்பும்

இம்மாவட்டம் வடக்கில் கொள்ளிடம் ஆற்றையும், மேற்கில் திருச்சி மாவட்டத்தையும், தெற்கில் புதுக்கோட்டை மாவட்டத்தையும், கிழக்கில் வங்காள விரிகுடாவையும் எல்லையாகக் கொண்டது.

இம்மாவட்டத்தின் இயற்கை அமைப்பு பச்சைபசேலெனக் காட்சி தரும் வயல்களும், தோப்புகளும், தோட்டங்களுமே ஆகும். இம்மாவட்டத்தில் வேதாரண்யம் வட்டத்தில் கோடியக் காட்டில் உள்ள காட்டினைத் தவிர வேறு அடர்ந்த காடுகள் இல்லை யெனலாம். மேலும் இம்மாவட்டத்தில் உயர்ந்த மலைகளும், குன்றுகளும் இல்லை. இம்மாவட்டம் முழுவதும் காவிரி ஆறும் அதன் கிளை நதிகளும் பாய்ந்து எல்லா இடங்களையும் வளமுள்ள பகுதிகளாக மாற்றியுள்ளது எனலாம். கொள்ளிடம், காவிரி, வெண்ணாறு, குடமுருட்டியாறு, அரிசிலாறு, பாமணியாறு, கோரையாறு, வீர சோழனாறு வடவாறு, திருமலைராயனாறு, ஆகிய ஆறுகள் பாய்ந்து தஞ்சை மாவட்டம் முழுவதும் செழுமைபடுத்துகிறது. காவிரியின் குறுக்கே கரிகாலனால் கட்டப்பெற்ற கல்லணை நீரும் கால்வாய்கள் மூலம் பல இடங்களுக்கும் பாய்ந்து வளமூட்டுகிறது.

பல ஆறுகள் பாய்ந்து வளமூட்டுவதால் தென்னகத்தின் நெற் களஞ்சியம் எனப் போற்றப்படும் அளவிற்குத் தஞ்சை மாவட்டம் சிறப்பான நிலையில் உள்ளது. நெல் மிகுதியாக பயிர் செய்யப்படினும், ஓரளவிற்கு ராகி, கம்பு, சோளம், வரகு, மக்காச் சோளம், பயறு, உளுந்து, கொள்ளு, நிலக்கடலை, வாழை, தென்னை, மிளகாய், எள், கரும்பு போன்ற பயிர்களும் விளைவிக்கப் படுகின்றன

## சமுதாய நிலை

தஞ்சைமாவட்டம் எல்லா நிலைகளிலும் சிறப்புப் பெற்றது என லாம். கடந்தகால அரசியல் அமைப்பிலும், இன்றைய அரசியல் அமைப்பிலும் சிறப்புற்று இருப்பது போலவே ஏனைய அமைப்புக் களிலும் சிறப்பான நிலையிலேயே இருந்து வருகிறது எனலாம். அன்றும் இன்றும் பலதரப்பட்ட மக்கள் இனவேறுபாடின்றி, மொழி வேறுபாடின்றி கலந்து வாழ்கின்றனர். தொழில் வளத்திலும், கல்வி நிலையிலும், ஏனைய பழக்க வழக்கங்களிலும் தஞ்சைமாவட்டத் தினர் மேம்பட்ட நிலையிலேயே இருந்து வருகின்றனர் என்பதை நன்கு அறிய முடிகிறது.

**மக்கள் நிலை :**

தஞ்சை மாவட்டத்தில் பலதரப்பட்ட மக்களும் கலந்து வசிக்கின்றனர். இந்துக்கள், முஸ்லிம்கள், கிருத்துவர்கள் ஆகிய எல்லா இனத்தவர்களும் பேதமின்றி வாழ்வதைக் காண முடிகிறது. இந்துக்களிலும் பல்வேறு பிரிவினர் சிறப்பான நிலையில் இருந்த வருவதைக் காணமுடிகிறது. தஞ்சையை மராட்டியர்கள் ஆண்டதன் நினைவே போல் சுமார் 20,000 மராட்டியர்கள் தஞ்சை மாவட்டத்தில் வாழ்கின்றனர். இவர்களும் பெரும்பாலும் தஞ்சையிலும், குடந்தையிலுமே காணப்படுகின்றனர். அடுத்து கள்ளர்களும், வாண்டையார் என்ற இனத்தவர்களும் மிகுதியாக வசிக் கின்றனர். கள்ளர்களின் பல்வேறு பட்டப் பெயர்கள் இன்று அவர் கள் வசிக்கும் பெரும்பான்மைப் பகுதியான ஒரத்தநாடு, நீடாமங்கலம், மன்னார்குடி போன்ற வட்டங்களில் ஊர்ப்பெயர்களாக விளங்கு

வதைக் காணமுடிகிறது. கள்ளர்களைப் போலவே தஞ்சை மாவட்டத்தில் இன்றும் பெரும் மேட்டுக் குடியினராக வாழ்பவர்கள் வாண்டையார்கள் ஆவர். இவர்கள் மயிலாடுதுறை, பூண்டி போன்ற பகுதிகளில் அதிகமாக வசிப்பதைக் காணமுடிகிறது. மற்றபடி இந்துக்களில் எல்லா இனத்தவர்களும் எல்லா வட்டங்களிம் கலந்து வாழ்கின்றனர் எனினும் நாகை, நன்னிலம், வேதாரண்யம் போன்ற பகுதிகளில் முஸ்லீம் இனத்தவர்களும், ஒரோ வழி சிற்சில இடங்களில் கிருத்துவர்களும் வாழ்ந்து வருவதைக் காணமுடிகிறது.

**சமய நிலை :**

மக்கள் வாழ்க்கை நிலைக்கு ஏற்பவே தஞ்சை மாவட்டத்தில் மதங்களும் வளர்ந்து வந்துள்ளன எனலாம். தஞ்சை மாவட்டத்தின் பெரும்பான்மை மதங்களாக சைவம், வைணவம், கிருத்துவம், இஸ்லாம் என்னும் நான்கு மதங்களும், ஒரோவழி சமண, பௌத்த மதங்களும், வழங்கி வருவதைக் காண முடிகிறது. திருப்பனந்தாள், தருமபுரம், திருவாவடுதுறை, சூரியனார் கோவில் ஆகிய ஊர்களில் நிறுவப்பட்டு வளர்ந்து வரும் சைவ மடங்களும், இம்மடங்களின் சார்பில் இருக்கும் திருக்கோயில்களும் சைவ சமயத்தின் வளர்ச்சி நிலையை நன்கு காட்டுவன. மேலும் மூவர் பாடிய தேவாரத் திருத்தலங்களில் பெரும்பான்மையானவை தஞ்சை மாவட்டத்தில் இருப்பதும், சைவ அடியார்கள் பலர் தோன்றியதும் தஞ்சை மாவட்டத்திலேயே என்பதும் தஞ்சை மாவட்டத்தில் சைவ சமயம் எவ்வாறு வேரூன்றிஇருந்தது—இருக்கிறது என்பதை தெளிவாக காட்டுகிறது எனலாம். சைவ சமயத்தைப் போலவே ஆழ்வார் களின் மங்களாசாசனம் பெற்ற திருக்கோயில்கள் பலவும் — நாச்சி யார் கோயில், குடந்தை சாரங்கபாணி, சக்கரபாணி கோயில், திருச் சேறை, திருக்கண்ண மங்கை, தில்லைவிளாகம், மன்னார்குடி இராஜ கோபாலசுவாமி கோயில், திருநாங்கூர் கோவில் ஆகியன வைணவசமயம் தஞ்சை மாவட்டத்தில் சைவ சமயத்திற்கு அடுத்த நிலையில் பரவி இருப்பதைக் காட்டுகிறது.

பௌத்தமதமும், சமணமதமும் ஒரு காலத்தில் தஞ்சைமா வட்டத்தில் சிறப்புற்று இருந்தமையை வரலாற்றின் மூலம் அறிய

முடிகிறது. எனினும் ஓரோவிடங்களில் இம் மதத்தினர் இருந்து வருவதைக் காண முடிகிறது. இன்னும் மன்னார்குடி கரந்தை, குடந்தை, நன்னிலம், போன்ற வட்டங்களில் சமண சமயத்தினார் ஓரோவழிக் காணப்படுவதைக் காணலாம்.

தஞ்சைமாவட்டதில் இன்றைய நிலையில் சைவ, வைணவ சமயத்திற்கு அடுத்த நிலையில் இருக்கும் இரு பெரும் சமயங்கள் இஸ்லாமும் கிருத்துவமும் எனலாம். நாகூர் ஆண்டவர் கோயிலும் வேளாங்கன்னி மாதாக் கோயிலும் இவ்விரு சமயத்தவர்களின் புனித இடமாகத் தஞ்சை மாவட்டத்தில் திகழ்வதைக் காணமுடிகிறது. இன்றும் வேதாரண்யம், பாபநாசம், அதிராம்பட்டினம், மயிலாடு துறை போன்ற வட்டங்களில் இஸ்லாமியர்கள் வசிப்பதைக் காண லாம். இவர்கள் பெரும்பாலும் கடல் கடந்து சென்று வாணிபம் செய்வதையே தம் தொழிலாய் கொண்டுள்ளனர்.

## தொழில்நிலை :

தொழில் நிலையில் தஞ்சைமாவட்டம், பெரும்புகழை அடைந் திருக்கிறது எனலாம். ஒவ்வொரு வட்டத்திற்கும் உரிய சிறப்புத் தொழிலாக ஏதாவது ஒன்று இருப்பது தஞ்சை மாவட்டத்தின் சிறப்புச் செய்தியாகும். விவசாயமே சிறப்புத் தொழிலாக தஞ்சை மாவட்டம் முழுவதிற்கும் காணப்படினும் பல்வேறு விதமான கைத் தொழில்கள் தஞ்சை மாவட்டத்தில் வளர்ந்து இருப்பதைக் காண முடிகிறது. வேதாரண்யம் பகுதிகளில் உப்புக்காய்ச்சி எடுப்பதும், மீன் பிடித்தலும் பெருந் தொழிலாக நடைபெறுகின்றன. குடந்தை, மயிலாடுதுறை போன்ற வட்டங்களில் உலோகப் பாத்திரங் கள் செய்வதும், நெசவும் பெருந்தொழிலாக இருப்பதைக் காண முடி கிறது. மயிலாடுதுறையும் குடந்தையும் நெசவுத் தொழிலில் சிறப்புற்று இருப்பதை திருபுவனம் புடவைகள், கூறைநாட்டுப் புடவைகள் என்று வழக்கில் வழங்கி வருவதன்மூலமே நன்கு அறிய லாம். நாகை வெளிநாட்டார் தொடர்புடைய துறைமுகப் பட்டினமாக இருப்பதால் அங்கு அச்சூழ்நிலைக்கேற்ப பல விதமான தொழில்களும் நடைபெறுவதைக் காணலாம். மேலும் பல்வேறு வித மான தொழிலால் தஞ்சைமாவட்டம் சிறப்படைந்துள்ளது எனலாம்.

தஞ்சைத் தலையாட்டி பொம்மையும், தஞ்சைத் தட்டும் தஞ்சையை நினைத்தாலே அனைவர் நெஞ்சிலும் நிறைந்து நிற்பன.

**கல்வி நிலை :**

எல்லா நிலையிலும் மேம்பட்டு இருப்பது போலவே கல்வி நிலையிலும் தஞ்சைமாவட்டம் சிறந்து இருக்கிறது எனலாம். தஞ்சையில் உள்ள மராட்டிய பள்ளி, வேதாரண்யத்தில் உள்ள கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம், குடந்தை அரசினர் கல்லூரி, மயிலாடுதுறை மன்னம்பந்தல் கல்லூரி, அதிராம்பட்டினம் காதர் முகையதீன் கல்லூரி, பனசை செந்தமிழ்க் கல்லூரி, கரந்தை புலவர் கல்லூரி, திருவையாறு அரசர்கல்லூரி, தருமை தமிழ்க் கல்லூரி, பூண்டி புஷ்பம் கல்லூரி, தஞ்சை சரபோஜி கல்லூரி, மகளிர் தொழிற்கல்லூரி, ஒரத்தநாடு ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, தஞ்சை மருந்துவக் கல்லூரி, வலிவலம் தொழிற்கல்லூரி, எல்லாவற்றுற்கும் மேலாக தஞ்சையில் சென்ற ஆண்டு நிறுவப்பட்டத் தமிழ்ப் பல்கலைக் கழகம் ஆகியன வும், இம்மாவட்டத்தில் தோன்றிய பல்வேறு சான்றோர் வரலாறு ஆகி யனவும் இம் மாவட்டக் கல்வி நிலையை புலப்படுத்தும்.

# வட்டங்கள்

## 1. பேராவூரணி

இவ்வட்டம் மிகச் சமீப காலத்திலேயே தனியொரு வட்டமாகப் பிரிக்கப்பட்டது. இவ்வட்டம் பட்டுக்கோட்டை வட்டத்திற்கும் அறந்தாங்கிக்கும் இடையே உள்ளது. எழில் மிகுந்த வட்டம் எனலாம். இவ்வட்டத்தில் உள்ள மனோரா மிகவும் சிறப்பு வாய்ந்தது. தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னனால் கட்டப்பெற்ற மனோரம்மியமான ஒரு கோட்டையே மனோரா எனப்படும். இது 1814ல் நெப்போலியனைத் தோற்கடித்து ஆங்கிலேயர் வெற்றி அடைந்ததற்கு நினைவுச் சின்னமாகக் கட்டப்பெற்ற வெற்றிக் கோபுரம் ஆகும்.[4] சென்னை செயிண்ட் ஜார்ஜ் கோட்டை போன்ற அமைப்பினை உடையது. இவ்வட்டத்தின் அருகே கடற்கரை இருப்பதாலும், காவிரி பாய்வதாலும் எங்கும் தென்னந்தோப்புகள் அதிகமாகக் காணப்படுகின்றன.

பெயர்க்காரணம்: இவ்வூரின் பெயர்க்காரணம் பற்றி உறுதியாக அறிய முடியவில்லை. பெரும் ஊற்று அல்லது ஊரும் கிணறு—ஊரணி இருந்ததால் ஏற்பட்ட பெயரோ எனத் தோன்றுகிறது. இல்லை பேராவூர் என்று இருந்து பின்னர் பேராவூரணி ஆயிற்றா எனத் தெரியவில்லை. எனினும் இவ்வட்டத்தின் நீர்வளம் காண்கையில், பெரியஊரணி இருந்தமையால் பெற்ற பெயராகவே தோன்றுகிறது.

---

3. தஞ்சாவூர் மாவட்டம், ப. 327

இவ்வட்டம் மொத்தம் 85 பெருங்கிராமங்களைக் கொண்டது. இவ்வட்டத்தில் முக்கியமாகப் பார்க்க வேண்டியது "மனோரா" நினைவுச் சின்னம்.

## 2. நீடாமங்கலம்

இவ்வட்டத்தின் மொத்த பரப்பளவு சுமார் 55,401,79 ஏக்கரா ஆகும். மொத்த மக்கள் தொகை சுமார் 1,07,678 ஆகும். இவ்வட்டம் தற்போது மூன்று பிர்க்காக்களாக (சரகம்) பிரிக்கப் பட்டுள்ளது. அவை 1. நீடாமங்கலம் 2. கூத்தானல்லூர் 3. வடபாதி மங்கலம் என்பனவாம். நீடாமங்கலத்தைச் சுற்றி பாமணியாறு, கோரையாறு, வெண்ணாறு, வெள்ளாறு என்னும் ஆறுகள் பாய்ந்து பாசன வசதிக்குப் பெரிதும் துணை செய்கின்றன. இவ்வட்டத்தில் உள்ள "திரு ஆரூரான் சர்க்கரை ஆலை" (வட பாதி மங்கலத்தில் உள்ளது) இவ்வட்டத்தில் உள்ள ஒரு சிறப் பம்சமாகும்.

பெயர்க்காரணம் : 1. நீராட்டு மங்கலம் என்பதே இவ்வூரின் பழைய பெயர் என்ப. இவ்வூரை அடுத்து "கோயில்வெண்ணி" என்றழைக்கப்படும் பெருங்கிராமம் உள்ளது. இவ்வூரே சங்க இலக்கி யங்களில் கூறப்படும் வெண்ணிப் பறந்தலை" என்னும் புகழ் பெற்ற ஊராகும். இவ் வூரே இளமையில் தன் பகைவர்களை கரிகாற் சோழன் போரிட்டு வென்ற இடமாகும். இன்று போர் நடந்த இடம் மாபெரும் திடலாக காட்சி அளிக்கிறது. இக்கோயில் வெண்ணியில்—வெண்ணிப் பறந்தலையில் போர் முடித்த கரிகாலன் அருகில் இருந்த நீடாமங்கலத்தில் வெற்றிக்குக் காரணமாய் இருந்த தன் வாளுக்கு—வாள்மங்கலம்—அதாவது நீராட்டுமங்கலம் செய் வித்தமையாலேயே இவ்வூருக்கு நீராட்டுமங்கலம் என்ற பெயர் வந்தது என்றும் அதுவே நாளடைவில் நீடாமங்கலம் ஆயிற்று என்றும் கூறுப.[5] 2. இவ்வூரின் வேறு பெயர் யமுனாம்பாள்புரம் என்பதாகும். ராஜ பிரதாப சிங் என்பவனால் அவன் மனைவியருள்.

5. தகவல் கூறியவர் : திரு. கோவிந்தராசனுர், தலைமை யாசிரியர், நடுநிலைப்பள்ளி, நீடாமங்கலம்.

ஒருத்தியான யமுனாம்பாள் என்பவளுக்காக இவ்வூரில் அரண்மனையும், சத்திரமும் கட்டப்பெற்றமையின், அம்மாதரசியின் பெயரால் யமுனாம்பாள்புரம் என அழைக்கப் பெற்றது என்ப[6] கி.பி. 1761ல் ராஜ பிரதாப சிங்கால் கட்டப்பட்டதாகக் கூறப்படும் யமுனாம்பாள் சத்திரம் இன்றும் இவ்வூரில் தனிச்சிறப்புடன் விளங்குகிறது[7] இவ்வம்மையார் பெயரால் ஒரு கோயிலும் உள்ளது. இக்கோயில் இவ்வம்மையாரை அடக்கம் செய்யப்பட்ட இடம் எனவும் இவ்வூரார் சிலர் கூறுகின்றனர். இச்சத்திரத்தில் சில கண்கவர் ஓவியங்களும், அழகிய சிற்பங்களும் காணப்படுகின்றன. இன்று இவ்வூர் இரு பகுதியாக, யமுனாம்பாள்புரம் என்றழைக்கப்பட்ட பகுதி பழைய நீடாமங்கலம் எனவும், ஏனைய பகுதி நீடாமங்கலம் எனவும் அழைக்கப்படுகிறது.

இவ்வட்டத்தின் மொத்த பெருங்கிராமங்கள் 85. இவ்வட்டத்தில் முக்கியமாகப் பார்க்க வேண்டிய இடங்கள் வெண்ணிப் பறந்தலை, யமுனாம்பாள் சத்திரம், யமுனாம்பாள் கோயில் ஆகியன ஆகும்.

## 3. மன்னார்குடி

இவ்வட்டம் காவிரியின் கழிமுகப் பகுதியில் இருப்பதால் மிகவும் செழிப்பு வாய்ந்த பகுதியாக விளங்குகிறது. பவானி ஆற்றின் கரையில் உள்ளது. இவ்வட்டத்தின் பரப்பு 750 சதுர மைல்கள் ஆகும். மக்கள் தொகை சுமார் 5 லட்சம் எனலாம்.

பெயர்க்காரணம்: இவ்வூர் ராஜ மன்னார்குடி என்றும் வழங்கப் பெறும். சிதம்பரத்திற்கு அருகில் உள்ள காட்டு மன்னார்குடியில் இருந்து வேறுபடுத்திக் காட்டுவதன் பொருட்டு இவ்வூர் ராஜ மன்னார்குடி என அழைக்கப்படுகிறது. இது சோழர் காலத்தில் சிறப்புற்று இருந்தமையினாலும், முதற் குலோத்துங்க சோழனால் இவ்வூரின் கோயிலின் சில பகுதிகள் கட்டப்பட்டமையினாலும்

---

6. தகவல் கூறியவர். திரு. கோவிந்தராசனுர், நீடாமங்கலம்.
7. தஞ்சாவூர் மாவட்டம் ப. 198

"ராஜ" என்ற அடைமொழி ஊருடன் சேர்த்து வழங்கப்படுகிறது என்ப.[8] மேலும் இந்நகர் ஹொய்சளர்களின் தலைநகராக ஒரு காலத்தில் விளங்கியது என்ப. கல்வெட்டில் இராஜாதி ராஜ சதுர் வேதி மங்கலம் என்ற பெயரினைப் பெற்றுள்ளது. தட்சிண துவாரகை, சண்பகாரணியம் என்பன புராணப் பெயர்கள்.

இவ்வூரில் சோழர்களால் கட்டப்பெற்ற மூன்று கோயில்கள் உள்ளன. ராஜ கோபாலசாமி கோயில் எனப்படும் வைணவக் கோயில் சிறப்புடையது. இக்கோயில் முன்பு சமணக் கோயிலாக இருந்தது என்ப.[9] இன்றும் இவ்வூரில் சமணர்கள் அதிகம் வசிக் கின்றனர். சமணக் கோயில் ஒன்றும் இங்குள்ளது.

இவ்வட்டத்தின் மொத்த கிராமங்கள் 136.

## 4. வேதாரண்யம்

வேதாரணியம் என்றும் அழைக்கப்படும். கடற்கரைச் சார்ந்த அழகிய ஊர். தஞ்சை மாவட்டத்தின் தென் கோடியில் உள்ளது. இவ்வூரின் அருகே உள்ள கோடியக் கரையில் இருந்து இலங்கை மாநகர் கடல்வழியாக சுமார் 22 மைல் தூரமே உள்ளது. மக்கள் தொகை சுமார் 25, 000 எனலாம். கடற்கரைச் சார்ந்த பகுதியாதலின் இங்கே வயல் வெளிகளைவிட, உப்பளங்களும், சவுக்குத் தோப்பு களும், புகையிலைத் தோட்டங்களுமே அதிகம் காணப்படுகின்றன. தஞ்சை மாவட்டத்தில் நெய்தல் நிலமாக உள்ள ஒருசில பகுதிகளில் இதுவும் ஒன்று.

பெயர்க்காரணம்: 1. வேத காலத்திற்கு முன்பு "சத்தகிரி" எனப் பெயர் பெற்றிருந்தது என்ப[10] சத்திகிரீஸ்வரர், சத்திநாயகி, சத்தியநதிஎன இறைவன், இறைவி, தீர்த்தம் ஆகிய மூன்றும் உரைக்கப் பட்டன. மூர்த்தி, தீர்த்தம் இரண்டிற்கும் ஏற்பவே தலமும் "சத்தகிரி" என வழங்கப்பட்டது. 2. வேதங்கள் பூஜை செய்த

---

8. தஞ்சாவூர் மாவட்டம் ,ப. 195
9. மேற்படி நூல், ப. 196
10. தகவல் கூறியவர். திரு. மாசிலாமணி தேசிகர், வேதாரண்யம்.

மையான் வேதவனம், வேதாரண்யம் (வேதம் + வனம், வேதம் + ஆரண்யம்) எனப் பெயர் பெற்றதென்ப[11] திருமறைக்காடு எனத் தேவாரப் பாடல்கள் குறிப்பிடும்.[12]

சோழமன்னர்கள் இங்கிருந்தே ஈழம் சென்று படையெடுத்தனர். அதன் காரணமாகவே இவ்வூர் வீதிகளின் பெயரும் சோழ மன்னர்கள் பெயர் தாங்கி நின்றன என்பர்.[13] தசரத மகாராஜா வீதி, சருகாலச் சோழன் வீதி என்பன. ஆயினும் இன்று இப்பெயர்கள் வழக்கில் இல்லை. ராமன் சேது சென்றதும் இவ்வழியேதான் என்று ஒரு மரபு வழிக்கதை வழங்குகிறது. அதற்கு ஆதாரமாக இவ்வூரில் இன்று வழக்கில் கூறப்படும் ''சேது ரஸ்தா'' (வீதிச்பெயர்) என்பதையும் இவ்வூர் அருகே உள்ள ''இராமர் பாதம்'' (கோடிக் கரைக்கு செல்லும் வழியில் உள்ளது) என்னும் இடத்தையும் காட்டுப. இவ்வூருக்கும் ஈழத்திற்கும் உள்ள தொடர்பை ஆதாரத்துடன் நிருபிப்பது போல் இன்றும் இவ்வூரில் யாழ்ப்பாணத்தவர் வசிப்பதைக் காண முடிகிறது. மேலும் இவ்வூர் கோயிலையே யாழ்ப்பாணத்தவர் கட்டியதாகவும் இவ்வூரார் உரைக்கின்றனர். இக்கோயிலுக்குத் தர்மகர்த்தவாக — மடாதிபதியாக விளங்குபவர்கள் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்தவர்களாக இருப்பது கண்கூடு. இவ்வட்டத்தைச் சுற்றியுள்ள சில கிராமங்களின் பெயர்கள் வரலாற்றுப் பெயர்களாகக் காணப்படுகிறது. இதற்குக் கூறும் காரணங்களும் வரலாற்றுத் தொடர்புடையவை. இது பற்றிய விரிவான விளக்கங்களைப் பின் வரும் ஆய்வுப் பகுதியில் காண்குவமாக.

வேதாரண்யம் கோயில் மிகச் சிறப்பானது. அகத்தியருக்குத் திருமணக் கோலம் காட்டிய தலமாகும். இறைவன் மணவாள நாதர்; இறைவி வீணாவாத விதூஷினி. (வேதநாயகி) இங்கு துர்க்கையம்மன் சிறப்புடையது. சப்த விடங்கத் தலங்களில் ஒன்று;

---

11. தகவல் கூறியவர். திரு, மாசிலாமணி தேசிகர் வேதாரண்யம்
12. மூவர் தேவாரம் தலமுறை, குமரகுருபரன்பிள்ளை, (பதி), ப. 1043
13. தகவல் கூறியவர், திரு. மாசிலாமணி தேசிகர், வேதாரண்யம்

புவனி விடாங்சர்; ஹம்ச நடனம் இங்குள்ள மரகதலிங்கம் சிறப்புடையது. இக்கோயிலை வழிபட்ட வேதங்கள் கதவடைத்துச் செல்ல, சம்பந்தர் அப்பர் ஆகியோர் வந்தே திறந்தனர் என தல புராண வரலாறு கூறும். பாடல் பெற்ற தலம்

இக்கோயிலில் சோழர் வரலாற்றை அறிய உதவும் 89 கல்வெட்டுக்கள் உள்ளன. இவ்வூரைக் கல்வெட்டுக்கள், "உம்பள நாட்டுக் குன்னூர் நாட்டுத் திருமறைக்காடு" என இயம்பும்.

இன்று இவ்வூர் சிறந்த நிலையில் உள்ளது. 1930 ல் உப்பச் சத்தியாகிரகம் நடைபெற்றது.[14] இவ்வூரின் வரலாற்றுச் சிறப்பாகும். அதுபோது எழுப்பப்பெற்ற சத்தியாகிரகஸ்தூபி" உப்பளத்தில் உள்ளது. 'கஸ்தூரிபா கன்யாகுருகுலம்" என்னும் பெயரில் சிறந்ததொரு பெண்கள் பள்ளி உள்ளது. இப்பள்ளியை ஆதரவற்ற பெண்கள் புகலிடம் என்று கூறலாம். சத்தியாகிரக தியாகி சர்தார் வேதரத்னம் பிள்ளையால் தொடங்கப் பெற்ற (1946) இப்பள்ளி இன்று அவர் வழியினரால் சிறப்புற நடத்தப் பெறுகிறது.

நெய்தல் நிலப்பகுதியாதலால் பெரிய உப்பளங்களால் உப்பு எடுக்கப்படுகிறது. மேட்டூர் கெமிக்கல் கம்பெனியாரும், விம்கோ கம்பெனியாரும் இவ்வூரின் தொழில் வளத்தைப் பெருக்குகின்றனர் எனலாம். மேட்டூர் கெமிக்கல் கம்பெனியார் வெள்ளை உப்பு(Refined Salt) செய்வதனை இங்கு மேற்கொண்டுள்ளனர். இவ்வூரின் அருகே உள்ள கோடியக்கரை கடலில் 10 கி.மீ. தூரத்தில் 'கெரசின்" எடுக்கப்படுகிறது. இங்குள்ளப் பறவைகள் சரணாலயம் இவ்வட்டத்திற்கு உள்ள தனிச் சிறப்பு. இங்குள்ள கோடியக்காடும் அவ்வாறேயாம்.

"வழிநடைச் சிந்து" எனக் கூறப்படும் நாட்டுப்பாடல் ஒன்று,

"கோடிக்கும் குழகைக்கும் காதம்
குழகைக்கும் வேதைக்கும் காதம்

---

14. தஞ்சாவூர் மாவட்டம், ப. 210

வேதைக்கும் கள்ளிக்கும் காதம்
கள்ளிக்கும் பூண்டிக்கும் காதம்
பூண்டிக்கும் நாகைக்கும் காதம்
நாகைக்கும் காரைக்கும் காதம்"[15]

என இப்படியே இதன் அருகில் உள்ள ஊர்களுக்கும் இதற்கும் இடையே உள்ள தூரத்தை எடுத்தியம்புகிறது.

இன்று இவ்வட்டம் அறுபத்தி ஆறு பெருங்கிராமங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. அவற்றில் பல ஊர்கள் வரலாற்றுக் சிறப்புடையன. தாயுமான சுவாமிகளும், பரஞ்சோதி முனிவரும் பிறந்த ஊர். (திருவிளையாடற் புராண ஆசிரியர்)

பரஞ்சோதி முனிவரால் இயற்றப் பெற்ற "வேதாரண்ய தல புராணச் சுருக்கமும்"[16] (100 பாடல் உடையது என திரு. மாசிலா மணி தேசிகர் என்னும் இவ்வூர் பெரியவர் கூறினார். நூல் கிடைக்கவில்லை.) "அகோர தேவர் தலபுராணமும்[17] (4000 பாடல்களை உடையது; இந்நூலும் கிடைக்கவில்லை), வடமொழி யில் இயற்றப்பெற்ற "வேதாரண்ய மகாமியமும்,[18] "மரசை வெண்பா"[19], மரசை யந்தாதி[20] என்பனவும் தேவாரத் திருப்புகழ் பாடல்களும் இவ்வூர் வரலாற்றை நன்கு விரித்துரைக்கும். திரு மறைக்காடு—என்பதன் வடமொழி ஆக்கமே வேதாரண்யம் என்பது திருமரைக்காடு (மான்கள் சூழப்பெற்றக் காடு; இன்றும் மான்கள் நிறைய உள்ளன) எனக் கொள்ளவும் இடமுண்டு.

இவ்வட்டத்தின் மொத்த பெருங்கிராமங்கள் 66. இவ்வட்டத் தின் சிறப்பு கோடியக்காடு, அங்கே உள்ள பறவைகள் சரணாலயம், ஆடிமாதம் கடலாடல் ஆகியன ஆகும்.

## 5. திருத்துறைப் பூண்டி

திருத்தருப் பூண்டி என்ற பெயரே பேச்சு வழக்கில் திருத்துறைப் பூண்டி என மருவியுள்ளது. இவ்வட்டத்தின் பரப்பளவு சுமார்

---

16-20. தகவல் கூறியவர். திரு. மாசிலாமணி தேசிகர், வேதா ரண்யம் இந்நூல்கள் ஆய்விற்கு கிடைக்கவில்லை.

1, 280 சதுர கிலோ மீட்டர் ஆகும். மக்கள் தொகை சுமார் 4 லட்சம் எனலாம். வெண்ணாற்றுக் கால்வாய், மரக்கலக் கோதை, ஆறு, முள்ளியாறு போன்ற சில ஆறுகள் ஓடினாலும் இப்பகுதி வறண்ட பகுயாகவே இருக்கிறது. புகையிலைத் தோட்டங்களும், சவுக்குத் தோப்புக்களுமே நிறைந்துள்ளன. ஒரு சில பகுதிகளில் கரும்பும் பயிரிடப்பட்டுள்ளது சுமார் 210 ச. கி மீட்டர் அளவிற்கு காடுகள் உள்ளன.[21]

1. திருத்தருப் பூண்டி என்னும் பெயரே திருத்துறைப் பூண்டி எனப் பேச்சு வழக்கில் மாறிற்று என்ப வில்வாரண்யம் என்பது வடமொழிப் பெயர் திருத்தரு என்பது வில்வ மரத்தைக் குறிக்கும்.[22] 2. திருப்பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் கடையும் போது, சுஷேணன், வாலி என்னும் இருவர் கடையும் வேக மிகுதியால் அமுதத் துளிகள் பூமியிலும், மலைகளிலும் சிதறின எனவும், ஒவ்வொரு துளியும் ஒரு மரமாயிற்று எனவும் அவற்றுள் வில்வமரம் இறைவனுக்குகந்தது எனவே சிவபெருமான் வில்வ மரத்தில் தங்கினார் எனவும், திருத்தருவாகிய அவ்வில்வமரங்கள் நிறைந்தவூர் வில்வாரண்யம் – திருத்தருப் பூண்டி ஆயிற்று எனவும் கூறுப.[23] 3. நவதீர்த்தபுரம் என்பதொரு பெயர். பிரும்மாவிற்கும் கலைமகளுக்கும் தம் தொழில் காரணமாக வேற்றுமை ஏற்பட்டது எனவும், அதுபோது அங்கு வந்த பிரகஸ்பதி பகவான் கலைமகளின் தொழிலே உயர்வுடையது எனக் கூற, வெட்கமடைந்த பிரும்மா இவ்விடம்வந்து நவதீர்த்தங்களை உருவாக்கி இறைவனை வழி பட்டு உய்ந்தமையால் நவதீர்த்தபுரம் என்னும் பெயர் பெற்றது என்ப.[24] 4. ஜல்லிகாரண்ணியம் என்பது மற்றுமொரு பெயர். ஜல்லிகை என்ற அரக்கப் பெண்ணின் கணவன் விருபாஷன் என்பவன் அந்தண இளைஞன் ஒருவனைக் கொன்று அவன் இரத்தத்தைப் பருகியமையால் உயிரிழக்கவே, உயிரிழந்த கணவனைப் பல தலங் களுக்கும் எடுத்துச் சென்று இறைவனிடம் உயிர்த் தருமாறு வேண்டி

---

21. தஞ்சாவூர் மாவட்டம், ப. 201
22-24. தகவல் கூறியவர். திரு. வை. பக்கிரிசாமி செட்டியார் தலைமையாசிரியர், உயர்நிலைப்பள்ளி,—ஆய்க்காரன் புலம்

இறுதியில் இங்கு வந்து இங்குள்ள இறைவனருளால் உயிர்பெற்று, அவள் நினைவாக ஜல்லிகாரண்யம் என்ற பெயர் பெற்றதாகவும் உரைப்ப.[25] 5. நவகிரகங்கள் பூசித்தமையால் நவக்கிரகபுரம் என்ற பெயரையும் பெற்றதென்ப.[26]

கல்வெட்டுகளில் இவ்வூர்ப் பெயர் "ராஜேந்திர சோழ வள நாட்டு வெண்டாழை வேளிர்க் கூற்றத்துத் திருத்தருப் பூண்டி" எனக் குறிக்கப் பெற்றுள்ளது. இவ்வூர்க் கோயிலில் "பஞ்ச முக வாத்தியம் என்னும் வரலாற்றுச் சிறப்புடைய தோற் கருவி உள்ளது.[27]

இவ்வூர்ப் பகுதி ஒரு காலத்தில் தீவுகளாக இருந்தது எனவும் பின் கடல் நிலப்பகுதியோடு ஒன்றி ஒரு மேட்டுப் பகுதியாக இணைந்து விட்டது எனவும் கூறுப.[28] இதற்காதாரமாக "மணியத் தீவு, ஓணான் தீவு, புலி பாய்ந்தான் தீவு, தாழையடித் தீவு" என்னும் ஊர்ப்பெயர்களைக் காட்டுப. பல்லவர் காலத்தில் இவ்வூர்த் துறைமுகமாக இருந்தது எனவும் கூறுப.[29]

இவ்வட்டத்தின் மொத்தப் பெருங்கிராமங்கள் 93.

## 6. பட்டுக்கோட்டை

இவ்வட்டம் 1910-ல் இருந்து தனியொரு வட்டமாக தொடங்கப் பெற்றுள்ளது. அறந்தாங்கி, பேராவூரணி, ஒரத்த நாடு ஆகிய மூன்று வட்டங்களும் இதிலிருந்து பிரிக்கப்பட்டவையே. இங்கு தென்னை மரங்கள் அதிகமாக காணப்படுகின்றன. இவ்வட்டத்தில் நீர்வளம் சற்றுக் குறைவாதலால் மக்கள் நெருக்கமும் அதிகம் இல்லை எனலாம். இவ்வட்டத்தில் கோட்டைகள் பல இடங்களில் காணப்படுகின்றன. ஊர்ப் பெயர்களில் கோட்டை என வருவதைப் பலவிடங்களில் காணமுடிகிறது. பல சான்றோர்கள் தோன்றிய

---

25.-27. தகவல் கூறியவர், திரு. வை. பக்கிரிசாமி செட்டியார், ஆய்க்காரன் புலம்.

28.-29. தஞ்சாவூர் மாவட்டம், ப. 201.

சிறப்பினை உடையது இவ்வட்டம். இவ்வூரைச் சுற்றிலும் புளிய மரங்களும், பலாமரங்களும் நிறைய உள்ளன.

பட்டுக்கோட்டை என்பதன் பெயர்க்காரணத்தை இரண்டு விதமாக உரைப்பர். 1. பட்டு மழவராயர் என்ற குறுநில மன்னர்கள் கட்டிய கோட்டைகள் பல இடங்களில் உள்ளதால் பட்டுக்கோட்டை என்ற பெயர் என்ப[30] 2. பழைய கோட்டை என்று இருந்ததே பேச்சு வழக்கில் மாற்றமடைந்து பட்டுக்கோட்டை எனப் பெயர் பெற்றது என்ப. முன்னைய பெயரே பொருத்தமுடையதாகக் தோன்றுகிறது.[31]

இன்று இவ்வூர் சிறப்பான முறையில் உள்ளது. அரசாங்கத்தாரால் நடத்தப்பெறும் தீப்பெட்டி தொழிற்சாலையும், தென்னை ஆராய்ச்சி நிலையமும் (1958), அரசாங்க எள்விதைப் பண்ணையும் (1958), வேளாண்மை ஆராய்ச்சிப் பண்ணையும் (1935) கிராமிய விரிவுப் பணிக்கானப் பயிற்சி நிலையமும் (1954) இன்னும் வேறு பல நிறுவனங்களும், கல்வி நிறுவனங்களும் இவ்வூரின் தனிச் சிறப்பை விளக்குகின்றன.[32]

இவ்வட்டத்தின் மொத்தப் பெருங்கிராமங்கள் 166.

## 7. ஒரத்த நாடு

1954 முதல் இவ்வூர் தனித்தாலுக்காவாக அமைக்கப்பட்டது. இவ்வட்டம் பட்டுக்கோட்டையில் இருந்து பிரிக்கப் பெற்றதே. இவ்வட்டம் சிறியது. இங்கு நீர்வளம் குறைவு எனலாம். இவ் வட்டம் சிறுவட்டம் எனினும் சிறப்பாக அமையப்பெற்றது. இங்கு இன்று ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி ஒன்று நடைபெற்று வருகிறது. இவ்வட்டத்தில் அடங்கியுள்ள ஊர்களின் பெயர்கள் பெரும்பாலானவை சாதிப் பெயர் — அல்லது சாதிப்பெயரின் திரிபாகவே உள்ளது எனலாம். (உறந்தைராயன் காடு, தெலுங்கன்

30.-31. தஞ்சாவூர் மாவட்டம் ப. 320
32. மேற்படி நூல் பக், 312-318

(குடிகாடு), கள்ளர் என்ற வகுப்பினரே அதிகமாக உள்ளனர். அம்மன் பெயரால் தெருக்களும், சாதிப்பெயரால் தெருக்களும் ஊர்களும் இருப்பது இவ்வட்டத்தின் தனிச் சிறப்பாகும்.

1. ஒருத்தி நாடு என்னும் பெயரே காலப் போக்கில், பேச்சு வழக்கில் மாறி ஒரத்த நாடு எனப்பட்டது என்ப.[33] 2. இவ்வூரின் முதல் பெயர் — முன்னைய பெயர் முத்தம்மாள்புரம் என்பதாகும். சரபோஜி மன்னன் தன் மனைவியருள் ஒருத்தியான முத்தம்மாள் பெயரில் அன்ன சத்திரம் கட்டி, அமுது படைத்து வந்ததால் ஏற்பட்ட பெயர்.[34] இன்று இப்பெயருள்ள பகுதி இவ்வட்டத்தின் ஒரு பகுதியாக இருக்கிறது. இவ் ஒருத்தியின் நாடே ஒரத்தநாடு என்றாயிற்று என்ப[35].

இன்று இவ்வூரில் கால்நடைப் பண்ணை ஒன்று சிறப்பாக இயங்கிவருகிறது. வளர்ந்து வரும் வட்டங்களில் இதுவும் ஒன்று. இவ்வட்டத்தின் மொத்தப் பெருங் கிராமங்கள் 99.

## 8. தஞ்சாவூர்

தஞ்சாவூர் மாவட்டத்தின் தலைநகராக விளங்கும் இவ்வூர் மிகவும் புகழ் பெற்ற, சரித்திரப் பழமை வாய்ந்ததாகும், சோழர் வரலாற்றில் இவ்வூர் தனியானதொரு சிறப்பிடத்தைப் பெற்றுள்ளது எனலாம். விசயாலய சோழன், முதன் முதலாக களப்பிரர் ஆட்சியில் இருந்த தமிழகத்தை கைப்பற்றித் தஞ்சையைத் தலைநகராக்கி, தன் வெற்றிக்கு அறிகுறியாக நிசும்பசூதனி கோயிலைக் கட்டி, சோழர் ஆட்சியை மீட்டுக் கொணர்ந்தான் என வரலாறு கூறும் இதற்கு ஆதாரமாக அவனால் கட்டப்பெற்ற நிசும்பசூதனி கோயில் இடிந்த நிலையில் இன்றும் தஞ்சை மாநகரில் இருப்பதைக் காணமுடிகிறது.

இத்தகு வரலாற்றுப் பின்னணியினை உடைய தஞ்சை மாநகர் விசயாலயன் வழி வந்த இராஜராஜ சோழன், இவன் மகன்

---

33-35. தகவல் கூறியவர். திரு. முத்துசாமி மல்லிக்கவுண்டர், ஒரத்தநாடு.

இராசேந்திர சோழன் காலத்தில் மேலும் புகழ் பெற்ற நிலையை அடைந்து, தமிழ் நாட்டின் அன்றைய வரலாற்றுக்கும், இன்றைய வரலாற்றுக்கும் கட்டியங்கூறி நிற்கிறது எனலாம். "தமிழ்நாட்டின் நெற் களஞ்சியம்" எனப் புகழப்படும் பெருமை வாய்ந்த இந்நகர் இன்று பலதரப்பட்ட, பல்லாயிரக்கணக்கான மக்கள் வாழும் ஒரு சிறப்பினை உடையதாய் விளங்குகிறது. மக்கள் தொகையில் தமிழ் நாட்டில் இரண்டாவது இடத்தை வகிப்பது இந்நகர் என்ப.[36] சுமார் மூன்று இலட்சம் மக்கள் வசிக்கின்றனர் எனலாம். இந் நகரின் பரப்பளவு 9.08 சதுர மைல் என்ப. இம் மாவட்டம் முழுதுமே சிறந்த மருத நிலமாகத் திகழ்கிறது.

இவ்வூரின் பெயர்க் காரணத்தைப் பல விதமாகக் கூறுப. 1. இந்நகரின் முன்னைய பெயர் "அளகாபுரி" என்று வடமொழி யில் உள்ள 'தஞ்சாக்கூர் புராணம்' என்னும் நூல் விளம்பும்.[37] (இந்நூல் தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையத்தினரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வருகிறது) "அளகை, அளகாபுரி" என்பது குபேரனது ஊர் – நகரம் என்ப. 2. இந் நூலே "தஞ்சாசுரன்" என்னும் அசுரன் வாழ்ந்ததாகவும், அவனை தேவி வதைத்த பிறகு அவ்வசுரனின் வேண்டுகோள் படியே, அவன் பெயராலேயே அழைக்கப் பெற்றது எனக் கூறும்.[38] 3. "தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி" என்னும் நூல் இந்நகருக்கு "கருடங் கோட்டை" என்ற பெயரினைக் கூறும்.[39] காரணம் இந்நகர் வான்வெளியில் இருந்து பார்த்தால் கருட உருவமாகத் தெரியும் என்பதால். இதன் காரணமாகவே இந்நகரில் பாம்பு தீண்டப் பெற்றவர் இறப்பதில்லை என மரபாகக் கூறப்பட்டு வருகிறது.

4. தஞ்சாறை (ஆறை - கோட்டை, மதில், அரண்) என்பதே பழைய பெயர் என்றும் அதுவே தஞ்சாவூர் எனவழக்கில் மருவி

---

36. தஞ்சாவூர் மாவட்டம், ப. 297.
37. தகவல் கூறியவர். திரு. வீ. சொக்கலிங்கம் பிள்ளை, சரஸ்வதி மகால் நூல் நிலையம், தஞ்சாவூர்
39. வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி, வீ. சொக்கலிங்கம் பிள்ளை, பக். 1-10

யுது எனவும் கூறுப.[40] 5. தஞ்சம் அடைந்தவர்களுக்குப் புகலிடமாக விளங்கியதால் தஞ்சாவூர் என்ற பெயரினைப் பெற்றது எனவும் கூறுப.[41] மேற்கூறிய எல்லாப் பெயர்க் காரணங் களைக் காட்டிலும் இதுவே மிகவும் பொருத்தமாகத் தோன்றுகிறது. கல்வெட்டுக்களிலும் இப்பொருளில் அஞ்சினான் புகலிடம், அபயம், அடைக்கலம் எனபன போன்ற சொற்கள் வழங்குவதைக் காண முடிகிறது.

இந்நகரின் அழகிற்கு அழகு செய்வது இராஜராஜ சோழனால் எழுப்பப்பெற்ற ஓங்கி உயர்ந்த, "தஞ்சை இராஜராஜேஸ்வரம்" என்றழைக்கப்பெறும் பெரியகோயில் ஆகும். இக்கோயிலின் தனிச் சிறப்பு இக்கோயில் கருவறை விமானமும், ஒற்றைக் கல்லால் அமைக்கப் பெற்ற நந்தியும் ஆகும். "விமானத்தின் உயரம் 216 அடி (65 மீட்டர்). விமானத்தின் மேல் தளம் ஓரே கல்லால் ஆனது. (எடை 80 டன்)இவ்வொற்றைக் கல்லினை, "சாரப்பள்ளம்" என்று இன்றழைக்கப்படும் ஊரில் இருந்து, சாரமமைத்து மேலே ஏற்றினர் எனவும், அதனாலேயே அவ்வூர்க்கு அப்பெயர் வந்தது எனவும் கூறுப. நாற்புறமும் $6\frac{1}{2}$ அடி நீளமும்,, $5\frac{1}{2}$ அடி அகலமும் உள்ள நந்திகளின் உருவங்கள் உள்ளன. கோயிலின் முன்னே உள்ள நந்தியின் நீளம் 16 அடி, அகலம் $8\frac{1}{4}$ அடி, உயரம் 12 அடி என்ப. கோயிலின் வாயிலில் உள்ள துவாரபாலகர்கள் சிலை (18 அடி உயரம்) இக்கோயிலில் உள்ள மற்றொரு சிறப்பு ஆகும். எண்ணற்ற சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்துள்ளது. சுப்பிரமணியர் கோவிலில் உள்ள எறும்பு ஊர்தல் போன்ற சிற்பம் மிகச் சிறப்புடையது. கருவறையின் பின்னே அழகிய ஓவியங்கள் தீட்டப் பெற்றுள்ளன. சுந்தரர் வாழ்க்கை வரலாற்றின் சில காட்சிகள் இங்கே ஓவிய மாகக் காணப்படுகின்றது. இன்று இக்கோயிலில் உள்ள சிற்பங்களும், ஓவியமும் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் பாது காக்கப்படுகிறது. இக்கோயிலின் அமைப்பிலேயே இராசேந்திர சோழனால் கங்கை கொண்ட சோழபுரத்தில் கட்டப்பெற்ற கோயிலும் வரலாற்றுச் சிறப்புடையதாகும்.

---

40-41. தஞ்சாவூர் மாவட்டம், ப-287

இன்று இந்நகர் இம்மாவட்டத்தின் தலைநகராக விளங்குவதால், மாவட்ட தலைமை அலுவலகம், வட்டாட்சியார் அலுவலகம், மாவட்டக் கருவூலம் போன்ற முக்கிய அலுவலகங்களும் இங்கேயே செயல்படுகின்றன. ஆடவர், மகளிர்க்கானக் கலைக் கல்லூரிகளும், மருத்துவக் கல்லூரியும், கரந்தையில் உள்ள தமிழ்க் கல்லூரியும் இந்நகரின் கல்வி வளத்திற்கு உறுதுணையாக உள்ளன. சென்ற ஆண்டு தமிழக அரசினரால் "தமிழ்ப் பல்கலைக்கழகம்" தொடங்கப் பெற்று சிறப்புடன் இயங்கி வருகிறது.

பன்மாடச் சிறப்புடைய அரண்மனையும், கோட்டைக் கொத்தளங்களும், கோயிலைச் சுற்றியுள்ள ஆழ்ந்தகண்ட அகழியும், மராட்டிய மன்னன் சரபோஜியால் உருவாக்கப்பட்ட 'தஞ்சை' சரஸ்வதி மகால் நூல் நிலையமும், அதை யொட்டி அமைந்துள்ள சிற்பக் கூடமும் இந்நகரின் அன்றைய பெருமையையும் இன்றைய பெருமையையும் விளக்கி நிற்கின்றன.

கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரால் இயற்றப் பெற்ற "தஞ்சை பெருவுடையார் உலா", சரஸ்வதி மகால் நூல் நிலையத்தினரால் பதிப்பிக்கப் பெற்ற "வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி", சரபேந்திர பூபாலக் குறவஞ்சி, தஞ்சாக்கூர் புராணம், கருவூரார் திருவிசைப்பா போன்ற இலக்கியங்கள் இந்நகர்ச் சிறப்பினை அழகாக எடுத்தியம்புகின்றன.

இவ்வட்டத்தில் பார்க்க வேண்டிய இடங்கள் நிறைய இருக்கின்றன. இவ்வட்டத்திற்குப் புகழ் தருவன அரண்மனை பெரிய கோயில், சரஸ்வதி மகால் நூல்நிலையம் இன்னும் பற்பல. மொத்தப் பெருங்கிராமங்கள் 133.

## 9. திருவையாறு

தஞ்சைக்கு வடக்கே 10கி· மீ தூரம் உள்ள இவ்வட்டம் ஒரு சிறு வட்டமாகும். மிகச் சமீபத்திலேயே இது தனியொரு வட்டமாகப் பிரிக்கப்பட்டது. ஆறுகள் பாயும் நல்ல வளமான பகுதி

யாகும். ஏறத்தாழ சுமார் 1 லட்சம் மக்கள் வசிக்கும் வட்டம் எனலாம்.

பெயர்க் காரணம் :— 1. ஆறை என்பது சிறந்த மதிற் சுவர்களை உடைய கோட்டை என்னும் பொருள்படும். சிறந்த அல்லது அழகிய கோட்டை என்னும் பொருளில் ஏற்பட்ட ஐயாறை என்பதே ஐயாறு என மருவியிருக்கலாம். 2. ஐயாறு என்பது அகன்ற ஆற்றை உடைய ஊர் என்ற பொருளில் வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி, கொள்ளிடம் என்னும் ஐந்து ஆறுகள் இவ்வூரருகே செல்வதால் ஏற்பட்ட பெயராக இருக்கலாம் என்ப[42] 3. புராணநூலார் சூரிய புஷ்கரணி, சந்திர புஷ்கரணி, கங்கை, பாலாறு, நந்தி தீர்த்தம், என்னும் ஐந்து புண்ணிய தீர்த்தம் தம்முள் கலப்பதனால் பெற்ற பெயர் என்ப.[43] 4 வடமொழியில் பஞ்ச நதம் என இவ்வூர்ப் பெயர் வழங்கப்படுகிறது. 5. கல்வெட்டில் இவ் வூர்ப் பெயர், "இராசேந்திர சிங்க வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திரு வையாறு" எனவும், "புவனமுழுதுடையான் வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாறு" எனவும் ' இராசராச வளநாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாறு" எனவும் வழங்கப்படுகிறது. 6. இறந்தவர் களின் இறுதிச் சாம்பல்களைக் கங்கையாற்றில் கரைக்கக் காசிக்குச் செல்வது போல, இங்கு வந்து காவிரியில் கரைப்பதால் 'காசிக்குத் திருவையாறு அதிகம்" என இவ்வூரைப் பற்றி ஒரு பழமொழி வழங்குகிறது. 7. தென் கயிலாயம் எனவும் இவ்வூரை அழைப்பர். இவ்வூர்க் கோயில் சிறப்புடையதாகும். திருநாவுக்கரசருக்கு சிவ பெருமான் கையிலாயக் காட்சி தந்து அருளியதும், திருநாவுக்கரசர் "கண்டறியாதன கண்டேன்" எனத் தேவாரப் பதிகம் பாடியதும் இவ்வூரிலேயே ஆகும். இக்கோயிலில் பல சோழ, பாண்டிய, விசய நகர மன்னர்களின் கல்வெட்டுக்கள் உள்ளன. இவ்வூரும் இவ் வூரைச் சுற்றியுள்ள திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதி குடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் என்னும் ஊர்களும் சேர்த்து சப்த தானம் என்றழைக்கப்படும்.

இசைத்துறைக்குப் பெருமை தேடித் தந்ததில் இவ்வூருக்குப் பெரும் பங்குண்டு தியாகராயர், பட்டிணம் சுப்பிரமணிய ஐயர்

---

42-43. தகவல் கூறியவர் திரு. தர்மராசன், உப்புக்காய்ச்சிப் பேட்டை, திருவையாறு

மகா வைத்திய நாதர் ஆகிய இசைக் கலைஞர்கள் இவ்வூரினரே. தியாகராசரின் சமாதி இவ்வூரில் உள்ளது. ஒவ்வொரு வருடம் மார்கழி மாதமும் சிறப்பான முறையில் இசை விழா நடைபெறுகிறது.

காவிரியும் அதன் கிளை நதிகளும் பாய்ந்து வளமூட்டுவதால் இப்பகுதியில் நெல், கரும்பு, காய்கறிகள் மிகுதியாக விளைந்து வளம் கொழிக்கிறது. பிராமணர்கள் அதிகமாக வசிக்கின்றனர். மகாராட்டிர மன்னர்களால் கட்டப்பட்ட முப்பதுக்கும் மேற்பட்ட சத்திரங்கள் இவ்வூரை அணி செய்கின்றன.

இவ்வட்டத்தின் மொத்தப் பெருங் கிராமங்கள் 89.

## 10. குடவாசல்

இவ்வட்டம் வரலாற்றுச் சிறப்புடையதாக விளங்குகிறது. குடவாயில் என்னும் இவ்வூர்ப் பெயர் சங்க இலக்கியங்களிலேயே கூறப்பட்டுள்ள சிறப்புடையது. "குடவாயிற் கோட்டம்" என்னும் நூலில் இவ்வூரின் பெயர்க்காரணம், இவ்வூரின் வரலாற்றுச் சிறப்புக்கள், ஏனைய அரிய செய்திகள் ஆகிய யாவும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இந்நூல் ஆசிரியர் சங்க இலக்கியங்களில் தொடங்கி, இன்று வரை கிடைத்துள்ள ஆதாரங்களைக் கொண்டு இவ்வூரைப் பற்றிய ஒரு விரிவான ஆய்வினைத் தந்துள்ளார். அவர் கூறும் ஆய்வு முடிவுகள் இவ்வூரின் தனிச்சிறப்பினை விளக்குகின்றன. அவை,[44]

1. சங்ககாலச் சோழநாட்டில் முக்கியத்துவம் பெற்ற பேரூர்.
2. சோழர்களின் சிறைக்கோட்டம் இங்கு இருந்தது.
3. திறைப் பொருளாகக் கிடைக்கப்பட்டப் பொன்னும் மணியும் இங்குள்ள கிடங்கில் சேகரிக்கப்பட்டது.
4. அழகு மிகுந்த இயற்கையான மழைநீர் நிரம்பிய அகழி இருந்தது.

---

44. குடவாயிற் கோட்டம், எம். பாலசுப்பிரமணியம், பக். 15-16

5. கடுமையான காவற்காடு சூழப் பெற்ற காவற்காடு இருந்தது.

6. இங்குள்ள சிறைக் கோட்டத்தில் சேர மன்னன் ஒருவன் சோழ மன்னால் சிறை வைக்கப்பட்டான்.

7. குடவாயிற் கீரத்தனார், நல்லாதனார் போன்ற பெரும் புலவர்கள் பிறந்த ஊர்.

சங்க இலக்கியத்தில் ஒன்றான அகநானூறு இவ்வூரை,

பழம்பல் நெல்லின் பல்குடிப் பாவை
பொங்கடி படிகயம் மண்டிய பசுமனை
தண் குடவாயில் அன்னோள்............[45]

என "குடவாயில்" என்றே குறிப்பிடுகிறது. மேலும் இவ்வூர் சங்க, இலக்கியங்களில்,

எழுதெழில் சிதைய அழுதனர் கண்ணே
தேர்வண் சோழர் குடந்தை வாயில்"[46]

எனவும்,

"வெண்வேற் கொற்றச் சோழர் குடந்தை வைத்த"[47] எனவும், "குடந்தை வாயில், குடந்தை" என்றும் கூறப்படுகிறது. குடந்தை வாயில், குடந்தை, குடவாயில் என்னும் மூன்று பெயர்களும் ஒன்றேவா? அல்லது வேறுவேறு ஊரைக் குறிக்கின்றனவா? என்ற ஐயம் எழும். இதனைக் குடவாயிற் கோட்டம் நூலின் ஆசிரியர் தகுந்த காரணங்கள் காட்டி, மூன்றும் ஒன்றே என நிறுவியுள்ளார் (குடவாயில் — மேற்கு வாயில்).

இவ்வட்டத்தின் மொத்தப் பெருங்கிராமங்கள் 101.

## 11. திருவாரூர்

சோழ மன்னர்கள் ஆட்சிக் காலத்தில் மிகவும் சிறப்புடைய ஊராக — நகராக விளங்கிய பெருமையை உடையது. சோழ மன்னர்

---

45. அகநானூறு, பா-44, ப-175
46. நற்றிணை, பா-379, பக்-638-39
47. அகநானூறு, பா-360, பக்-233

முடிசூட்டிக் கொள்ளும் ஊர்களாகிய காவிரிப்பூம்பட்டிணம், சேய்ஞலூர், கருவூர், உறையூர், திருவாரூர் என்னும் ஐந்து ஊர்களில் இவ்வூரும் ஒன்றான பெருமை உடையது. "திருவாரூர் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்" எனச் சுந்தரரால் போற்றிப் பாடப்பெற்ற பெருமை உடையவூர். சைவ சமய வரலாற்றில் பெரும் பங்கினை வகிக்கும் சுந்தரர் வரலாற்றின் பல நிகழ்ச்சிகள் அடங்கிய சிறப்புடையவூர். சப்த விடங்கத் தலங்களில் ஒன்ருக உரைப்பர். தன்னுயிர் போல் மன்னுயிர்களிடத்து அன்புவைத்து, நெறி தவறாது அரசாண்ட மனுநீதிச் சோழனால் பெருமைபெற்ற சிறப் பினை உடையது. சுமார் ஏழு லட்சம் மக்கள் வசிக்கும் பகுதி யாகும்.

பெயர்க்காரணம்: 1. திருமகள் இவ்வூர் இறைவனை வழிபடும் பொருட்டு இங்கு இருத்தலின் திருவாரூர் என்ற பெயர் பெற்ற தென்ப. திரு—இலக்குமி ஆர்—தங்குதல் 2. செல்வம் நிறைந்த அழகிய ஊர் என்ற பொருளிலும் வழங்கப்படுகிறது. இவ்வூரில் உள்ள கமலாலயக் குளம் மிகச் சிறப்புடையது. கல்வெட்டிலும் இவ்வூர்ப் பெயர் திருவாரூர் என்றே குறிக்கப்படுகிறது.

இவ்வூர் தியாகராசர் கோயில் மிகப் பெரிய கோயில் ஆகும். தேவாரத் திருப்பதிகங்களில் இவ்வூருக்கு அதிகமான பாடல்கள் உண்டு. திருவாரூர் தேரழகு என்று கூறுமளவிற்கு இக்கோயில் தேர் புறப்பாடு மிகவும் சிறப்புடையதாக இருக்கும். இக்கோயிலுக்குப் பூங்கோயில் என்ற வேறு பெயரும் உண்டு. சப்த விடங்கத் தலங்களில் ஒன்று. நடனம் அசபா நடனம் எனப்படும். தேவா சிரிய மண்டபம், ஊஞ்சல் மண்டபம், சபாபதி மண்டபம், வசந்த மண்டபம் முதலிய மண்டபங்கள் இவ்வூர்க் கோயிலில் உள்ளன. மேலும் தண்டபாணி கோயில், இராஜ துர்க்கை கோயில், மாணிக்க நாச்சியார் கோயில், திருவாரூர்ப் பரவையுன் மண்டளி முதலானவை இவ்வூர்க்குச் சிறப்புத் தருவனவாகும். கமலாலயச் சிறப்பு முதலான பல நூல்கள் இவ்வூர்ச் சிறப்பினைப் பல்லாற்றானும் பகரும்.

இவ்வூரிலேயே சங்கீத மும்மூர்த்திகள் எனப்படும் முத்துசாமி தீட்சதர், சாமா சாஸ்திரிகள், தியாகையர் என்ற மூவரும் பிறந்தனர்.

மேலும் திரு. வி. க. போன்ற தமிழ்ப் பெரியோர்கள் தொடர்பு கொண்ட சிறப்புடைய ஊராகும். இவ்வூர்த் தெருக்கள் மிகவும் அகலமான முறையில் அழகாக அமைந்திருக்கின்றன.

இவ்வட்டத்தின் மொத்த பெருங்கிராமங்கள் 155, பார்க்க வேண்டிய முக்கிய இடம் திருவாரூர் பெரிய கோயில்.

## 12. நாகப்பட்டினம்

இவ்வட்டம் துறைமுகப்பட்டிணமாகத் திகழும் சிறப்புடையது ஆகும். இவ்வட்டம் அத்துணை அளவு வளமுடைய பகுதி எனக் குறிப்பிட முடியாது. ஏன் எனில் கடலோரப் பகுதிகளில் நல்ல நீர் கிடைப்பதில்லை. ஓரளவு நீர்வளமுள்ள பகுதியில் நெல்லும், பிற இடங்களில் கரும்பும் பயிரிடப்படுகிறது. இவ் வட்டத்தின் பெரும்பாலான ஊர்கள் முஸ்லீம் இனத்தவர்கள் அதிகம் வசிக்கும் பகுதியாகும். இவ்வட்டத்தின் பரப்பளவு 620 ச. கி. மீ. ஆகும். மக்கள் தொகை சுமார் ஐந்து லட்சம் எனலாம். கோட்டத் தலைநகராகவும், வட்டத் தலைநகராகவும், நகராண்மைக் கழகம் உள்ள ஊராகவும் உள்ள இவ்வட்டம் தஞ்சை மாவட்டத்தில் மிகச் சிறப்பான வட்டமாகக் கருதப்படுகிறது. எனினும் சில சமயங்களில் கடலால் புயல் பாதிப்பு மிகுதியாக ஏற்படுவதுண்டு. சோழர் காலத்தில் மிகவும் சிறப்பு பெற்ற ஊராக இருந்திருக்கிறது. மார்க்கோ போலோ என்ற மேலைநாட்டு பயணி இவ்வட்டத்தைப் பற்றிப் புகழ்ந்து கூறியுள்ளார்.

பெயர்க்காரணம் :— "நாகைக் காரோணம்" "திரு நாகை" என்றும் வழங்கப்படும். நாகப்பட்டினம் எனத் தற்போது மருவி வழங்குகிறது. பட்டினம் கடற்கரைச் சார்ந்த ஊரைக் குறிப்பிடும். 1. நாக அரசன் ஒருவனால் உண்டாக்கப்பட்டதால் இவ்வூர் இப்பெயர் பெற்றது என்ப. இவ்வூர்க் கோயிலில் உள்ள இறைவன். திருவுருவமும் இவனாலேயே அமைக்கப்பட்டது என்ப. 2. விநாயகர் நாகாபரணப் பிள்ளையார் என்பதாம். இப்பிள்ளை யாரின் தலையின் பின்புறம் ஐந்து தலைப் பாம்பு ஒன்று குடை பிடிப்பதாக உள்ளது. இதனாலேயே இவ்வூருக்கு இப்பெயர் வந்தது

என்ப. 3. நாகர்கள் என்ற இனத்தவர் வசித்தமையால் இப்பெயர் பெற்றது எனவும் உரைப்பர்.

இவ்வூர் சமயச் சிறப்பில் பெரும்புகழ் பெற்றது எனலாம். ஏன் எனில் மூவர் பாடல் பெற்ற காரோணர் கோயில் இவ்வூரிலும், இவ்வூருக்கு அருகில் உள்ள நாகூர் முஸ்லீம்களின் சமயச் சிறப்பிடமாகவும், வேளாங்கன்னி கிருத்துவர்களின் சமயச் சிறப்பிடமாகவும் விளங்கி, இவ்வட்டம் எல்லா இனத்தவரையும் இணைக்கும் ஒரு பாலமாக அமைந்திருப்பதைக் காணமுடிகிறது. மேல்நாட்டினரால் பெரிதும் போற்றப்பட்ட ஊர் ஆகும். இன்றும் வெளிநாட்டவர் தொடர்புடைய ஊராக விளங்குவதைக் காணலாம். இந்நாகையைப் பற்றிக் காளமேகப் புலவர் பாடியுள்ள தனிப்பாடல் ஒன்று குறிப்பிடத்தக்கது.

"கத்துகடல்சூழ் நாகைக் காத்தான் தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும் — குத்தி
உலையில்இட ஊர்அடங்கும் ஓர்அகப்பை அன்னம்
இலையில்இட வெள்ளி எழும்"[48]

நகைச்சுவைத் தோன்றப் பாடப்பட்டதாகும். இவ்வட்டம் தஞ்சை மாவட்டத்தின் மற்ற பகுதிகளை விட மிகக் குறைவான வெப்ப நிலையையும், மிக அதிகமான மழையையும் பெறும் பகுதி ஆகும். இவ்வட்டத்தின் மொத்த பெருங்கிராமங்கள் 82.

## 13. நன்னிலம்

நன்னிலம் என்ற பெயருக்கு ஏற்றது போலவே, இவ்வட்டம் இம்மாவட்டத்தின் நடுவில் அமைந்து, நல்ல நிலவளமும், நீர் வளமும் பெற்று வளமுடைய வட்டமாகத் திகழ்கிறது. சைவ சமயப் பாடல் பெற்ற தலங்கள் மிகுதியாக இருப்பதும் இவ் வட்டத்திலேயே ஆகும். மிகச் சிறிய வட்டமாயினும் மிக வளமான, சிறப்பான வட்டமாகத் திகழ்கிறது. புகழ் பெற்ற இசைவாணர்

---

48. தனிப்பாடல் திரட்டு, காளமேகப் புலவர், பா-380, ப.138

பலர் இவ்வட்டத்தினார் ஆவர். கல்வெட்டிலும் இவ்வூர் நன்னிலம் என்றே அழைக்கப்படுகிறது. இவ்வட்டத்தின் மக்கள் தொகை சுமார் ஒரு லட்சம் எனலாம். தமிழ்நாட்டிலேயே மிகக் கூடுதலான நிலவரியை பெறுவது இதுவே என்ப. இவ்வூர்க் கோயிலில் இறைவனின் பின்புறம் தேன்கூடு ஒன்று காணப்படுகிறது. இறைவனும் மதுவனேஸ்வரர் என்றழைக்கப்படுவார். இக்கோயில் மிகப் பெரிய கோயில் ஆகும்.

இவ்வட்டத்தின் மொத்த பெருங்கிராமங்கள் 161.

## 14. பாபநாசம்

இவ்வட்டம் கொள்ளிடத்தின் தெற்கே உள்ளது. கும்பகோணம் வட்டத்தின் சில பகுதிகளையும் தஞ்சாவூர் வட்டத்தின் சில பகுதிகளையும் இணைத்து 1910-ல் இவ்வட்டம் தனியொருவட்டமாகப் பிரிக்கப்பட்டது. காவிரியின் கால்வாய்கள் மூலமும், மேட்டூர் அணையாலும் நல்ல நீர்ப்பாசன வசதியைப் பெறுகிறது. இவ்வட்டத்தின் பரப்பளவு சுமார் 228 ச. மைல்கள் ஆகும். மக்கள் தொகை சுமார் 5 லட்சம் ஆகும். பட்டு நெசவும், பாய் முடைதலும் முக்கிய கைத் தொழில்கள் ஆகும்.

பெயர்க்காரணம் :— சரியாகத் திட்டமாக இவ்வூர்ப் பெயர்க் காரணத்தை அறிய முடியவில்லை. முனிவர் ஒருவரின் பாபத்தை இவ்வூர் இறைவன் நாசம் செய்தமையின் இப்பெயரினைப் பெற்றது என்ப. பாபநாசம் சிவன் என்ற பெரியார் இவ்வூரிலேயே வாழ்ந்தார். எனவும், அவருடைய நினைவாகவே இப்பெயர் பெற்றது எனவும் உரைப்பர். இவற்றிற்குச் சரியான ஆதாரம் இல்லை. இவ்வூரில் 108 சிவலிங்கங்களை உடைய ஒரு கோயில் சிறப்பாகக் காணப்படுகிறது. இங்கு கோயில் கொண்டிருக்கும் இராமலிங்கம் இராமபிரானால் வழிபடப்பட்டதாகக் கூறும்.

இவ்வட்டத்தின் மொத்த பெரிய ஊர்கள் 104.

## 15. வலங்கைமான்

இவ்வட்டம் கும்பகோணத்திற்குத் தெற்கே சுமார் 10 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வட்டத்தில் வாழும் மக்களில் பெரும் பான்மையினர் கள்ளர் வகுப்பினைச் சார்ந்தவர்கள் ஆவர். குடமுருட்டி ஆற்றின் கரையில் அமைந்து இயற்கை எழில் கொஞ்ச விளங்குகிறது. இவ்வூரின் மக்கள் தொகை சுமார் 15,000 என லாம். ஆங்கிலமொழி புலமையில் சிறப்புற்று இருந்த "வ. சு. சீனிவாச சாஸ்திரிகள்" இவ்வூரினைச் சார்ந்தவர் ஆவார். இது இவ்வூர் தனிச் சிறப்பு எனலாம்.

இவ்வூரில் அழகான ஒரு ஆலயம் உள்ளது. இவ்வாலயத்தின் நடராசப் பெருமான் வலது கையில் மான் ஏந்திய நிலையில் இருப்பதாலேயே "வலங்கைமான்" என்ற பெயரினைப் பெற்றது என்ப. ஆனால் இன்று இவ்வமைப்புடைய நடராஜர் சிலையே இவ்வாலயத்தில் இல்லை. இராமாயணக் காலத்தில் இராவணன் பொருட்டு பொன்மான் உருவெடுத்து வந்த பொய்மானினைச் சீதாப் பிராட்டியார் வேண்ட, அவர் பொருட்டு இராமன் பொய்மானைத் துரத்திவர, ஓடி வந்த பொய் மான் இவ்வூரில் வலப்புறமாகத் திரும்பி — வளைந்து ஓடியதால் இவ்வூருக்கு "வலங்கை மான்" என்ற பெயரேற்பட்டது எனவும், அம்மான் வளைந்து சென்ற இடம் "வளையும்மான்புரம்" என வழங்கப்பட்டு பின் இதுவே "வளையுமாபுரம்" என மருவி வழங்குகிறது எனவும் கூறுப.[49] இவ் வளையுமாபுரம் என்னும் ஊர் இன்று இவ்வட்டத்திலேயே, ஒரு சிற்றூராக விளங்குகிறது.

"வெலங்கமானு", "மதுவனம்" என்பன இவ்வூரின் வேறு பெயர்கள். தெலுங்கர்கள் ஆதிக்கத்தில் ஏற்பட்ட பெயரே வெலங்க மானு (வலங்கைமான் என்பதின் தெலுங்கு வடிவம்) என்றபெயர். "மதுவனம் இராமசாமி கோயில்" என்ற பெயரில் ஒரு கோயில் உள்ளது. இக்கோயில் பெயராலேயே "மதுவனம்" என்ற பெயர் ஏற்பட்டது என்ப.[50]

---

49. தகவல் கூறியவர். திரு. புவனேஸ்வரன், வலங்கைமான்
50. தகவல் கூறியவர். திரு. புவனேஸ்வரன், வலங்கமைான்

அழகிய சிவன் கோயில் ஒன்றும், மதுவளம் இராமசாமி கோயில் ஒன்றும் இவ்வூரை அணி செய்கின்றன. இவ்வூரைச் சுற்றியும் பசுமையான வயல் வெளிகளும், வாழைத் தோட்டங்களும் அதிகமாகக் காணப்படுகின்றன.

இவ்வட்டத்தின் மொத்த பெரிய ஊர்கள் 76. ஆகும்.

## 16. கும்பகோணம்

இன்று இவ்வூர் வழக்கில் "குடந்தை" என அழைக்கப்படுகிறது. "குடமூக்கு" என்பதே பழைய பெயரென்ப. இவ்வட்டத்தின் பரப்பளவு சுமார் 342 சதுர மைல் ஆகும். மக்கள் தொகை சுமார் 3,48,104 ஆகும். காவிரியாற்றின் கழிமுகவெளியில் உள்ளது. நீர்வளமும் நிலவளமும் நிறைந்த பேரூர் நெல், வாழை, வெற்றிலை ஆகியன முக்கிய விளைபொருள்கள். நெசவும், பாத்திரங்கள் செய்தலும் இவ்வூரின் முக்கிய கைத்தொழில்கள் ஆகும்.

பெயர்க்காரணம் : இவ்வூரின் பழைய பெயர் குடமூக்கு என்பதே ஆகும். ஒரு நகரத்தின் மேற்குப் பகுதியாக — மேற்கு வாயிலாக இருந்தமையின் பெற்ற பெயர் எனலாம். குட மூக்கு என்பதே குடந்தை என்றும் கும்பகோணம் என்றும் ஆயிற்று. குடகு — என்பது மேற்கு என்ற பொருளைக் குறிக்கும். குடவாயில், குணவாயில் என்பனவும் இப்பொருளிலேயே வழங்குதலைக் காண முடிகிறது. தக்கயாகப்பரணி, யாப்பருங்கல விருத்தி, அகநானூறு ஆகிய இலக்கியங்களில் இவ்வூரைப் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகிறன்றன. தேவாரம், நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் ஆகியன இவ்வூரைக் "குடந்தை" எனவும், "குடமூக்கு" எனவும் அழைக்கின்றன. கல்வெட்டில் இவ்வூர்ப் பெயர் "திருக்குடமூக்கு" என்றே காணப்படுகிறது. வெள்ளையர்கள் இவ்வூரைப் "இந்தியாவின் கேம்பிரிட்ஜ்" எனவும், "தென்னிந்தியாவின் காசி" எனவும் குறிப்பிட்டுள்ளனர். ஊழிக் காலத்தின் போது வைக்கப்பட்ட அமுதகலசத்தை—குடத்தை இறைவன் வேட வடிவு கொண்டு இங்கே வந்து அம்பினுல் அடிக்க உடைந்த மூக்கின் வழியே அமிர்தம் நான்கு பக்கங்களிலும் பரந்து நிலைபெற்று நின்றதால் குடமூக்கு

என்று பெயர் பெற்றது எனவும், படைப்புக்காலத்திலேயே இறைவன் அமிர்தகுடத்தில் எழுந்தருளியமையால் இறைவனுக்கு ஆதி கும்பேசுரர் என்று பெயர் ஏற்பட்டது எனவும் தலபுராணம் கூறும்.[51]

இவ்வூரின் சிறப்பிற்குக் காரணமாய் இருப்பது இங்கு காணப்படும் கோயில்களே ஆகும். 8 கி. மீ. சுற்றளவிற்குள் சுமார் 150 கோயில்கள் காணப்படுவது இவ்வூரின் தனிச் சிறப்பாகும். திருக்குடமூக்கு என்ற கும்பேசுரர் கோயில், திருக்குடந்தைக் காரோணம் எனப்படும் காசி விசுவநாதர் கோயில், திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் என்னும் நாகேசுரர் கோயில், அபிமுகேஸ்வரர், கௌரமேஸ்வரர், கோமேசர், ஆதி விசுவேசுரர், பாணபுரீசர், காளகஸ்தி நாதர், ஏகாம்பரநாதர், சாரங்கபாணி, சக்கரபாணி, பூவராகர், லக்ஷ்மி நாராயணர், வரதராஜர், இராமசுவாமி, சரநாராயணர், வேத நாராயணர், கோபாலர் என சைவ, வைணவத் தலங்கள் குடந்தை நகரில் சிறப்பாகக் காணப்படுகின்றன. இக்கோயில்களில் பல எழில்மிகு சிற்பங்கள் காணப்படுகின்றன. கும்பேசுரர் கோயிலில் காணப்படும் கல் நாகசுரம் புகழ் பெற்றது ஆகும். இக்கோயில்களில் ஒரு சில மூவரால் பாடல் பெற்றனவாகும். இந் நகரில் நடைபெறும் மகாமகம் மிகவும் சிறப்புடையதாகும். இதனை யொட்டியே “மகா மகக்குளம்” ஒன்று ஏற்பட்டுள்ளது. இக்குளத்தின் பரப்பளவு சுமார் 10 ஏக்கர் ஆகும். இதனைச் சுற்றி 16 மண்டபங்கள் உள்ளன. இவ்விழா 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை மிகச்சிறப்பாக நடைபெறும்.

கும்பகோணம் எல்லாவகையிலும் சிறப்பு வாய்ந்த ஊராகும். இவ்வூரினைப் பற்றி பல நூல்கள் வெளிவந்துள்ளன. இவ்வட்டத்தைச் சேர்ந்த மொத்த பெரும் கிராமங்கள் 116.

## 17. திருவிடை மருதூர்

காவிரியின் தென்கரையில் அமைந்த அழகான ஊர் ஆகும். கும்பகோணத்தில் இருந்து மாயூரம் செல்லும் வழியில் 6 மைல்

51. தஞ்சாவூர் மாவட்டம், ப. 344

தொலைவில் உள்ளது. மூவர் பாடல் பெற்ற தலமாகும். அண்மைக் காலத்தில் தனியொரு வட்டம் ஆக்கப்பெற்ற சிறப்பினை உடையது. ஊரைச் சுற்றிலும் மருத மரங்கள் சூழப்பெற்ற இயற்கை அமைப்பினை உடையது. இராஜராஜ சோழன் காலத்தில் இவ்வூர் மிகச் சிறப் பினைப் பெற்று இருந்தது. மக்கள் தொகை சுமார் 20,000 எனலாம்.

"திருவிடை மருதூர் தெருவழகு" என்பது இவ்வூரினைப் பற்றி வழங்கும் ஒரு பழமொழி ஆகும். காரணம் இவ்வூர் திட்டமிட்டு அமைக்கப் பெற்றது போல், தெருக்கள் ஒரே சீராகவும், அகலமாகவும் அமைக்கப்பட்டு, காரைக்கால், பாண்டிச்சேரி ஆகிய பெருநகரங் களின் அமைப்பினைப் பெற்று விளங்குகிறது.

சிவபெருமானுக்கு விருப்பமான மருத மரத்துடன் கூடிய மூன்று தலங்கள் தென்னாட்டில் உள்ளன எனவும், அவை வடக்கே கிருட்டினை ஆற்றின் கரையில் இருப்பது "ஸ்ரீ மல்லிகார்ச்சுனம்" தெற்கே தாமிரபருனி ஆற்றின் கதையில் உள்ள "திருப்புடை மருதூர்" (புடார்ச்சுனம்" அம்பா சமுத்திரதின் அருகே உள்ளது.) இவ்விரண்டின் இடையில் தமிழ்நாட்டில் காவிரிக் கரையில் உள்ள "திருவிடை மருதூர்" என்பனவாம். மல்லிகார்ச்சுனத்திற்கும் புடார்ச் சுனத்துக்கும் இடையில் இருப்பதால் "இடை மருதூர்" எனப்பட்டு "திரு" எனும் அடைமொழி சேர்க்கப்பட்டு (பாடல் பெற்ற தலங்கள் அனைத்திற்குமே "திரு" எனும் அடைமொழி சேர்ந்திருப்ப.) "திருஇடை மருதூர்—திருவிடை மருதூர்" எனப்பெயர் பெற்றது.

மருத மரங்களுக்கு இடையே அமைந்த ஊர் ஆதலின் இப் பெயர் வழங்குதலும் உண்டு. இவ்வூரைச் சுற்றிலும் சிவபெருமான் வீற்றிருக்கும் பத்து தலங்கள் உள்ளன எனவும், அவற்றின் இடையே நடுநாயகமாக விளங்குவதால் பெற்ற பெயர் எனவும் உரைப்பார்.[52]

கல்வெட்டுக்களில் இவ்வூர்ப் பெயர், "உய்யக் கொண்ட சோழ வள நாட்டுத், திரைமூர் நாட்டுத் திருவிடை மருதூர்" எனக் குறிக்கப் படுகிறது.

---

52. தகவல் கூறியவர். திரு. பொன் சுப்பிரமணியப்பிள்ளை, திருவிடை மருதூர்

கருவூர்த் தேவர் திருவிசைப்பா, பட்டினத்தார் திருவிடை மருதூர் மும்மணிக் கோவை, கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் தலபுராணம், திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் திருவிடை மருதூர் உலா, மூவர் தேவாரம் ஆகியன இவ்வூர் பற்றிய பல்வேறு செய்திகளை அளிக்கின்றன.

'வரகுண பாண்டியன் தனக்கேற்பட்ட பிரம்மஹத்தி தோசம் அகலும் பொருட்டு இவ்வூர்க் கோயிலுக்கு வழிபட வந்தான் என்றும், பிரம்ம ஹத்திப் பின் தொடர்ந்து வந்தது எனவும், மன்னன் கிழக்கு வாயில் வழியே உள்ளே செல்ல, பிரமஹத்தி மன்னன் திரும்பி வரும்போது மீட்டும் பிடித்துக்கொள்ளலாம் என எண்ணி அங்கேயே காத்திருந்ததாகவும், மன்னன் இறைவனை வழிபட்டு மேற்குவாயில் வழியே சென்று, குடந்தை செல்லும் வழியில் திரும்பி பிரம்ம ஹத்தி தொடர்ந்து வருகிறதா எனப் பார்த்ததாகவும், அவ்வாறு திரும்பிப் பார்த்த இடத்திற்குத் ''திருபுவனம்'' எனப் பெயர் வந்தது எனவும்'' ஒரு மரபுக்கதை கூறப்படுகிறது. இறைவன் பெயர் மருத வாணர். இறைவி நன்முலைநாயகி. அழகிய சிற்பங் களும், ஓவியங்களும் நிறைந்த கோயில் ஆகும். மொத்த பேரூர்கள் 267.

## 18. மயிலாடுதுறை

தஞ்சை மாவட்டத்தின் வடகிழக்குப் பகுதியில் கடலோரத்தில் அமைந்திருக்கும் வட்டம் ஆகும். காவிரி பாய்ந்து வளம் கொழிக்கும் பகுதி ஆகும். இலுப்பை மரங்களும், மாமரங்களும் மிகுதியாகக் காணப்படுகின்றன. நெசவுத் தொழில் சிறப்பாக நடைபெறும் பகுதியாகும். இவ்வட்டத்தைச் சேர்ந்த ஒரு பகுதி கூறை புடவை களுக்கு மிகச் சிறப்புப் பெயர் பெற்றதாகும். கூறை புடவைகளை நெய்யும் சிறப்பால் இப்பகுதி கூறைநாடு-கொரநாடு எனச் சிறப்பாக அழைக்கப்படுகிறது. இவ்வட்டத்தின் பரப்பளவு சுமார் 700 ச.கி.மீ. எனலாம். மக்கள் தொகை சுமார் 9 லட்சம். வெண்ணெய்த் தொழிலுக்குப் பெயர் போனது. ஆயிரம் ஆனாலும் மாயூரம் ஆகுமா? என்று பழமொழி வழங்குமளவிற்கு இவ்வட்டம் சிறப்புடையது.

பெயர்க்காரணம் :— இவ்வட்டத்தின் பழைய—புதிய பெயர் மயிலாடுதுறை ஆகும். இறைவி மயிலாக உருக்கொண்டு இவ்வூரில்

இறைவனை வழிபட்டமையால் பெற்ற பெயர் என்ப. இயற்கையிலேயே காவிரிக் கரையில் மயில்கள் ஆடும் துறை இருந்தமையால் பெற்றபெயர் எனினும் பொருந்தும். மாயூரம் என்பது வடமொழிப் பெயர் — மயூரம் — மயில். காவிரிக் கடைமுழுக்கு மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படும்.

இவ்வட்டத்தின் மொத்த ஊர்கள் 394.

## 19. பொறையாறு

இவ்வட்டம் மிகச் சமீபத்திலேயே தனியொரு வட்டமாக பிரிக்கப்பட்டது. மிகச் சிறிய வட்டம் எனலாம். கடற்கரையை ஒட்டியது. வளம் குறைவான பகுதியாக இவ்வட்டம் அமைந்திருக்கிறது.

பெயர்க்காரணம் :—பொறையர் ஆறை என்று இருந்திருக்காலாமோ எனத் தோன்றுகிறது. ஆறை எனில் கோட்டை என்று பொருள் படும். பொறையர், கடம்பர் என்று வழங்கப்படும் குறுநில இனத்தவர்களில் பொறையர் என்ற இனத்தவர் வசித்த பகுதியாக இருக்கலாமோ எனத் தோன்றுகிறது. எனினும் சரியான பெயர்க் காரணம் அறிய முடியாமல் ஆய்விற்கு உரியதாகவே இருக்கிறது.

இவ்வட்டத்தின் மொத்தப் பெருங்கிராமங்கள் 78.

## 20. சீர்காழி

"நாளும் இன்னிசையால் நற்றமிழ் பரப்பிய ஞானசம்பந்தர்" அவதரித்த சிறப்பு வாய்ந்த தலமாகும் இவ்வட்டம். காவிரியின் கழிமுகப் பகுதியில் இருக்கும் இவ்வட்டத்தின் மக்கள் தொகை சுமார் 3 லட்சம். இப்பகுதி பள்ளம் நிறைந்த பகுதியாக இருப்பதால் இங்கு மழை பெய்யும் போது தண்ணீர் அதிகமாகத் தேங்கி விடுகிறது. பாய் முடையும் தொழிலும், மிட்டாய் தொழிற் சாலைகளும் இங்கு நடைபெறும் சிறுதொழில் எனலாம். இவ் வட்டம் சிதம்பரத்திற்குத் தெற்கே உள்ளது. தஞ்சை மாவட்டத்தின்

வடகோடியில் உள்ள தாலுக்கா எனலாம். இதற்கும் தென்னார்க் காட்டுக்கும் இடையில் கொள்ளிடம் ஆறு செல்கிறது. பரப்பளவு சுமார் 171 சதுர மைல் ஆகும்.

பெயர்க்காரணம் :— சீர்காழிக்கு மொத்தம் பன்னிரண்டு வேறுபெயர்கள் உள்ளன. காளியினால் பூசிக்கப்பட்டத் தலமாதலின் ஸ்ரீ காளிபுரம் எனப்பட்டு அதுவே நாளடைவில் சீர்காழி ஆயிற்று என்ப. பழங்காலத்தில் கழுமலம் என்ற பெயரே வழங்கியது. காவிரிப் பூம்பட்டினத்தை அடுத்திருப்பதால், சோழர்களின் பட்டத்து யானையை இங்கே கட்டி வைத்திருப்பது வழக்கமெனவும், அதன் காரணமாகவே கழுமலம் என்ற பெயர் உண்டாயிற்று என்ப. வேறு பெயர்களாவன.

1. பிரமபுரம் — பிரமன் வழிபட்டதால் பெற்றபெயர்.
2. வேணுபுரம் — இந்திரன் மூங்கில் உருவில் மறைந்திருந்தமையால் பெற்றபெயர்.
3. புகழி — தேவர்களின் புகழிடமானமையால் பெற்றபெயர்.
4. வெங்குரு — சுக்கிரனும் இயமனும் பூசித்ததலால் பெற்ற பெயர்.
5. தோணிபுரம் — ஊழிக் காலத்தில் தோணியாக மிதந்தமையின் பெற்ற பெயர்
6. பூந்தாராய் — திருமால் பூக் கொண்டு வழிபட்டமையின் பெற்ற பெயர்.
7. புறவம் — சிபி புறாவாகி வழிபட்டமையின் பெற்றபெயர்.
8. சண்பை — யாதவ குமாரர் சண்பைப்புல்லாக முளைத்தமையில் பெற்றபெயர்.
9. காளிபுரம் — காளி வழிபட்டமையின் பெற்ற பெயர்.
10. கொச்சையவம்—பராசரர் மச்சகந்தியை புணர்ந்தமையால் ஏற்பட்ட துர்நாற்றம் போக்கியமையால் பெற்றபெயர்.

11. கழுமலம் — உயிர்களின் மலங்கள் போக்கும் தன்மையால் பெற்றபெயர்.

12. சிரபுரம் — திருமாலால் வெட்டப்பட்ட சிலம்பன் என்ற அசுரன் தலை இராகுவாக நின்று பூசித்தமையால் பெற்றபெயர்.

கல்வெட்டில் இவ்வூர் "இராஜராஜ வளநாட்டுத் திருக்கழுமல நாட்டுப் பிரமதேயம் திருக்கழுமலம்" எனவும், "இராசாதிராச வளநாட்டு சீர்காழி" எனவும் வழங்கப்படுகிறது. இத்தலக் கோயில் குரு, லிங்க, சங்கம வடிவில் இறைவன் எழுந்தருளியுள்ள சிறப்புடையது. குரு — தோணியப்பர், பெரிய நாயகி, லிங்கம் — பிரமபுரீசர், திருநிலைநாயகி, சங்கமம் — சட்டைநாதர். இதுவன்றி ஆழ்வார்கள் மங்களாசாசனம் பெற்ற திருமால் கோயில் — காழிச் சீராம விண்ணகரம் ஒன்றும் உள்ளது.

சீர்காழியைப் பற்றி 71 தேவராப் பதிகங்கள் மூவரால் அருளப் பெற்றவை உள்ளன. மேலும் பட்டினத்தடிகளின் திருக்கழுமல மும்மணிக் கோவையும், வடுகநாத தேசிகரின் காழியந்தாதியும் அருணாசலக்கவிராயரின் சீர்காழித் தலபுராணமும், மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் சீர்காழிக் கோவையும், சீர்காழியைப் பற்றி அறிந்து கொள்ள ஏதுவாய் உள்ளன. சம்பந்தர், காழிச் சிறம்பல நாடிகள், சீகாழிக் கண்ணுடைய வள்ளலார் முதலியோர் அவதரித்த சிறப்புடைய ஊராகும்.

இவ்வட்டத்தின் மொத்த ஊர்கள் 101.

# ஊர்ப்பெயர் முடிபுகள்

## (பொதுக்கூறுகள்)

ஒவ்வொரு ஊரின் முடிபுகளையும் கொண்டு அவ்வவ்வூரின் பெயர்க்காரணத்தை ஆராய அம்முடிபுகள் ஓரளவிற்குத் துணை செய்கின்றன. சில முடிபுகள் மட்டும் எந்த விதத்திலும் பொருள் தராது, அம்முடிபுகளைக் கொண்டோ, அல்லது வேறு வகையிலோ அவ்வூர்களின் பெயர்க் காரணத்தை ஆய்வதற்கு துணை ஆகாமல் அமைந்திருக்கின்றன. பெரும்பாலான ஊர்ப்பெயர் முடிபுகள் இயற்கை நில அமைப்பினைக் காரணமாக கொண்டு உள்ளன. எல்லா மாவட்டங்களிலுமே ஊர்ப்பெயர்களுள், ஊர், நல்லூர், நாடு, நகரம், நகர், புரம், குடி, காடு, மங்கலம், பாடி, குறிச்சி என்னும் முடிபுகள் பெரும்பாலும் பயின்று வந்துள்ளதை காணமுடிகிறது. ஒரோவழி வேறு வேறு முடிபுகளும் பயிலுதலைக் காணமுடிகிறது. இயற்கையாகவே தமிழகத்தின் ஒவ்வொரு மாவட்டமும் ஒவ்வொரு இயற்கை அமைப்பினை — நில அமைப்பினை பெற்றிருத்தல் கண் கூடு. அவ்வாறு இருக்கும் ஊர்கள் பெரும்பான்மை அவ்வவ் மாவட்ட நில அமைப்பிற்கு ஏற்ப பெயர் முடிபுகளைக் கொண்டிருந்தலை அவ்வவ்வூர்ப் பட்டியல்களில் காண முடிகிறது. இருப்பினும் மாவட்டங்களின் இயற்கை — நில அமைப்பிற்கு ஏற்ப பெயர் முடிபுகளைப் பெற்றிருப்பினும், காடு, குடி, புரம், ஊர் என்னும் முடிபுகள் பெரும்பான்மை எல்லா மாவட்டங்களிலுமே பெருக வழங்கப்படுவதைக் காணமுடிகிறது. அவ்வகையில் தஞ்சை மாவட்டம் எல்லா வகையான இயற்கை அமைப்பினையும் அதாவது ஐவகை நிலப்பகுதிகளையும் ஓரளவு பெற்றிருப்பதால் அதற்கேற்ப எல்லா விதமான பெயர் முடிபுகளையுமே கொண்டிருத்

தலை நன்கு அறிய முடிகிறது. அதிலும் மேற்சொன்னவாறு, காடு, குடி புரம், ஊர், மங்கலம் என்னும் பெயர் முடிபுகள் மிக அதிகமாகக் காணப்படுதலையும் அறிய முடிகிறது. இனி தஞ்சை மாவட்டத்தின் ஊர்ப் பெயர் முடிபுகளையும், அவற்றால் அறியலாகும் அவ்வூர் அமைப்பினையும் காண்குவம்.

இவ்வூர்ப்பெயர் முடிபுகள் அனைத்தையும் இருவகையாக அடக்கலாம். இயற்கை அமைப்பினைக் குறிக்கும் — நிலம், நீர், மலை, குன்று போன்ற இயற்கை முடிபுகளைக் கொண்டவை என்றும், செயற்கையாக உருவாக்கப்பட்ட தோட்டம், துரவு, தோப்பு, கொல்லை, கோயில், கோட்டை, விளாகம் என்றும் இம்முடிபுகளை வகைப்படுத்தலாம்.

1. இயற்கைப் பெயர்கள் (இயற்கைக் கூறுகள்) :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | நல்லூர் | 11. | ஏரி | 21. | வேலி |
| 2. | ஊர் | 12. | கரை | 22. | வெளி |
| 3. | குடி | 13. | ஓடை | 23. | வட்டம் |
| 4. | காடு | 14. | திட்டு | 24. | முட்டம் |
| 5. | கோட்டகம் | 15. | திடல் | 25. | கரம்பை |
| 6. | துறை | 16 | இருப்பு | 26. | குப்பை |
| 7. | கால் | 17. | இருக்கை | 27. | குன்னம் |
| 8. | குளம் | 18. | தீவு | 28. | குறிச்சி |
| 9. | சமுத்திரம் | 19 | பட்டி | 29. | உக்கடை |
| 10. | புலம் | 20 | பாடி | 30. | அகரம் |
| | | | | 31. | நத்தம் |

2. செயற்கைப் பெயர்கள் (செயற்கைக் கூறுகள்) :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | புரம் | 12. | கொல்லை | 23. | அக்ரஹாரம் |
| 2. | மங்கலம் | 13. | கட்டளை | 24. | தெரு |
| 3. | சேரி | 14. | சத்திரம் | 25. | வயல் |
| 4. | குப்பம் | 15. | கோவில் | 26. | வல்லம் |
| 5. | கோட்டை | 16 | கோவில்பற்று | 27. | வாசல் |
| 6 | தோட்டம் | 17. | விளாகம் | 28. | பேட்டை |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7. | நந்தவனம் | 18. | காவல் | 29 | பள்ளி |
| 8. | பாக்கம் | 19. | விடுதி | 30. | பாளையம் |
| 9. | பட்டினம் | 20. | நாடு | 31. | தெரு |
| 10 | பட்டம் | 21. | நகர் | 32 | கண்டம். |
| 11. | தோப்பு | 22. | நகரம் | | |

நல்லூர், ஊர் :

நல்லூர் ஊர் என்னும் இவ்விரு முடிபுகளைத் தாங்கிய ஊர்கள் மொத்த எண்ணிக்கை 518 ஆகும். இவற்றினை ஈண்டு உரைப்பின் பெருகுமாதலால் சான்றிற்கு சில ஊர்ப்பெயர்களை மட்டும் காண்குவம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | மணவாள நல்லூர் | -நன்-81 | 1. | களத்தூர் | -வலங்-39 |
| 2. | கொங்கராய நல்லூர் | -நன்-42 | 2. | ஆச்சானூர் | -திருவை-71/1 |
| 3. | செம்பிய நல்லூர் | -நன்-44 | 3. | கண்டியூர் | -மயில் -37/1 |
| 4. | செருமாக்க நல்லூர் | -பாப-104 | 4. | கல்லூர் | -கும்ப -84 |
| 5. | அவளிவநல்லூர் | -வலங் 84 | 5. | கீவளூர் | -திரு -42 |

குடி -:

வாழ்விடம், குடியிருப்பு, ஊர் என்று அகராதிகள் பொருள் தருகின்றன. இம்முடிபினைக் கொண்ட ஊர்களின் மொத்த எண்ணிக்கை 299. சான்றிற்குச் சில ஊர்கள் :

| | | | |
|---|---|---|---|
| 1. | அம்மங்குடி | ... ஒரத் | ... 109 |
| 2. | ஆலக்குடி | ... தஞ் | ... 61 |
| 3. | உத்திரங்குடி | ... குட | ... 187 |
| 4. | கடுகக்குடி | ... நன் | ... 8 |
| 5. | கார்குடி | ... திரு | ... 118 |
| 6. | செருகுடி | ... திருவிடை | ... 21 |
| 7, | திம்மக்குடி | ... கும்ப | ... 102/3 |
| 8. | நாக்குடி | ... கும்ப | ... 100/1 |
| 9. | பருத்திக்குடி | ... திருவை | ... 74/2 |
| 10. | மருதங்குடி | ... சீர் | ... 58 |

காடு :-

பாலை நிலமாக உள்ள பகுதிகளையும், வனமாக—மரங்கள் அடர்ந்த பகுதிகளையும் காடெனக் குறிப்பிடுவது வழக்கம். இம் முடிபுகளைக் கொண்ட ஊர்களின் மொத்த எண்ணிக்கை 85. சான்றுகளுக்குச் சில ஊர்ப்பெயர்கள் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கோடியக்காடு | ... | வேதா | ... | 133 |
| 2. | சோலைக்காடு | ... | பேரா | ... | 187 |
| 3. | தெற்குக்காடு | ... | திருத் | ... | 136 |
| 4. | பாண்டிப்பழமனைக்காடு | ... | ஒரத் | ... | 35/1 |
| 5. | பூனைக் குத்திக்காடு | ... | பேரா | ... | 110 |
| 6. | மரவக்காடு | ... | மன் | ... | 95 |
| 7. | வாத்தலைக்காடு | ... | பேரா | ... | 111 |
| 8. | விளாங்காடு | ... | திருத் | ... | 107/1 |

புரம் :-

இம்முடிபுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்களின் மொத்த எண்ணிக்கை 224. சான்றுக்குச் சில ஊர்ப்பெயர்கள் வருமாறு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அரிச்சபுரம் | ... | நீடா | ... | 35 |
| 2. | ஆத்திராமபுரம் | ... | திருவிடை | ... | 13/4 |
| 3. | இராமநாதபுரம் | ... | தஞ் | ... | 147 |
| 4. | உத்தமதானபுரம் | ... | பாப | ... | 22 |
| 5. | கல்யாணராமநாதபுரம் | ... | பேரா | ... | 175 |
| 6. | சேங்காலிபுரம் | ... | குட | ... | 102 |
| 7. | தியாகராஜபுரம் | ... | திருவிடை | ... | 46/1 |
| 8. | நாடியம்பாள்புரம் | ... | பட்டு | ... | 205 |
| 9. | பாஸ்கரராஜபுரம் | ... | திருவிடை | ... | 27/3 |
| 10. | மதுர பாஷிணிபுரம் | ... | பேரா | ... | 153 |
| 11. | ரெகுநாயகிபுரம் | ... | பேரா | ... | 107 |
| 12 | லெட்சுமிநரசிம்மபுரம் | ... | பேரா | ... | 49/1 |
| 13. | வேதநாயகிபுரம் | ... | ஒரத் | ... | 118 |

**மங்கலம் :**

மங்கலம் என்னும் முடிபுனைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 88. சான்றாக சில ஊர்ப்பெயர்கள். (சதுர் வேதி மங்கலம் என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்படும் ஊர்ப் பெயர்கள் அவ்விடத்தில் என்ன காரணத்தால் அவ்வாறு வழங்கப் படுகின்றனவோ, அவ்வாறின்றி, யாதொரு காரணமும் இல்லாமல் இயல்பாகவே மங்கலம் என்ற குறிப்பினைக் கொண்டு வருவன )

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கொத்தமங்கலம் | ... | நீடா | ... | 13/1 |
| 2. | சேத்தமங்கலம் | ... | மன் | ... | 84 |
| 3. | தலையாமங்கலம் | ... | மன் | ... | 101 |
| 4. | நீடாமங்கலம் | ... | நீடா | .... | 22 |
| 5. | புள்ள மங்கலம் | ... | நீடா | ... | 68 |
| 6. | மன்னிமங்கலம் | ... | நீடா | ... | 81 |
| 7. | வளத்தாமங்கலம் | ... | நீடா | ... | 34/2 |

**சேரி :**

சேரி என்னும் இம்முடிபைக் கொண்டுள்ள ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 73. சேரி என்பது ஊரைச் சேர்ந்த தெருக்கள் சிலவற்றிற்கும், ஒரு பெருங்கிராமத்தை ஒட்டிய சிற்றூருக்கும், ஒவ்வொரு இனத்தவர் வாழ்ந்த தெருவுக்கும் அவ்வவ் இனத்தவர் பெயரால் (தொல்காப்பியக் கருத்து) வழங்கப் பட்டுள்ளது. தற்போதைய வழக்கு நிலையில் ஒவ்வொருஊரிலும் சேரி என்பது தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் இடமாக வழங்கப் பட்டு வருகிறது. முன்னைய நிலையில் சேரி என்பது நல்லவொரு சிறப்பான பொருளையும், தற்போதைய நிலையில் மாறான ஒரு பொருளையும் கொண்டு விளங்குதலைக் காண முடிகிறது. சான்றாகச் சில ஊர்ப் பெயர்கள் வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அடிப்புதுச்சேரி | ... | திரு | .... | 12 |
| 2. | இலந்தவனஞ்சேரி | ... | குட | .... | 105/1 |
| 3. | எரவாஞ்சேரி | .... | திரு | ... | 22 |
| 4. | ஒழுகச்சேரி | ... | திருவிடை | ... | 15/2 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5. | ஒடாச்சேரி | ... | திரு | ... | 13 |
| 6. | கீழராதாவனஞ்சேரி | ... | திரு | ... | 41/3 |
| 7. | செண்பகச்சேரி | ... | மயில் | ... | 32/4 |
| 8. | தென்னஞ்சேரி | ... | திருவை | ... | 76/3 |
| 9. | நெடுஞ்சேரி | ... | குட | ... | 106 |
| 10. | பனஞ்சேரி | ... | பேரா | ... | 84/1 |
| 11. | மகிழஞ்சேரி | ... | நன் | ... | 126 |
| 12. | வண்டுவாஞ்சேரி | ... | வேதா | ... | 113 |

**கோட்டகம் :**

கோட்டகம்-என்பது ஆழ்நீர் நிலை, நீர்த்தேங்கியுள்ள பகுதி என்ற பொருளினை உடையது. இம் முடிபினைக் கொண்ட ஊர்ப் பெயர்கள் சுமார் 30 ஆகும். சான்றிற்குச் சில வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அக்கரைக் கோட்டகம் | ... | மன் | ... | 109 |
| 2. | கிருஷ்ணன் கோட்டகம் | ... | குட | ... | 210 |
| 3. | சோழமன் கோட்டம் | ... | மயில் | ... | 8/1 |
| 4. | தானிக்கோட்டம் | ... | வேதா | ... | 114 |
| 5. | பிச்சன் கோட்டம் | ... | திருத் | ... | 68 |
| 6. | ராமநாயக்கன்கோட்டகம் | ... | மயில் | ... | 19/2 |

**கோட்டை :**

இம்முடிபினைக் கொண்ட ஊர்ப்பெயர்களின் மொத்த எண்ணிக்கை 40 ஆகும். தஞ்சை மாவட்டத்தில் கோட்டை என்ற பெயரினைப் பெற்றுள்ள சிலஊர்கள் உண்மையிலேயே அவ்வூரில் ஏதோவொரு கோட்டையை உடையதாயும், வேறு சில ஊர்கள் காரணமின்றி கோட்டை என்ற முடிபினைக்கொண்டதாயும் உள்ளன. பட்டுக்கோட்டை வட்டம்சிறுசிறு கோட்டைகள் உள்ள ஊர்கள் அடங்கிய வட்டமாக உள்ளதைக் காணமுடிகிறது. சான்றாகச் சில ஊர்ப் பெயர்கள் வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அத்திக் கோட்டை | ... | மன் | ... | 7/1 |
| 2. | ஆண்டாக் கோட்டை | ... | பேரா | ... | 62 |
| 3. | காரக்கோட்டை | ... | தஞ் | ... | 5/1 |

4. சூரக் கோட்டை ... தஞ் ... 153/2
5. திருமக்கோட்டை ... மன் ... 145
6. நாஞ்சிக் கோட்டை ... தஞ் ... 153/2
7. பருத்திக் கோட்டை ... மன் ... 145
8. மூவர்கோட்டை ... மன் ... 1
9. வாழமிரான்கோட்டை ... தஞ் ... 103

**தோட்டம் :**

தோட்டம்-என்னும் இம்முடிபினைக் கொண்ட ஊர்களின் மொத்த எண்ணிக்கை 93. பெரும்பான்மை கோயில்களுக்கு மானிய மாக வழங்கப்பட்ட பெரிய நந்தவனம் அடங்கிய ஊராக உள்ளதை இம்மாவட்டத்தில் காணமுடிகிறது. மன்னார்குடி வட்டத்தைச் சேர்ந்த ஊர்ப்பெயர்களே தோட்டம் என்ற முடிபினை அதிகம் கொண்டுள்ளன. மேலும் இவை பெரும்பான்மையாக இஸ்லாம் இனத்தவரின் பெயருடன் இணைந்து வருவதைக் காணமுடிகிறது. சான்றுகள் வருமாறு :

1. அரசூர் சின்ன ஆவுசாகிப்த் தோட்டம் ... திருவை... 68/3
2. ஆசாப் பக்கிரித் தோட்டம் ... மன்... 140
3. இலுப்பாணித் தோட்டம் ...திருவிடை... 77/2
4. ஈஸ்வந்தராவ் தோட்டம் ... தஞ்... 98/2
5. உதாரமங்கலத் தோட்டம் ... பாப...115/1
6. ஓகைப் பேரையூர்த் தோட்டம் ... நீடா... 64/1
7. கோட்டூர்த் தோர்ட்டம் ... மன்... 87
8. சந்தியாமண்டபத் தோட்டம் .... தஞ்...102/16
9. தண்டந் தோட்டம் ... கும்ப ..126
10. நீலகண்ட காடேராவ் தோட்டம் ... மன்.... 8/1
11. பீகாஜி மடிகேராவ் தோட்டம் ... மன்.... 8/2
12. முருகன் தோட்டம் ... மயில்...126/1
13. ரெங்கமாவுத்தன் தோட்டம் ... மன்.... 8/5
14. வெங்கடராவ் காடேராவ் தோட்டம் .... மன்... 8/1

**சத்திரம் :**

1. சேதுபாவா சத்திரம்...பேரா...104
2. செட்டிச் சத்திரம் ...நீடா... 16/1

சத்திரம் என முடியும் ஊர்ப்பெயர்கள் அருகியே காணப் படுகின்றன.

**துறை :**

துறை என்ற முடிபினைக் கொண்ட ஊர்களின் மொத்த எண்ணிக்கை 19. இது பொதுவாக இடம் என்ற பொருளினையும் சிறப்புப் பொருளாக, நீர்த்துறை, கடற்றுறை என்பதையும் குறிக் கிறது. பெரும்பாலான ஊர்ப்பெயர்கள் நீர்த்துறை சிறப்பாலேயே பெயர் பெற்று இருப்பதை அறிய முடிகிறது. பெயர்கள் வருமாறு :-

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அண்டகத் துறை | ... வேதா | ... | 65/2 |
| 2. | இலந்துறை | ... கும்ப | ... | 74/1 |
| 3. | திருப்பந்துறை | ... கும்ப | ... | 129 |
| 4. | குமணன்துறை | ... திருவிடை | ... | 49/1 |
| 5. | சோத்துறை (படுகை) | ... நீடா | ... | 15/1 |
| 6. | திருச்சோற்றுத்துறை | ... திருவை | ... | 79/2 |
| 7. | திருப்பாலத்துறை | ... பாப | ... | 29/3 |
| 8. | திருமாந்துறை | ... திருவிடை | ... | 50 |
| 9. | திருவாவடுதுறை | ... மயில் | ... | 41 |
| 10. | மயிலாடுதுறை | ... மயில் | ... | 62 |
| 11. | புதுத்துறை | ... சீர் | ... | 72 |
| 12. | புளியந்துறை | ... சீர் | ... | 34 |

**கால் :**

பெரும்பான்மை இடத்தினையும், வாய்க்கால் என்பதனையும் பொருளாகக் கொண்டுள்ளது. மொத்த ஊர்ப்பெயர்கள் எண்ணிக்கை 8. பெயர்கள் வருமாறு :-

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆய் வாய்க்கால் | ... ஒரத் | ... 24 |
| 2. | குவளைக் கால் | ... நன் | ... 125 |
| 3. | சடையங்கால் | ... வலங் | ... 87/1 |
| 4. | பக்கிரி தைக்கால் | ... சீர் | ... 13/3 |
| 5. | பைங்கால் | ... பேரா | ... 13 |
| 6. | மணக்கால் | ... வலங் | ... 87 |
| 7. | வெங்கிடக்கால் | ... திரு | ... 27 |

குளம் :

நீர் நிலையைக் குறிக்கும் முடிபு. இம்முடிபினைக் கொண்ட ஊர்ப்பெயர்களின் மொத்த எண்ணிக்கை 23.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆண்டிக் குளம் | ... மன் | ... 9/1 |
| 2. | குருங்குளம் | ... நன் | ... 36 |
| 3. | குருங்குளம் (மேல்பாதி) | ... தஞ் | ... 117 |
| 4. | குருங்குளம் (கீழ்பாதி) | ... தஞ் | ... 116 |
| 5. | கொண்டிக் குளம் | ... பட்டு | ... 29 |
| 6. | செட்டிக் குளம் | ... திரு | ... 4/2 |
| 7. | செம்மங்குளம் | ... மன் | ... 8/4 |
| 8. | சேரங்குளம் | ... மன் | ... 94 |
| 9. | தாண்டவக் குளம் | ... சீர் | ... 38 |
| 10. | நெடுங்குளம் | ... தஞ் | ... 11/2 |
| 11. | நெடுங்குளம் | ... நன் | ... 27 |
| 12. | நைனாங்குளம் | ... பட்டு | ... 211 |
| 13 | பஞ்சநதிக்குளம் | ... வேதா | ... 120 |
| 14. | பனங்குளம் | ... பேரா | ... 122 |
| 15. | பூங்குளம் | ... நன் | ... 114 |
| 16. | மருங்குளம் | ... தஞ் | ... 115 |
| 17. | மாதிரன் குளம் | ... மயில் | ... 1/1 |
| 18. | வில்லங் குளம் | ... திரு | ... 2/6 |
| 19. | விளங்குளம் | ... பேரா | ... 61 |
| 20. | வேப்பங்குளம் | ... பட்டு | ... 25 |

**சமுத்திரம் :**

இம்முடிபினைக் கொண்ட ஊர்ப்பெயர்களின் மொத்த எண்ணிக்கை 16. இதுவும் நீர் நிலையை—பரந்துபட்ட நீர்நிலையைக் குறிக்கும் முடிபு. ஆயினும் ஊர்ப் பெயர்களில் இது இணைந்த காரணம் பற்றி ஆய்வு செய்யும்போது அவ்வூரில் சமுத்திரமோ அல்லது சமுத்திரம் இருந்ததற்கான அறிகுறியையோ காணமுடியவில்லை. பெரும்பாலும் தமிழ் நாட்டு மன்னர்களால், செல்வந்தர்களால் உண்டாக்கப்பட்ட பெரிய ஏரிகளும், குளங்களும் கடல், சமுத்திரம் என்ற பெயரில் அழைக்கப்பட்டதாகத் தெரிகிறது. அவ்வாறான ஏரிகளையே சில ஊர்ப்பெயர்களில் சமுத்திரம் என்ற நிலையில் காணமுடிகிறது. இனி இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் வருமாறு :

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அம்மா சமுத்திரம் | ... கும்ப | ... | 98/1 |
| 2. | கொண்ட சமுத்திரம் | ... திருவிடை | ... | 32 |
| 3. | கோபால சமுத்திரம் | ... சீர் | ... | 10 |
| 4. | கோபால சமுத்திரம் | ... பட்டு | ... | 154 |
| 5. | திருமலை சமுத்திரம் | ... தஞ் | ... | 125 |
| 6. | தியாக சமுத்திரம் | ... பாப | ... | 17 |
| 7. | தீட்ச சமுத்திரம் | ... திருவை | ... | 29 |
| 8. | பாலாயி அக்ரஹாரம் ரெகுநாத சமுத்திரம் | ... பட்டு | ... | 161/1 |
| 9. | பாலோஜி ரெகுராம சமுத்திரம் | ... பட்டு | ... | 162 |
| 10. | மகாராஜ சமுத்திரம் | ... பட்டு | ... | 204 |
| 11. | மன்னார் சமுத்திரம் | ... திருவை | ... | 45 |
| 12. | ரெகுராம சமுத்திரம் | ... பட்டு | ... | 147 |
| 13. | விளந்திட சமுத்திரம் | ... சீர் | ... | 51 |
| 14. | வெங்கிட சமுத்திரம் | ... திருவை | ... | 28 |
| 15. | வெங்கிட சமுத்திரம் (முதல் சேத்தி) | ... திருவை | ... | 43 |
| 16. | வெங்கிட சமுத்திரம் | ... மயில் | ... | 212 |

**புலம் :**

பொதுவாக நிலம் என்னும் பொருளையும், சிறப்பாக தண்ணீர்த் தேங்கி நிற்கும் ஆழ்நீர் நிலையும் குறிக்கும். இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் வருமாறு:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆயக்காரன்புலம் | ... | வேதா | ... | 128 |
| 2 | கத்திரிப் புலம் | ... | ,, | ... | 61 |
| 3. | கருப்பம் புலம் | ... | ,, | ... | 125 |
| 4. | குரவப்புலம் | ... | ,, | ... | 129 |
| 5. | செட்டிப்புலம் | ... | ,, | ... | 59 |
| 6. | தாமரைப் புலம் | ... | ,, | ... | 53/1 |

**ஏரி :**

ஏரின் உதவி கொண்டு செய்யப்படுவதாகிய பயிர்த்தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுவதாகிய நீரைக் தேக்கிவைப்பதால் உண்டான ஆழ்ந்தகன்ற நீர் நிலைக்கு ஏரி எனப்பெயர் ஏற்பட்டது. ஏரி என்னும் முடிபினைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஏரி | ... | வலங் | ... | 32/1 |
| 2. | குரும்பேரி | ... | திரு | ... | 18/6 |
| 3. | சடையனேரி | ... | மயில் | .. | 57/2 |
| 4. | சலிப்பேரி | ... | நன் | ... | 121 |
| 5. | பனையேரி | ... | மயில் | ... | 125 |
| 6. | பழமானேரி | ... | திருவை | .... | 18 |
| 7. | மாரனேரி | ... | தஞ் | ... | 15 |

**கரை :**

பொதுவாக எல்லை என்ற பொருளை உடையது. கடற்கரையில் அமைந்த சில ஊர்களைக் குறிக்கவும் கரை என்பது வழங்கப்பட்டது. சோழ நாட்டுக் கடற்கரை சோழ மண்டலக் கரை (கோர மண்டல் கரை — ஆங்கிலேயர் வழக்கு) எனவும், பாண்டி நாட்டுக் கடற்கரை முத்துக்கரை எனவும், சேர நாட்டுக் கடற்கரை மேல் கரை எனவும் வழங்கப்பட்டது. ஒரோவழி ஆற்றங்கரையில் அமைந்த ஊர்களும் கரை என்ற முடிபு பெற்று வழங்கப்பட்டன. கரை என்னும் முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அண்டாங் கரை | ... | திருத் | ... | 12 |
| 2. | அன்னக் கரை | ... | திருவிடை | ... | 15/1 |
| 3. | ஆலிக் கரை | ... | திருவை | ... | 81/1 |
| 4 | உக்கரை | ... | திருவிடை | ... | 16 |
| 5 | ஏரிபுரை கரை | ... | பட்டு | ... | 251 |
| 6. | கக்கரை | ... | ஒரத் | ... | 5 |
| 7. | கருவாழக் கரை | ... | பொ | ... | 87 |
| 8. | குளிக்கரை | ... | குட | ... | 224 |
| 9. | கொல்லங்கரை | ... | தஞ் | ... | 113 |
| 10. | கோடியக் கரை | ... | வேதா | ... | 133/1 |
| 11. | சமுதாயக் கரை | ... | நீடா | ... | 34/3 |
| 12. | சாரைக்கரை | ... | பேரா | ... | 55 |
| 13. | சேகரை | ... | நீடா | ... | 39 |
| 14. | தென்கரை | ... | நன் | ... | 135 |
| 15. | பரவாக்கரை | ... | நன் | ... | 2 |
| 16. | பிராந்தியக் கரை | ... | வேதா | ... | 65 |
| 17. | மணக்கரை | ... | நீடா | ... | 74 |
| 18. | மேல்கரை | ... | குட | ... | 203/1 |
| 19. | மேல வாழக்கரை | ... | நாகை | ... | 162 |
| 20. | மூலக்கரை | ... | வேதா | ... | 66 |
| 21. | வடகரை | ... | திருவிடை | ... | 75/2 |
| 22. | ,, | ... | நன் | ... | 132 |
| 23. | ,, | ... | திருத் | ... | 28 |
| 24. | ,, | ... | திரு | ... | 54 |
| 25. | ,, | ... | மயில் | ... | 135/2 |
| 26 | வார்வாங்கரை | ... | கும்ப | ... | 149/1 |
| 27. | வாழக் கரை | ... | நாகை | ... | 123 |
| 28. | வெங்கரை | ... | ஒரத் | ... | 81 |

ஓடை :

சிறு வாய்க்கால் போன்ற, இயற்கையாக நீர் ஓடுகின்ற நீர் நிலைக்கு ஓடை என்று பொருள். இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கல்யாண ஓடை | ... | பட்டு | ... | 161 |
| 2. | காலிங்கராய னோடை | ... | மயில் | ... | 65/4 |
| 3. | செம்போடை | ... | வேதா | ... | 52 |
| 4. | ஜாம்புவானோடை | ... | திருத் | ... | 104 |
| 5. | வெண்ணால் ஓடை | ... | தஞ் | ... | 108 |

**பாக்கம் :**

கடற்கரையினை அடுத்துள்ள ஊரினையும், மருத நிலத்துச் சிற்றூர்களையும், ஒரு பெருங்கிராமத்தின் பக்க ஊர்களையும் (சிறுகிராமம்) பாக்கம் என்ற பெயரால் குறிப்பிடுவர் நெய்தல் நிலத்துச் சிற்றூர்களே பெரும்பாலும் பாக்கம் என்ற பெயரில் வழங்கப்படும். சென்னையை ஒட்டியுள்ள, மீனம்பாக்கம், வில்லிவாக்கம் (பாக்கம் என்பதன் திரிபு), கோடம்பாக்கம், நுங்கம்பாக்கம், அரும்பாக்கம் என்னும் சிற்றூர்கள் இவ்வாறு எழுந்தனவே என்ப. இம்முடிபினைப் பெற்ற ஊர்ப்பெயர்கள் வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அத்திப்பாக்கம் | ... | திருவிடை | ... | 120 |
| 2. | ஆத்துப்பாக்கம் | ... | பொ | ... | 175/1 |
| 3. | ஆறப்பாக்கம் | ... | சீர் | ... | 19 |
| 4. | சிலம்பாக்கம் | ... | மயில் | ... | 38/3 |
| 5. | பசுபதிபாக்கம் | ... | மயில் | ... | 17/4 |
| 6. | பாக்கம் | ... | நன் | ... | 166/1 |
| 7. | பாக்கம் | ... | மயில் | ... | 17/3 |
| 8. | முளப்பாக்கம் | ... | மயில் | ... | 76/2 |

**பட்டினம் :**

கடற்கரையினை அடுத்துள்ள பெருநகரங்கள் பட்டினம் என்ற பெயரால் அழைக்கப்படும். சென்னபட்டினம், மசூலிப் பட்டினம், காவிரிப் பூம்பட்டினம், நாகப்பட்டினம், அதிராம் பட்டினம் என்பன இவ்வாறு எழுந்தனவே யாம். இப்பெயரில் வரும் ஊர்கள் வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அதிராம் பட்டினம் | ... | பட்டு | ... | 69 |
| 2. | சரபேந்திரராஜன் பட்டினம் | ... | பட்டு | ... | 259 |

| | | | |
|---|---|---|---|
| 4. | தம்பிக்கு நல்லான் பட்டினம் | ... மயில் | ... 62/3 |
| 5. | தென்னம் பட்டினம் | .. சீர் | .... 75 |
| 6. | நாகப்பட்டினம் | ... நாகை | ... 34 |
| 7. | பட்டினம் | ... கும்ப | ... 96 |
| 8. | புதுப்பட்டினம் | ... தஞ் | ... 100 |
| 9 | ,, | ... சீர் | ... 33 |
| 10. | ,, | ... பட்டு | ... 53 |
| 11. | மகாதேவப் பட்டினம் | ... மன் | .... 140 |
| 12. | வாய்க்கால் பட்டினம் | ... மயில் | ... 62 |
| 13. | வேதாரண்யம் பட்டினம் | ... வேதா | ... 132/1 |

**பட்டம் :**

பொதுவாக நீர்நிலையையும், சிறப்பாக நாற்றங்கால் சேகரித்து வைக்கும் இடத்தையும் குறிக்கும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பட்டம் | ... திருவிடை | ... 34/5 |
| 2. | வடக்குப்பட்டம் | ... வலங் | ... 48 |
| 3. | தெற்குப்பட்டம் | ... ,, | .... 49 |

**நந்தவனம் :**

இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் எண்ணிக்கை 2.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆத்தார்யா நந்தவனம் | ... தஞ் | ... 102/6 |
| 2. | கோபிகா நந்தவனம் | ... ,, | ... 102/5 |

**தோப்பு :**

இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் எண்ணிக்கை 3.

| | | | |
|---|---|---|---|
| 1. | நெல்லித் தோப்பு | ... பாப | ... 119 |
| 2. | புளியந் தோப்பு | .... தஞ் | .... 99 |
| 3. | புளியந் தோப்பு | .... ,, | ... 99/1 |

**கொல்லை :**

இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் எண்ணிக்கை 16. அவை வருமாறு :—

| | | | |
|---|---|---|---|
| 1. | இஞ்சிக் கொல்லை | ... கும்ப | ... 152 |
| 2. | கமலாலயன் கொல்லை | ... குட | ... 167/5 |
| 3. | கீரைக் கொள்ளை கொல்லை | ... தஞ் | ... 96 |
| 4. | காளகஸ்தியப்ப முதலிக் கொல்லை | ... திரு | ... 3/4 |
| 5. | செட்டிக் கொல்லை | ... ,, | ... 2/2 |
| 6. | தேப் பெருமாள் கொல்லை | ,, | ... 2/5 |
| 7. | தியாகராஜன் கொல்லை | ... ,, | ... 2/7 |
| 8. | நாசப்பன் கொல்லை | ... ,, | ... 4/3 |
| 9. | பிச்சைக் கொல்லை | ... ,, | ... 3/5 |
| 10. | புதுக் கொல்லை | ... ,, | ... 48/2 |
| 11. | பூலான் கொல்லை | ... பேரா | ... 182 |
| 12. | மல்லியக் கொல்லை | ... மயில் | ... 22/1 |
| 13. | மேடயக் கொல்லை | ... ஒரத் | ... 119 |
| 14. | மேலக் கொல்லை | ... குட | ... 167/3 |
| 15. | ,, | ... திரு | 3/3 |
| 16. | வான்மீகிநாதன் கொல்லை | ... குட | ... 167/4 |

**கட்டளை :**

கோயில் தருமமாக விடப்படும் ஊர்கள் பெரும்பாலும் கட்டளை என்னும் முடிபைப் பெற்றிருக்கின்றன. இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் எண்ணிக்கை 27.

| | | | |
|---|---|---|---|
| 1. | அபிசேகக் கட்டளை | ... நாகை | ... 39/1 |
| 2. | ,, | ... மயில் | ... 62/1 |
| 3. | ,, | ... நாகை | ... 38/1 |
| 4. | ,, | ... ,, | ... 24/1 |
| 5. | அம்மாக் கட்டளை | ... திரு | ... 49/2 |
| 6. | அர்த்த ஜாமக்கட்டளை | .... திருவிடை | ... 77/7 |
| 7. | இரண்டாம் கட்டளை | ... கும்ப | .. 121/1 |
| 8 | இனாம் ஆனந்த வல்லியம்மன் கட்டளை | ... தஞ் | ... 86/6 |
| 9. | கமலாலயன் கட்டளை | ... குட | ... 167/1 |
| 10. | குமரக் கட்டளை | .... திரு | ... 8/2 |
| 11. | சித்தம்பரங்கட்டளை | ... மயில் | ... 77/3 |

12. சுகந்தங் கட்டளை ... திரு ... 57/1
13. செட்டிக் கட்டளை ... மயில் ... 2/1
14. செவதிராஜன் கட்டளை ... திரு ... 18/1
15. சேர்வைக் கட்டளை ... ,, ... 2/8
16. சேர்வைக்காரன் கட்டளை ... ,, ... 29/1
17. சோழர் கட்டளை ... மயில் ... 77/4
18. திருப்பதிக் கட்டளை ... திரு ... 3/2
19. பட்டமங்கலம் அபிசேகக் கட்டளை ... மயில் ... 56/1
20. பழவாத்தான் கட்டளை ... கும்ப ... 113
21. மாணிக்கவாசகன் கட்டளை ... நன் ... 165/2
22. ,, ... திரு ... 7/1
23. முஞ்சான் கட்டளை ... மன் ... 29/2
24. ரகுபதிக் கட்டளை ... மயில் ... 130/1
25. ராமசாமிப்பிள்ளைக் கட்டளை ... தஞ் ... 101/1
26. வாசுதேவக் கட்டளை ... மயில் ... 77/5
27. வெள்ளைப் பிள்ளையார்க் கட்டளை ... திரு ... 60/1

**கோயில் பத்து :-**

கோயில் பற்று என்பதே வழக்கில் கோயில் பத்தாய்த் திரிந்துள்ளது. இதுவும் கோயில் தர்மத்திற்காக மானியமாக விடப்படும் ஊர்களையே பெரும்பாலும் குறிக்கிறது. இது தென்னாட்டில் பத்து எனவும் வடநாட்டில் பட்டு எனவும் திரிந்து வழங்கும். இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்த எண்ணிக்கை 28.

1. அபிராமி கோயில் பத்து ... மயில் ... 33/1
2. ஈஸ்வரன் கோயில் பந்து ... திருவை ... 52
3. உடையவர் கோயில் பத்து ... பொ ... 99
4. கீழ்க் கோயில் பத்து ... வலங் ... 134
5. குத்தகைக் கோயில் பத்து ... மயில் ... 39/1
6. குத்தாலம் கோயில் பத்து ... ,, ... 85/3

| | | | |
|---|---|---|---|
| 7. | ,, | ... ,, | ... 130/1 |
| 8. | கொருக்கைக் கோயில் பத்து | ... ,, | ... 29/2 |
| 9. | கோயில் பத்து | ... ,, | ... 26/2 |
| 10. | ,, | ... ,, | ... 150/4 |
| 11. | ,, | ... திரு | ... 46/1 |
| 12. | ,, | ... மயில் | ... 150/3 |
| 13. | ,, | ... தஞ் | ... 36 |
| 14. | ,, | ... மயில் | ... 51/1 |
| 15. | ,, | ... வேதா | ... 47 |
| 16. | ,, | ... திருவிடை | ... 64/1 |
| 17. | ,, | ... ,, | ... 75/1 |
| 18. | ,, | ... ,, | ... 4/1 |
| 19. | ,, | ... ,, | ... 34/1 |
| 20. | சிக்கல் பத்து | ... நாகை | ... 84/1 |
| 21. | செம்பியன் கோயில் பத்து | ... மயில் | ...134/1/A |
| 22. | தலையுடையார் கோயில் பத்து | ... பொ | ... 101 |
| 23. | திருமங்கலம் கோயில் பத்து | ... மயில் | ... 48/5 |
| 24. | நட்டுவான் கோயில் பத்து | ... மன் | ... 117/1 |
| 25. | பல்லவராயன் பேட்டைக் கோயில் பத்து | ... மயில் | ... 58/6 |
| 26. | பெருமாள் கோயில் பத்து | ... ,, | ... 136 |
| 27. | ராமச்சந்திரன் கோயில் பத்து | ... பொ | ... 100/2 |
| 28. | வாஞ்சூர் கோயில் பத்து | ... நன் | ... 150/1 |

**கோவில் :-**

கோவில்—கோயில் என இருவிதமாகவும் இம்முடிபுகள் வழங்குகின்றன. இம்முடிபுகளைக் கொண்டுள்ள ஊர்களுள் சில சிறப்பான ஒரு கோயிலை உடையதாய், அப்பெயராலேயே ஊரும் வழங்குவதாய் இருக்கின்றன. வேறு சில அவ்வாறில்லாமல் யாது காரணத்தாலோ கோயில் என்ற முடிபினைக் கொண்டுள்ளன. ஒரு வேளை அவையும், சிறப்பான கோயில்களின் அடிப்படையில் அமைந்திருந்தது. காலப்போக்கில் அவை அழிந்திருக்கலாம் எனத்

தோன்றுகிறது, இம்முடிபுகள் கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்த எண்ணிக்கை 23.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அரிக் கோவில் | ... | திருவிடை | ... 36/1 |
| 2. | ஆலந்துரையப்பர் கோவில் | ... | மயில் | ... 56/1/A |
| 3. | கோட்டக் கோயில் | ... | திருவிடை | ... 66/3 |
| 4. | கோயில் பாதி | ... | ,, | ... 23/3 |
| 5. | கைலாசநாதர் கோயில் | ... | மயில் | ... 55/3 |
| 6. | ,, | ... | மன் | ... 47 |
| 7. | சம்பந்தர் கோயில் | ... | மயில் | ... 56/2 |
| 8. | சித்தபலம் நாடியார் கோயில் | ... | ,, | ... 56/3 |
| 9. | சின்ன ஆவுடையார் கோயில் | ... | பட்டு | ... 249 |
| 10. | சுந்தர பெருமாள் கோவில் (வடபாதி) | ... | கும்ப | ... 107/2 |
| 11. | சுந்தர பெருமாள் கோவில் (தென் பாதி) | ... | ,, | ... 107 |
| 12. | சூரியனார் கோயில் | ... | திருவிடை | ... 51 |
| 13. | செம்பியனார் கோயில் | ... | பொ | ... 84 |
| 14. | தாடாளங் கோயில் | ... | சீர் | ... 52 |
| 15. | நாச்சியார் கோயில் | ... | கும்ப | ... 140 |
| 16. | பசுபதி கோயில் | .. | பாப | ... 106 |
| 17. | பாப்பா கோயில் | ... | நாகை | .... 85 |
| 18. | பருத்தியப்பர் கோயில் | ... | ஒரத் | ... 29/2 |
| 19. | ,, | ... | ,, | ... 44/1 |
| 20. | ,, | ... | ,, | ... 27/1 |
| 21. | பெருமாள் கோயில் | ... | பாப | ... 3 |
| 22. | மூப்பக் கோயில் | ... | கும்ப | ... 97 |
| 23. | ராமநாதன் கோயில் | ... | நீடா | ... 43 |

**திடல், திட்டு:**

மேடு, வெளியிடம் என்ற பொருள்படுவன. இம்முடிபுகள் கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்த எண்ணிக்கை 10.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | திட்டு | ... மயில் | ... | 6/1 |
| 2. | ,, | ... திருவிடை | ... | 2/3 |
| 3. | திட்டை | ... தஞ் | ... | 88 |
| 4. | ,, | ... சீர் | ... | 46 |
| 5. | காரைத்திடல் | ... மன் | ... | 122/1 |
| 6. | கொண்டவட்டான் திடல் | ... தஞ் | ... | 90 |
| 7. | நடுசெட்டித்திடல் | ... திருவிடை | ... | 29/1 |
| 8. | நடுத்திட்டு | ... மயில் | ... | 15/1 |
| 9. | மாளிகைத்திடல் | ... வலங் | ... | 35 |
| 10. | வேட்டத்திடல் | ... மன் | ... | 30/2 |

## இருப்பு இருக்கை :

இருப்பிடம், ஊர் என்னும் பொருள்களைத் தருவன. இம் முடிபுகளைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 10.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இருக்கை | ... திரு | ... | 72 |
| 2. | இடையிருப்பு | ... பாப | ... | 89 |
| 3. | கார்த்தியாயினிருப்பு | ... சீர் | ... | 67 |
| 4. | செம்பதனிருப்பு | ... ,, | ... | 68 |
| 5. | சேத்திருப்பு | ... மயில் | ... | 135/3 |
| 6. | பூனாயிருப்பு | ... வலங் | ... | 63 |
| 7. | மாவுத்திருப்பு | ... திருவிடை | ... | 35 |
| 8. | வாண்டையானிருப்பு | ... ஒரத் | ... | 30 |
| 9. | ,, | ... திருவிடை | ... | 35/2 |
| 10. | வேட்டைக்காரனிருப்பு | ... நாகை | ... | 138 |

## மேடு :

மேட்டில் அமைந்த ஊர்கள் என்று பொருள் கூறுப. இம் முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 16. திட்டு, திட்டை என்பனவும் இவ்வகையில் சேருமெனலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அகரமணல் மேடு | ... மயில் | ... | 4/1 |
| 2. | கட்டி மேடூர் | ... திருத் | ... | 69 |
| 3. | கள்ளிமேடு | ... வேதா | ... | 53 |

| | | | |
|---|---|---|---|
| 4. | காரைமேடு | ... சீர் | ... 66 |
| 5. | காவளமேடு | ... மயில் | ... 17/2 |
| 6. | கிடாத்தலை மேடு | ... ,, | ... 33/2 |
| 7. | ,, (உக்கடை) | ... ,, | ... 33/3 |
| 8. | சக்கிமேடு | ... ,, | ... 34/1 |
| 9 | செங்கி மேடு (உக்கடை) | ... ,, | ... 51/6 |
| 10. | பண்ணித்தலை மேடு | ... ,, | ... 23/2 |
| 11. | பரப்பனமேடு | ... நீடா | ... 14 |
| 12. | மணல்மேடு | ... திருவிடை | ... 37/2 |
| 13. | ,, | ... மயில் | ... 4 |
| 14. | டி. மணல்மேடு | ... பொ | ... 97 |
| 15. | முதலை மேடு | ... சீர் | ... 29 |
| 16. | வாய்மேடு | ... வேதா | ... 106 |

பட்டி :

முல்லை நிலச் சிற்றூராகக் கருதப்படுகிறது. இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 27.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆசாம் பட்டி | ... தஞ் | ... 137 |
| 2. | ஆவாரம் பட்டி | ... ,, | ... 34 |
| 3. | இனாத்கான் பட்டி | ... ,, | ... 154 |
| 4. | கல்விராயன் பட்டி | ... ,, | ... 154/1 |
| 5. | ,, | ... ,, | ... 60 |
| 6. | காங்கேயம் பட்டி | ... ,, | ... 14 |
| 7. | காவாலிப் பட்டி | ... ஒரத் | ... 38 |
| 8. | குருவாடிப் பட்டி | ... தஞ் | ... 126 |
| 9. | கோடாரப் பட்டி | ... ,, | ... 14/1 |
| 10 | சாணுரப் பட்டி | ... ,, | ... 142 |
| 11. | சாமிப்பட்டி | ... ஒரத் | ... 19/2 |
| 12. | சுக்கிரம் பட்டி | ... பட்டு | ... 176 |
| 13. | செங்கிப்பட்டி | ... தஞ் | ... 131 |
| 14. | சென்னம் பட்டி | ... ,, | ... 123 |
| 15. | சொரக்குடி பட்டி | ... ,, | ... 13 |
| 16. | திருக்காணூர்பட்டி | ... ,, | ... 118 |

| | | | | |
|---|---|---|---|---|
| 17. | தொண்டராயன்பட்டி | ... | ,, | ... 32 |
| 18. | நந்தவனம் பட்டி | ... | ,, | ... 33 |
| 19. | பாலையப்பட்டி (வடக்குச் சேத்தி) | ... | ,, | ... 139 |
| 20. | பாலையப்பட்டி (தெற்குச் சேத்தி) | ... | ,, | ... 136 |
| 21. | பிள்ளையார் பட்டி | ... | ,, | ... 120 |
| 22. | புதுப்பட்டி | ... | ,, | ... 130 |
| 23. | மனையேறிப் பட்டி | ... | ,, | ... 141 |
| 24. | மாப்பிள்ளை நாயக்கன் பட்டி | ... | ,, | ... 119/1 |
| 25. | முத்து வீரக் கண்டியன் பட்டி | ... | ,, | ... 143 |
| 26. | ராயமுண்டான் பட்டி | ... | ,, | ... 146 |
| 27. | வெண்டயம் பட்டி | ... | ,, | ... 144 |

**பாடி :**

முல்லை நிலச் சிற்றூராகவும், மன்னன், குறுநிலத் தலைவன் ஆகியோரின் படை வீடு கொண்ட இடமாகவும், பெருநகரமாகவும் பொருள் கொள்ளப்படுகிறது. இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 19.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அறுவாப் பாடி | ... | மயில் | ... 27 |
| 2. | ,, (உக்கடை) | ... | ,, | ... 27/1 |
| 3. | ஆலத்தம் பாடி | ... | திருத் | ... 21 |
| 4. | உம்பளாப் பாடி | ... | பாப | ... 9 |
| 5. | ஓலைப்பாடி | ... | ,, | ... 13 |
| 6. | கடித்தம்பாடி | ... | கும்ப | ... 90 |
| 7. | குணதலைப் பாடி | ... | சீர் | ... 51 |
| 8. | ,, | ... | திருவிடை | ... 26/2 |
| 9. | கோட்டப்பாடி | ... | நன் | ... 48 |
| 10. | சத்திரப்பாடி | ... | பொ | ... 177/1 |
| 11. | சேசபாடி | ... | கும்ப | ... 135 |
| 12. | தன்னிலப்பாடி | ... | நாகை | ... 97 |

| | | | |
|---|---|---|---|
| 13. | திருவாய்ப்பாடி | ... திருவிடை | ... 36/3 |
| 14. | நக்கன் பாடி | ... மயில் | ... 143/1 |
| 15. | ,, | ... ,, | ... 148 |
| 16. | நீலப்பாடி | ... திரு | ... 44/2 |
| 17. | பெரப்பாடி | ... மயில் | ... 17/1 |
| 18. | மானம்பாடி | ... திருவிடை | ... 38 |
| 19. | வேட்டையம்பாடி | ... மயில் | ... 7/3 |

**விளாகம் :**

போர்க்களம், சூழிடம் என்னும் பொருளைக் கொண்டது. ஊரின் புறத்தே அல்லது ஒரு பெரு நகரினைச் சுற்றி இருந்த, சிறு சிறு கிராமங்களைக் குறிப்பதாத இருக்கலாம் எனத் தோன்றுகிறது இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் 10.

| | | | |
|---|---|---|---|
| 1. | கொட விளாகம் | ... பொ | ... 166 |
| 2. | சரஸ்வதி விளாகம் | ... சீர் | ... 9/1 |
| 3. | ,, | ... ,, | ... 10/1 |
| 4. | சுந்தர விளாகம் | ... திரு | ... 9/1 |
| 5. | சோழிய விளாகம் | ... திருவிடை | ... 6/1 |
| 6. | திருப்பதி விளாகம் | ... திரு | ... 4/1 |
| 7. | தில்லை விளாகம் | ... திருத் | ... 105 |
| 8. | விளாகம் | ... மயில் | ... 66/3 |
| 9. | ,, | ... நன் | ... 5 |
| 10. | ,, | ... பொ | ... 164 |

**வேலி :**

நில அளவாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது. இம்முடிபினைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 10.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆலவேலி | ... பொ | ... 69 |
| 2. | தழுவேலி | ... மயில் | ... 153/2 |
| 3. | ,, | ... ,, | ... 134/1 |
| 4. | ஐவேலி | ... ,, | .... 75/B |
| 5. | ,, | ... தஞ் | ... 101/4 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6. | ,, | ... | ,, | ... | 101/1 |
| 7. | ஒம்பத்து வேலி | ... | திருவை | ... | 24 |
| 8. | ,, | ... | பாப | ... | 94 |
| 9. | கடுவேலி | ... | திருவை | ... | 155 |
| 10. | மூவேலி | ... | தஞ் | ... | 101/2 |

**வெளி:**

யாது காரணத்தால் அமைந்தது எனச் சரியாகப் புலனாக வில்லை. இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 12. வெளியிடம்—நிலம் என்பது பொருளாக இருக்கலாமோ எனத் தோன்றுகிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆலவெளி | ... | திருவிடை | ... | 30/1 |
| 2. | காட்டுவெளி | ... | ,, | ... | 24/2 |
| 3. | குத்தையவெளி | ... | மயில் | ... | 30/3 |
| 4. | மேலவெளி | ... | ,, | ... | 55/3 |
| 5. | ,, | ... | ,, | ... | 65/2 |
| 6. | பட்டவெளி | ... | திருவிடை | ... | 25/1 |
| 7. | பொன்வெளி | ... | நாகை | ... | 39/4 |
| 8. | வடக்குவெளி | ... | திரு | ... | 23/1 |
| 9. | ,, | ... | ,, | ... | 23/2 |
| 10. | ,, | ... | ,, | ... | 41/3 |
| 11. | ,, | ... | ,, | ... | 43/3 |
| 12. | ,, | ... | ,, | ... | 42/1 |

**வட்டம்:**

எல்லை, மண்டிலம் என்னும் பொருள்படும். இம் முடிபினைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 5.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | அக்கரை வட்டம் | ... | ஒரத் | ... | 111 |
| 2. | நாயர் வட்டம் | ... | மயில் | ... | 146/6 |
| 3. | பொய்யா வட்டம் | ... | ,, | ... | 141/4 |
| 4. | முக்கால் வட்டம் | ... | நன் | ... | 166/1 |
| 5. | வழுதலை வட்டம் | ... | பட்டு | ... | 194 |

## முட்டம் :

பொதுவாக ஊர் என்ற பொருளைத் தருவது.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கமுக்கான் முட்டம் | ... மயில் | ... | 53/4 |
| 2. | திட்டாணி முட்டம் | ... குட | .... | 218 |
| 3. | முட்டம் | ... மயில் | ... | 61/1 |

## கரம்பை :

பாழ்நிலம், தரிசு எனப் பொருள்படும். இம்முடிபு கொண்டவை மொத்தம் 7.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அரசலங் கரம்பை | ... பேரா | ... | 35 |
| 2. | ஏனாதிக் கரம்பை | ... ,, | ... | 13 |
| 3. | குருவிக் கரம்பை | ... ,, | ... | 112 |
| 4. | சின்ன அரசலங்கரம்பை | ... ,, | ... | 18 |
| 5. | புக்கரம்பை | ... பட்டு | ... | 246 |
| 6. | மனைக் கரம்பை | ... திருவை | ... | 94 |
| 7. | வாணியன் கரம்பை | ... வலங் | ... | 29/3 |

## காவல் :

கோட்டையைச் சுற்றி எழுப்பப்படும் காவற்காடு என்று பொருள்படும். அக்காவற்காடே பின்னர் ஊராக மாறியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கீழ்க் காடு காவல் | ... தஞ் | ... | 106/6 |
| 2. | திருக்கரைக் காவல் | ... மயில்... | ... | 8/2 |
| 3. | திருக்கோடிக் காவல் | ... திருவிடை | ... | 27/3 |

## குப்பை, குப்பம், குண்ணம் ;

நெய்தல் நிலச் சிற்றூரினை இவ்வாறு கூறுப. இன்று குப்பம் என்பது பிற்பட்டோர் வசிக்கும் இடத்தினைக் குறிப்பதாக இருக்கிறது. இம்முடிபுகள் கொண்ட ஊர்ப்பெயர்கள் எண்ணிக்கை 15.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆனைக் குப்பம் | ... நன் | ... 124 |
| 2. | உளுத்தம் குப்பம் | ... மயில் | ... 64 |
| 3. | ஓலையக் குண்ணம் | ... பட்டு | ... 20 |
| 4. | குண்ணம் | ... சீர் | ... 7 |
| 5. | நெய்க் குப்பை | ... திருவிடை | ... 8 |
| 6. | ,, | ... நன் | ... 156 |
| 7. | ,, | ... மயில் | ... 156/3 |
| 8. | ,, | ... குட | ... 184 |
| 9. | ,, | ... ,, | ... 117 |
| 10. | ,, | ... ,, | ... 91/1 |
| 11. | பாடியக் குண்ணம் | ... வலங் | ... 133 |
| 12. | ,, | ... திருவிடை | ... 11/1 |
| 13. | மணக் குண்ணம் | ... ,, | ... 19/2 |
| 14. | மேலத் திருமதிக் குண்ணம் | ... குட | ... 216 |
| 15. | வாழராயன் குப்பம் | ... மயில் | ... 155/1 |

குப்பை — கூட்டம் என்ற பொருளில் மக்கள் கூடி வாழும் சிறு சிறு இடங்களைக் குறிக்கவும் வழங்கப்பட்டிருக்கலாம்.

## குறிச்சி :

குறிஞ்சி நிலத்தூரினைக் குறிச்சி என்ப. இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் எண்ணிக்கை 20.

| | | | |
|---|---|---|---|
| 1. | கருப்பிராயன் குறிச்சி | ... திருவிடை | ... 44/1 |
| 2. | கருவாக் குறிச்சி | ... மன் | ... 142 |
| 3. | கன்னியாக் குறிச்சி | ... பட்டு | ... 22 |
| 4 | காட்டுக் குறிச்சி | ... ஒரத் | ... 22 |
| 5. | ,, | ... பாப | ... 91 |
| 6. | கீழக் குறிச்சி | ... பட்டு | ... 138 |
| 7. | கீழ நம்மங் குறிச்சி | ... திருத் | ... 102/2 |
| 8. | குறிச்சி | ... நாகை | ... 189 |
| 9. | குறிச்சி | ... திருவிடை | ... 18 |
| 10. | ,, | ... பட்டு | ... 63 |
| 11. | ,, | ... மன் | ... 102 |
| 12. | ,, | ... மயில் | ... 7 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | துவரங் குறிச்சி | ... | பட்டு | ... 169 |
| 14. | நடவக் குறிச்சி | ... | ,, | ... 219 |
| 15. | பாலக் குறிச்சி | ... | நாகை | ... 98 |
| 16. | ,, | ... | நீடா | ... 69 |
| 17. | மாவடுக் குறிச்சி | ... | பேரா | ... 38 |
| 18. | மேலநம்மங் குறிச்சி | ... | திருத் | ... 102/1 |
| 19. | முத்தாக் குறிச்சி | ... | பட்டு | ... 24 |
| 20. | வீரக் குறிச்சி | ... | ,, | ... 31 |

**உக்கடை :**

உட்கிடை என்பதே உக்கடை என்றாகியிருக்கலாம் எனத் தோன்றுகிறது. வயல்களுக்கு இடையே அமைந்த சிறு சிறு மக்கள் வாழும் இடங்களையே, உக்கடை எனக் குறிக்கின்றனர். அவ்விடங்களை அதன் அருகே உள்ள பெருங்கிராமத்தின் பெயருடன் சேர்த்து வழங்குவதும் வழக்கமாயிற்று இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்த எண்ணிக்கை 19.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அதம்பர் உக்கடை | ... | நன் | ... 84 |
| 2. | உக்கடை | ... | வலங் | ... 81 |
| 3. | ,, | ... | திருவிடை | ... 44/3 |
| 4. | ஒட்டங்காடு உக்கடை | ... | பட்டு | ... 240 |
| 5. | கட்யைங்காடு உக்கடை | ... | ,, | ... 220 |
| 6. | கிழாய் உக்கடை | ... | மயில் | ... 16/2 |
| 7. | செட்டி உக்கடை | | ,, | ... 51/2 |
| 8 | சேத்தனுக்கடை | ... | ,, | ... 68/2 |
| 9 | சேசயன் உக்கடை | ... | ,, | ... 31/2 |
| 10. | சோக்கன் உக்கடை | ... | ,, | ... 21/2 |
| 11. | தர்மராயன் உக்கடை | ... | ,, | ... 49/3 |
| 12. | நோக்காக்னுகடை | ... | மன் | ... 105/1 |
| 13. | மணமேடு உக்கடை | ... | மயில் | ... 4/2 |
| 14 | முதலியார் உக்கடை | ... | ,, | ... 4/3 |
| 15. | வக்காரமாரி உக்கடை | ... | ,, | ... 3/3 |
| 16. | வட்டாக்குடி உக்கடை | ... | பட்டு | ... 171 |
| 17. | வெங்கராயனுக்கடை | ... | திருவிடை | ... 27/2 |

| | | | | |
|---|---|---|---|---|
| 18. | வெண்கலராயனுக்கடை | ... | மயில் | 27/5 |
| 19 | வேம்பங்காடு உக்கடை | ... | பட்டு ... | 177 |

**விடுதி :**

இம்முடிபினைக் கொண்ட ஊர்ப்பெயர்கள் 10. மன்னனாலோ வேறு சிலராலோ அக்காலத்தில் ஒரு ஊர்விட்டு மற்றொரு ஊர் செல்லும் வழியில் இளைப்பாறிச் செல்லும் பொருட்டு கட்டப்பட்ட சத்திரம் இருந்திருக்கலாம் எனத்தோன்றுகிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | இலுப்பை விடுதி | ... | ஓரத் | ... | 108 |
| 2. | உஞ்சி விடுதி | ... | ,, | ... | 36 |
| 3. | காடுவெட்டி விடுதி | ... | ,, | ... | 40 |
| 4. | செருவா விடுதி (தென்பாதி) | ... | பட்டு | ... | 45 |
| 5. | ,, (வடபாதி) | .. | ,, | ... | 44 |
| 6. | சென்னிய விடுதி | ... | ஓரத் | ... | 75 |
| 7. | தணிகை விடுதி | ... | ,, | ... | 110 |
| 8. | தோப்பு விடுதி | ... | ,, | ... | 37 |
| 9. | நெய்வ விடுதி | ... | பட்டு | ... | 196 |
| 10. | பணிக்கொண்டான் விடுதி | ... | ஓரத் | ... | 39 |

**நாடு, நகர், நகரம் :**

இம்முடிபினைக் கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 17. இம் முடிபுகள் பொதுவாக ஊர் என்ற பொருளையும், நகரம் என்பது சிறப்பான ஊர்களையும், நாடு என்பது பெரும் பிரிவினையும், சிற்சில வழிச் சிற்றூர்களையும், நகர் என்பது, ஊரின் ஒரு பகுதியையும் குறிப்பதாக வழங்கி வருவதைக் காணமுடிகிறது.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஊமத்த நாடு | ... | பேரா | ... | 96 |
| 2. | ஒக்க நாடு | ... | ஓரத் | ... | 8 |
| 3. | கச்ச நகரம் | ... | திருத் | ... | 30 |
| 4. | கஞ்சா நகரம் | ... | பொ | ... | 72 |
| 5. | கட்டா நகரம் | ... | திருவிடை | ... | 41 |
| 6. | டி. கட்டா நகரம் | ... | ,, | ... | 34/2 |
| 7. | கொர நாடு | ... | மயில் | ... | 54 |

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | சின்னக்கட்டா நகரம் | ... | திருவிடை | ... 36/1 |
| 9. | ,, | ... | ,, | ... 41/1 |
| 10. | ,, | ... | ,, | ... 34/1 |
| 11. | தென்னம நாடு | ... | ஒரத் | ... 25 |
| 12. | திருநகர் | ... | சீர் | ... 72 |
| 13. | நகர் | ... | நீடா | ... 20 |
| 14. | டி.சி. நகரம் | ... | திருவிடை | ... 34/7 |
| 15. | பழையநகரம் | ... | பேரா | ... 36 |
| 16. | வங்கநகர் | ... | திருத் | ... 83 |

**அகரம் :**

பொதுவாக ஊர் என்ற பொருளையும், சிறப்பாகப் பார்ப்பணச் சேரியையும் குறிக்கும். இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்தம் 7.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அம்மையகரம் | ... | திருவை | ... 40 |
| 2 | ஆணைமேலகரம் | ... | மயில் | ... 58 |
| 3. | ஜம்பதுமேலகரம் | ... | திருவை | ... 55 |
| 4. | சிவனார் அகரம் | ... | மயில் | ... 142 |
| 5. | பெருமாளகரம் | ... | குட | ... 209 |
| 6. | வெள்ளாளகரம் | ... | மயில் | ... 63 |
| 7. | வெள்ளாளகரம் (கோயிற்பத்து) | ... | ,, | ... 63/2 |

**அக்ரஹாரம் :**

இன்று அந்தணர்கள் என்னும் ஒரு வகுப்பினர் வசிக்கும் தெருவிற்கு இப்பெயர் வழங்கப்படுகிறது. இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 7.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அண்ணலக்கிரஹாரம் | ... | கும்ப | ... 112 |
| 5. | கணபதி அக்கிரஹாரம் | ... | பாப | ... 140 |
| 3. | பள்ளியக்கிரஹாரம் | ... | தஞ் | ... 86 |
| 4. | பாலாயி அக்கிரஹாரம் | ... | பட்டு | ... 148 |
| 5. | புது அக்கிரஹாரம் | ... | மயில் | ... 62/2 |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. | வடுவூர் அக்கிரஹாரம் | ... மன் | ... | 4 |
| 7. | லட்சுமிநாயக்கர் அக்ரஹாரம் | ... தஞ் | ... | 102/2 |

**தெரு :**

இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 6.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கவளாத் தெரு | .... மயில் | ... | 56/5 |
| 2. | சன்னதி வீதி | ... ,, | ... | 53/2 |
| 3. | சாந்தட்டைத் தெரு | ... ,, | | 56/4 |
| 4. | துக்கான் குறுக்குத் தெரு | ... ,, | ... | 83/6 |
| 5. | பள்ளத் தெரு | ... திருத் | | 26 |
| 6. | வினாயகன் தெரு | ... திருவிடை | ... | 15 |

**நத்தம் :**

ஊர் பொதுவான இடம் நத்தம் எனப்படும். பார்ப்பணர் அல்லாதார் வசிக்கும் பகுதி என்றும் பொருள் கூறுப[2]. தற்போது நத்தம் என்பது சிறுபான்மையோர் வசிக்கும் இடத்திற்கு வழங்கப் பட்டு வருகிறது. இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 17.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இடையார் நத்தம் | ... நீடா | ... | 16/3 |
| 2. | எடையா நத்தம் | ... மன் | ... | 134/2 |
| 3. | கத்திரி நத்தம் | ... பாப | ... | 122/1 |
| 4. | கன்னியா நத்தம் | ... மயில் | ... | 33/7 |
| 5. | சம்பள நத்தம் | ... வலங் | ... | 43 |
| 6. | சார நத்தம் | ... ,, | ... | 64 |
| 7. | சோனங்கி நத்தம் | ... திருவிடை | ... | 65/2 |
| 8. | நத்தம் | ... பொ | ... | 70 |
| 9. | நரசிங்க நத்தம் | .... ,, | ... | 117 |
| 10. | பழைய நத்தம் | ... திருத் | ... | 7/1 |
| 11. | பிள்ளையார் நத்தம் | ... தஞ் | ... | 65 |
| 12. | புலவர் நத்தம் | ... வலங் | ... | 72 |
| 13. | ,, | ... பாப | ... | 120 |
| 14. | பெருமாள் கோவில் நத்தம் | ... மன் | ... | 131/1 |

2. திருநெல்வேலி மாவட்ட இடப்பெயராய்வு, ஆ. சுப்பிர மணியன், பக். 57

| | | | |
|---|---|---|---|
| 15. | பொன்மா நத்தம் | ... திருவிடை | ... 34/6 |
| 16. | மாராச்சேரி நத்தம் | ... மன் | ... 132 |
| 17. | மேல நத்தம் | ... நன் | ... 164/4 |

கண்டம் :

நிலப்பெரும் பிரிவினைக் கண்டம் என்று குறிப்பிடுப. இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 5.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஐவேலிக் கண்டம் | ... மயில் | ... 38/1 |
| 2. | ,, | ... ,, | ... 15/2 |
| 3. | காரைக் கண்டம் | ... ,, | ... 136/2 |
| 4. | வடகண்டம் | ... குட | ... 175 |
| 5. | விளந்த கண்டம் | ... கும்ப | ... 58 |

வல்லம் :

அரன் சூழ்ந்த ஊரினை வல்லம் என்ற பெயரால் அழைப்ப. இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் 9.

| | | | |
|---|---|---|---|
| 1. | அகர வல்லம் | ... பொ | ... 161 |
| 2. | ஆய வல்லம் | ... மயில் | ... 57 |
| 3. | பழைய வல்லம் | ... திரு | ... 14 |
| 4. | புலி வல்லம் | ... ,, | ... 48 |
| 5. | வல்லம் | ... நாகை | ... 125 |
| 6. | ,, | ... மயில் | ... 44/3 |
| 7. | ,, | ... ,, | ... 4/6 |
| 8. | வல்லம் (தெற்குச் சேத்தி) | ... தஞ் | ... 122 |
| 9. | ,, (வடக்குச் சேத்தி) | ... ,, | ... 121 |

வயல் :

இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 34. சான்றுக்குச் சில வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1. | எண்ணாணி வயல் | ... பட்டு | ... 223 |
| 2. | எட்டி வயல் | ... ,, | ... 256 |
| 3. | எரளி வயல் | ... ,, | ... 266 |

| | | | |
|---|---|---|---|
| 4. | எழுத்தாணி வயல் | ... ,, | ... 221 |
| 5. | கடின வயல் | ... வேதா | ... 123 |
| 6. | கரிச வயல் | ... பட்டு | ... 114 |
| 7. | கள்ளி வயல் | ... ,, | ... 258 |
| 8. | கார்க்கா வயல் | ... ,, | ... 212 |
| 9. | கூத்தாடி வயல் | ... ,, | ... 65 |
| 10. | கைவினி வயல் | ... பேரா | ... 108 |

வயலின் தன்மையைக் குறிப்பதாய் அமைந்துள்ள ஊர்ப் பெயர்களும் இவற்றில் உண்டு. சான்று—கடின வயல், கரிச வயல், கள்ளி வயல் போன்றன.

**வாசல் :**

வாயில் என்றும் வழங்கப்படும். கோட்டை வாயிலாக இருந்த இடங்கள், மன்னன் மாளிகை வாசலாக இருந்த இடங்கள் போன்றனவே இவ்வாறு பின்னாளில் ஊர்ப் பெயராக வழங்கப்படுகிறது. இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 25. பொதுவாக ஊர் என்ற பொருளையும் இம்முடிபு குறிக்கும். சான்றுக்குச் சில :-

| | | | |
|---|---|---|---|
| 1. | அன்ன வாசல் | ... பொ | ... 80 |
| 2. | ,, | ... நீடா | ... 31 |
| 3. | ,, | ... குட | ... 101 |
| 4. | ஈஸ்வர வாசல் | ... திரு | ... 16/1 |
| 5. | குடவாசல் | ... குட | ... 99 |
| 6. | கொத்தவாசல் | ... நன் | ... 69 |
| 7. | திருமுல்லை வாசல் | ... சீர் | ... 40 |
| 8. | நெடுவாசல் | ... வலங் | ... 82 |
| 9. | நெய்வாசல் | ... மயில் | ... 28/4 |
| 10. | பிள்ள வாசல் | ... பேரா | ... 52 |
| 11. | ,, | ... திரு | ... 114 |
| 12. | புனவாசம் | ... நீடா | ... 61 |
| 13. | பொன் வாசல் | ... திருவை | ... 72 |

## பேட்டை :

பொதுவாக ஊர் என்ற பொருளையும், சிறப்பாகத் தொழில் காரணமாகவும் வழங்கப்படும். இம்முடிபு கொண்ட ஊர்ப் பெயர்கள் மொத்தம் 37. சான்றிற்குச் சில :-

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அகரப் பேட்டை | ... திருவை | ... | 6 |
| 2. | அய்யம் பேட்டை | ... பாப | ... | 105/1 |
| 3. | உப்புக்காய்ச்சிப் பேட்டை | ... திருவை | ... | 79 |
| 4. | கஞ்சம் பேட்டை | ... திருவிடை | ... | 79/3 |
| 5. | கத்தியம் பேட்டை | ... சீர் | ... | 16 |
| 6. | சிக்கல் நாயக்கன் பேட்டை | ... திருவிடை | ... | 33 |
| 7. | சோளம் பேட்டை | ... மயில் | ... | 51 |
| 8. | தேவராயன் பேட்டை | ... பாப | .. | 102 |
| 9. | நரசிங்கன் பேட்டை | ... திருவிடை | ... | 46 |
| 10. | வண்ணாரப்பேட்டை | ... கும்ப | ... | 103/3 |

## பட்டு :

பொதுவாகச் சிற்றூர் என்னும் பொருள்படும். இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்தம் எண்ணிக்கை 12.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | ஆம்பளாம் பட்டு | ... ஒரத் | .... | 121 |
| 2. | இலுப்பப் பட்டு | ... மயில் | ... | 4/9 |
| 3. | கண்டிதம்பட்டு | ... தஞ் | ... | 151/1 |
| 4. | காலாரப்பட்டு | ... ஒரத் | ... | 19 |
| 5. | கீழ்ப்பட்டு | ... நீடா | ... | 1/2 |
| 6. | கீழவன்னிப்பட்டு | ... ஒரத் | ... | 78 |
| 7. | குளிச்சம் பட்டு | ... தஞ் | ... | 152 |
| 8. | கொல்லங்கரை வல்லுண்டாம் பட்டு | ... ,, | ... | 114 |
| 9. | தொண்டாரம் பட்டு | ... ஒரத் | ... | 15 |
| 10. | புகல் குளிச்சப்பட்டு | ... பாப | ... | 122/3 |
| 11. | நாஞ்சிக் கோட்டை வல்லுண்டாம் பட்டு | ... தஞ் | ... | 119 |
| 12. | வரதம் பட்டு (உக்கடை) | ... மயில் | ... | 14/1 |

**பாடு :**

இடம் என்னும் பொருள்படும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | கொளப் பாடு | ... திருத் | ... 32 |
| 2. | சேனப் பாடு | ... திருவிடை | ... 63/4 |

**பள்ளி :**

இம்முடிபு பொதுவாக ஊர், சேரி என்ற பொருளையும், சிறப்பாக முனிவர்கள் வாழ்கின்ற இடத்தினையும், சமணப்பள்ளிகள், பௌத்தப் பள்ளிகள் (கோயில்) சிறப்புற்ற இடத்தினையும் குறிக்கும். இம்முடிபு கொண்ட ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 8.

| | | | |
|---|---|---|---|
| 1. | அகஸ்தியம் பள்ளி | ... வேதா | ... 132 |
| 2. | சக்கரப் பள்ளி | ... பாப | ... 4/2 |
| 3. | சாக்கியப் பள்ளி | ... மயில் | ... 53/7 |
| 4. | திருக்காட்டுப் பள்ளி | ... திருவை | ... 23 |
| 5, | திருச்சம் பள்ளி | ... பொ | ... 83 |
| 6. | பணம் பள்ளி | ... மயில் | ... 64/1 |
| 7. | மகேந்திரப் பள்ளி | ... சீர் | ... 31 |
| 8. | மருதப் பள்ளி | ... பொ | ... 104 |

**பள்ளம் :**

தாழ்வான இடத்தில் அமைந்த ஊர்களைக் குறிக்கும். மொத்த எண்ணிக்கை 13.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆரப் பள்ளம் | ... சீர் | ... 36 |
| 2. | ஆலப் பள்ளம் | ... நீடா | ... 17/1 |
| 3. | ,, | ... பட்டு | ... 130 |
| 4. | கருவியம் பள்ளம் | ... சீர் | ... 25/1 |
| 5. | கீழப்பெரும் பள்ளம் | ... பொ | ... 103 |
| 6. | கோனுலாம் பள்ளம் | ... திருவிடை | ... 1/3 |
| 7. | சூரப்பள்ளம் | ... பட்டு | ... 175 |
| 8. | தச்சுலாம் பள்ளம் | .... திருவிடை | ... 1/4 |
| 9. | நத்தப் பள்ளம் | ... திருத் | ... 28 |
| 10. | மருங்கப் பள்ளம் | ... பேரா | ... 119 |

| | | | |
|---|---|---|---|
| 11. | மன்னிப் பள்ளம் | ... மயில் | ... 11/1 |
| 12. | மேலப்பெரும் பள்ளம் | ... பொ | ... 102 |
| 13. | வெள்ளப் பள்ளம் | ... வேதா | ... 48 |

**பாளையம் :**

சேனை தங்கியிருந்த இடம் என்ற பொருள் தரும். இம்முடிபினைக் கொண்ட ஊர்கள் மொத்தம் 5.

| | | | |
|---|---|---|---|
| 1. | சிங்காரப் பாளையம் | ... வலங் | ... 29/2 |
| 5. | தளவாய்ப் பாளையம் | ... பாப | ... 122/4 |
| 3. | பழையப் பாளையம் | ... சீர் | ... 37 |
| 4. | மேட்டுப் பாளையம் | ... திருத் | ... 4 |
| 5. | ,, | ... மயில் | ... 156/5 |

# சிறப்புக் கூறுகள்

## விலங்குப் பெயர்கள்

மரப்பெயர்கள் போலவே ஊர்ப்பெயர்கள் பல விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் தொடர்பாலும் பெயர் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது. பெரும்பாலும் இவை ஊர்க்கோயில் தொடர்பாகவும், புராணங்களில் இடம் பெற்றதாகவும் அமைவதைக் காணமுடிகிறது. அவ்வகையில் அமைந்த ஊர்ப்பெயர்களுள் பசு, மயில் ஆகிய இரண்டின் தொடர்பாக அமைந்தவைகளே அதிகமாகக் காணப்படுகின்றன. சான்றாக ஒரு சில பெயர்கள் வருமாறு :

### 1. ஆவூர் : (வலங் - 30)

இவ்வூர் ஆவூர் எனவும், கோயில் பசுபதீசுவரம் எனவும் வழங்கப்படுகின்றது. இறைவி இறைவனைப் பசு வடிவில் இருந்து வழிபட்டதாகவும், அதனாலேயே இறைவனுக்குப் பசுபதீஸ்வரர் எனவும், கோயிலுக்குப் பசுபதீஸ்வரம் எனவும், ஊர் ஆவூர் எனவும் அழைக்கப் படுவதாகத் தலபுராணம் கூறும்.

### 2. கோமல் : (மயில் – 134)

பசுவாக உருவெடுத்து வந்த இறைவியை இடையனாக உருக் கொண்ட விஷ்னு வழிப்பட்ட இடம் எனத் தலபுராணம் குறிப்பிடும். கோ—பசு மால்—விஷ்ணு.

### 3. திருக்கொளம்பியம் : (மயில் 136/1)

பசுவாக உருக்கொண்டு வந்த இறைவி திருவாவடுதுறையில் உள்ள இறைவனை வழிபடும் பொருட்டு, பல இடங்களிலும் மேய்ந்து வருங்கால், பூமியினடியில் மறைந்திருந்த இறைவனின் மேல் பசுவின்

காற்குளம்பு பட்டதால் ஏற்பட்ட பெயர் என்ப. (தலபுராண வரலாறு) இத்தழும்பு இறைவன் திருமேனியில் இன்றும் உள்ளதென்ப. இவ்வூர்த் திருக் கோலம்பியம் எனவும் வழங்கப்படும்.

## 4. திருநாரையூர் : (கும்ப - 130)

நரன், நாராயணர் இருவரும் காட்டில் அமர்ந்து தவஞ்செய்து வருங்கால், அசுரன் ஒருவனால் தவம் கலைக்கப்பட, இருவரும் அசுரனைக் கொன்றனர் எனவும், அவனைக் கொன்ற பாவம் போக அருகில் எழுந்தருளியிருந்த சித்தநாதரை வழிபட்டு மீண்டும் நிஷ்டையில் அமர்ந்தனர். எனவும், அதுபோது துர்வாச முனிவர் வரவும், நிஷ்டையில் இருந்தமையில் அவரைக் கவனிக்க முடியவில்லை, எனவும் அதனால் அவர் இருவருக்கும் சாபம் கொடுக்க, இருவரும் சாபத்தின் விளைவால், நாரையாகப் பிறந்து, சித்தநாதரை மீட்டும் வழிபட்டு உய்ந்தமையால் பெற்றபெயர் எனத் தலபுராணம் கூறும்

## 5. மயிலாடுதுறை : (மயில் - 62)

இறைவி மயில் உருவெடுத்து இறைவனை வழிபட்ட இடம் எனத் தலபுராணம் குறிப்பிடும். மயூரம் என்னும் வடமொழிச் சொல்லால் இவ்வூர் மாயூரம் எனவும் வழங்கப்படும். அருணகிரி நாதர் தன் திருப்புகழில் சிகண்டியூர் எனக் குறிப்பிடுவர். சிகண்டி—மயில்.

## 6. திருவாவடுதுறை : (மயில் – 41)

இறைவனின் சாபத்தினால் பசுவாகப் பிறந்த இறைவி இறைவனைப் பல இடங்களில் தேடியலைந்து இவ்வூரிலே கண்டு வழிபட்டமையினால் ஏற்பட்ட பெயர் எனத் தலவரலாறு கூறும்.

## 7. வலிவலம் : (திரு - 177)

இறைவனை வலியான் (கரிக்குருவி) என்ற பறவை வழிபட்டமையினால் ஏற்பட்ட பெயர் என உரைப்ப. (தலவரலாறு)

திருப்புள்ள மங்கை, திருப்பரம்புரம், புள்ளிருக்கு வேளூர் என்பனவும் இவ்வகையால் பெயர் பெற்றவையே ஆகும்.

## மரப்பெயர்கள்

ஊர்ப்பெயர்களுள் சில மரம் செடி, கொடி ஆகியவற்றின் காரணமாகவும் அப்பெயரைப் பெற்றுள்ளன. அவ்வாறு பெற்றவையும் பெரும்பாலும் அவ்வூர்க் கோயில் தொடர்பால், கோயில் தல விருட்சத்தினைக் காரணமாகக் கொண்டும், சிறுபான்மை அவ்வூரின் இயற்கை அமைப்பினை ஒட்டி-அவ்வூரில் அதிகமாக வளர்ந்துள்ள மரத்தின் அடிப்படையிலும் பெயர் பெற்றுள்ளன. அவ்வகையில் மரப் பெயர் அமைந்த ஊர்ப் பெயர்களை இரு வகையாகப் பிரிக்கலாம்.

1. இயற்கையாக, ஊரில் மிகுதியாகக் காணப்படும் மரத்தின் அடிப்படையில் அமைந்த பெயர்

2. ஊர்க் கோவில் தலவிருட்சம் காரணமாக, அப்பெயரையே ஊர்ப்பெயராகப் பெற்றவை.

இவ்வடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்கள் சிலவற்றைச் சான்றுக்குக் காண்குவம்.

### 1. மிகுதி அடிப்படையில் பெற்ற பெயர் :-

### 1. இஞ்சிக்குடி :

இவ்வூரைச் சுற்றிலும் இஞ்சி மிகுதியாக விளைவதால் பெற்ற பெயர்.

### 2. கள்ளிமேடு : (வேதா-53)

கள்ளிச் செடிகள் முளைத்து மேடாக இருந்த பகுதியில் எழுந்த ஊராதலால் பெற்ற பெயர்.

### 3. திரு இடை மருதூர் : (திருவிடை - 79)

இவ்வூரைச் சுற்றிலும் மருத மரங்கள் நிறைந்திருந்தமையாலும், தலவிருட்சம் மருதமரம் ஆதலாலும் பெற்றபெயர்.

### 4. திருப்பனந்தாள் : - (திருவிடை—14)

இவ்வூரைச் சுற்றிலும் பனை மரம் அதிகமாக இருப்பதாலும், இவ்வூர் இறைவன் பனந்தாளின்-பனைமரத்தின் அடியில் எழுந்தருளியிருப்பதாலும் இப்பெயர் பெற்றது.

### 5. புஷ்பவனம் :- (வேதா—50)

இவ்வூரில் விளைந்த பல்வகையான பூக்களை இவ்வூரின் அருகில் இருக்கும் வேதாரண்யம் கோயில் இறைவனுக்காக கொள்ளப் பட்டமையினால் இப்பெயர் பெற்றது. சுருங்கக் கூறின் வேதாரண்யம் கோயில் இறைவனுக்கு வேண்டிய பூக்களுக்காக — இவ்வூர், மலர் வனமாக வளர்க்கப்படுவதால் இப்பெயர் பெற்றது.

## 2. தருவிருட்சம் காரணமாக பெற்றபெயர்கள் :—

### 1. எட்டிக்குடி

இப்பொழுது எட்டுக்குடி என வழங்கப்படுகிறது. எட்டி— காஞ்சிரங் கொடி தலவிருட்சமாதலால் இப்பெயர் பெற்றது.

### 2. கரவீரம் :

பொன்னிறமான பூக்களைத்தரும் மரத்தின் பெயர், பொன்னலரி எனவும் குறிப்பிடுப. இவ்வூர்க் கோயிலில் இம்மரமே தலவிருட்சமாதலின் இவ்வூர் இப்பெயர் பெற்றது. இன்றைய பெயர் கரையபுரம்.

### 3. குத்தாலம் : (மயில்—38)

இவ்வூரில் குறுகிய ஆல் நிறைய இருந்தமையால் பெற்றது எனக் கூறுப. ஆனால் இன்று பெரும்பான்மையோர் வழங்கும் காரணம் இவ்வூர்க் கோயில் தலவிருட்சமாகிய உத்தாலம் என்னும் மரத்தின் காரணமாகவே இவ்வூருக்கு இப்பெயர் வந்தது என்ப. உத்தாலம்—என்பதே நாளடைவில் குத்தாலம் ஆயிற்று.

### 4. கொட்டையூர் : (வலங்—69)

கொட்டைச் செடி (ஆமணக்கு) தலவிருட்சம் ஆதலால் பெற்ற பெயர் என்ப. வடமொழியில் ஏரண்டபுரம் (கொட்டைச்செடி) என வழங்குவர்.

5. திருஇடை மருதூர் (திருவிடை—79)

இவ்வூர் இருவகையாலும் பெயர் பெற்றது. மருத மரங்கள் சூழப்பட்டும், தலவிருட்சம் மருத மரமாகவும் இருப்பதால் பெற்ற பெயர்.

6. திருத்துறைப் பூண்டி : [திருத்—76]

திருத்தருப்பூண்டி என்பதே வழக்கில் திருந்துறை ஆயிற்று என்ப. திருத்தரு என்பது வில்வ மரத்தைக் குறிக்கும். தேவர்கள் அமிர்தம் கடைந்தபோது தெறித்த துவலைகள் ஒவ்வொரு ஊரிலும் ஒரு மரமாயிற்று எனவும், இவ்வூரில் வில்வமரம் ஆயிற்று எனவும், அதன் காரணமாகவே இப்பெயர் பெற்றது எனவும் இவ்வூர்த் தல புராணம் குறிப்பிடும்.

7. திருப்பனந்தாள் : [திருவிடை—14]

இவ்வூரும் இருவகையாலும் பெயர் பெற்றது. இவ்வூரைச் சுற்றிலும் பனை மரங்கள் மிகுதியாக இருப்பதாலும், இவ்வூர் இறைவன் பனந்தாளில்—பனைமரத்தின் அடியில் எழுந்தருளி இருப்பதாலும் இப்பெயர் பெற்றது.

8. திருப்புன்கூர் :

புன்க மரத்தைத் (புன்கு) தலவிருட்சமாகக் கொண்டதால் பெற்ற பெயர்.

திருமருகல் : [நன்—144]

மருகல் என்பது கல் வாழை என்று பொருள்படும். அக்கல் வாழை மரத்தைத் தலவிருட்சமாகக் கொண்டதால் பெற்ற பெயர்.

## ஆட்பெயர்கள்

ஊர்ப் பெயர்களின் பல்வேறு வகைகளில் ஆட்பெயர்களாக அமைந்திருப்பதும் ஒரு வகையாகும். அவ்வகையில் அமைந்த ஊர்ப்பெயர்கள் மொத்த எண்ணிக்கை 497. இவை ஊர்ப்பெயரில் வழங்கும் காரணம் பற்றி ஆயும்போது கிடைத்த முடிவுகள் சில. 1. மன்னனாலோ, குறுநிலத் தலைவனாலோ ஏற்படுத்தப் பெற்ற ஊர்கள்—அல்லது இவர்கள் பெயரால் வேறு சிலர் ஏற்படுத்திய ஊர்கள். இவை பெரும்பாலும் கல்வெட்டுப் பெயரின் சுருக்க மாகவோ, அல்லது திரிபாகவோ அமைந்துள்ளன. 2. சாதாரண மனிதர்கள் பெயரில் காணப்படும் பெயர்கள். இவை பெருப்பாலும் அவ்வூர் பெருந்தலைவராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது. 3. வரலாற்றுப் பெயர்போல்—சிறப்புப் பெயர்போல் வழங்கப்படுவது —ஆயினும் சரியான காரணம் அறிய முடியாதவை. இம்மூன்று வகை ஊர்ப் பெயர்க்ளையும் இருவகையினுள் அடக்கலாம். அவை 1. முழுவதும் பெயராகவே இருத்தல். 2. ஊரின் முதல் பாதி ஆட்பெயராகவும், மறுபாதி ஏதேனும் ஒரு முடிபினைக் கொண்ட தாகவும் அமைந்திருத்தல். இனி முறையே இப்பெயர் வகைக்குச் சில சான்றுகள் காண்போமாக.

### 1. கல்வெட்டுப் பெயரின் சுருக்கம் அல்லதும் திரிபு :-

| | | | |
|---|---|---|---|
| 1. | அகத்தியான் பள்ளி | ... அகஸ்தியான் பள்ளி | ...வேதா—123 |
| 2. | அருள் மொழித் தேவச் சதுர்வேதி மங்கலம் | ... அருள் மொழித் தேவன் | ... நன் —50 |
| 3. | ஆபரண தாரிச் சதுர் வேதி மங்கலம் | ... ஆபரண தாரி | ...நாகை—40 |
| 4. | கடம்பனூர் | ... அகரக் கடம்பனூர் | ... திரு —23 |
| 5. | சாத்தன்குடி | ... சாத்தன்குடி | ... மயில்—7/2 |
| 6. | சிவபுரம் | ... சிவபுரம் — கும்ப | ... 112/2 |
| 7. | சிவபாதசேகர மங்கலம் | ... அச்சுதமங்கலம் | ... நன் —78 |
| 8. | செம்பியன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம் | ... செம்பிய மாதேவி | ... நாகை—77 |
| 9. | திருநல்லம் | ... கோனேரி ராஜபுரம் | ... மயில் —141 |
| 10. | பூதலூர் | ... மேல் பூதலூர் | ... நன் —141 |

| | | | |
|---|---|---|---|
| 11. ராசேந்திரசோழ சதுர்வேதிமங்கலம் | ... அய்யன் பேட்டை | ... நன் | .. 12 |
| 12. ராஜராஜபுரம் | ... தாராசுரம் | ... கும்ப | ...104 |
| 13. ராஜகேசரி | ... ராஜகிரி | ... பாப | ...101 |

## 2. சாதாரணமாக மக்கள் பெயராக வழங்குதல் :-

| | | | |
|---|---|---|---|
| 1. | அரியக்குட்டித் தேவன் | ... பேரா | ... 190 |
| 2. | காமாட்சிபுரம் | ... திருவிடை | ... 1/1 |
| 3. | குப்பத் தேவன் | ... பேரா | ... 231 |
| 4. | குமரபுரம் | ... மன் | ... 150 |
| 5. | குலசேகர நல்லூர் | ... திருவிடை | ... 1 |
| 6. | சிங்காரப் பாளையம் | ... வலங் | ... 29/2 |
| 7. | தர்மராயன் உக்கடை | ... மயில் | ... 49/3 |
| 8. | தியாகராஜபுரம் | ... திருவிடை | ... 46/1 |
| 9. | தொண்டராயன்பட்டி | ... தஞ் | ... 32 |
| 10. | பிஷ்வா சிவராயத்தோட்டம் | ... மன் | ... 140/7 |
| 11. | மகாதேவப்பட்டிணம் | ... ,, | ... 140 |
| 12. | மகாராஜபுரம் | ... திருவை | ... 51/1 |
| 13. | மோகனராவ் தோட்டம் | ... மன் | ... 139/2 |
| 14. | ரெங்கராஜபுரம் | ... திருவிடை | ... 9/1 |
| 15. | வினாயகன் தெரு | ... ,, | ... 15 |

## 3. வரலாற்றுப் பெயர் போன்றவை :-

| | | | |
|---|---|---|---|
| 1. | அருள் மொழித் தேவன் | ... திரு | ... 43/2 |
| 2. | ஏனாதி | ... பட்டு | ... 180 |
| 3. | குலமாணிக்கம் | ... மன் | ... 116 |
| 4. | செம்பியன் கோவில் | ... மயில் | ... 134/A/1 |
| 5. | செருவாமணி | ... நீடா | ... 72 |
| 6. | நச்சினார்க்குடி | ... மயில் | ... 134/B/3 |
| 7. | நரசிங்கபுரம் | ... பாப | ... 17/1 |
| 8. | நாகக்குடையான் | ... வேதா | ... 60 |
| 9. | பணிக்கொண்டான் விடுதி | ... ஒரத் | ... 39 |
| 10. | மழவராய நல்லூர் | ... மன் | ... 89 |

| | | | |
|---|---|---|---|
| 11. | மானங்காத்தான் கோட்டகம் | ... ,, | ... 118 |
| 12. | முத்துவீரக் கண்டியன்பட்டி | ... தஞ் | ... 143 |
| 13. | ருத்திர சிந்தாமணி | ... பேரா | ... 60 |
| 14. | விக்ரபாண்டியம் | ... மன் | ... 82 |
| 15. | விக்கிரமன் குத்தாலம் | ... மயில் | ... 38/4 |

## 1. முழுவதும் பெயராய் வருதல் :-

| | | | |
|---|---|---|---|
| 1. | அம்மையப்பன் | ... திருவிடை | ... 15/3 |
| 2. | அரியக்குட்டித் தேவன் | ... பேரா | ... 190 |
| 3. | அருண்மொழித் தேவன் | ... மயில் | ... 49 |
| 4. | ஆபரண தாரி | ... நாகை | ... 40 |
| 5. | கிடாரங்கொண்டான் | ... திரு | ... 9/1 |
| 6. | குப்பத்தேவன் | ... பேரா | ... 231 |
| 7. | சுங்கன் தவிர்த்தான் | ... தஞ் | ... 98/1 |
| 8. | செருவாமணி | ... நீடா | ... 72 |
| 9. | திருவத் தேவன் | ... பேரா | ... 191 |
| 10. | பள்ளிக் கொண்டான் | பட்டு | ... 213 |
| 11. | பெருக வாழ்ந்தான் | ... மன் | ... 126 |
| 12. | மண்ணுக்குமுண்டான் | ... ,, | ... 120 |

## 2. முன்பாதி ஆட்பெயராயும், பின்பாதி ஏதோவொரு முடி கொண்டும் வருதல் :-

| | | | |
|---|---|---|---|
| 1. | உமையாள் புரம் | ... பாப | ... 146 |
| 2. | கிருஷ்ணபுரம் | ... கும்ப | ... 123 |
| 3. | கைலாசநாதபுரம் | ... பட்டு | ... 206 |
| 4. | சங்கரன் குடிக்காடு | ... ஒரத் | ... 102 |
| 5. | செண்பகராய நல்லூர் | ... வேதா | ... 62 |
| 6. | சௌந்திர நாயகிபுரம் | ... பட்டு | ... 166 |
| 7. | சேதுபாவா சத்திரம் | ... பேரா | ... 104 |
| 8. | சோமசேகரபுரம் | ... மன் | ... 110/1 |
| 9. | சோழகன் குடிக்காடு | ... ஒரத் | ... 114 |

| | | | |
|---|---|---|---|
| 10. | பொன்னவராயன்கோட்டை | ... பட்டு | ... 172 |
| 11. | மதுரபாஷணிபுரம் | ... ,, | ... 153 |
| 12. | மாணிக்க மங்கலம் | ... வலங் | ... 66 |
| 13. | ராசேந்திர நல்லூர் | ... ,, | ... 62 |
| 14. | ராமனாதன் கோயில் | .. நீடா | ... 43 |
| 15. | ரெகுநாதபுரம் | ... பட்டு | ... 171 |

## சாதிப்பெயர்கள்

சாதிகளின் அடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்களை இவ்விடத்தில் காண்பதின் நோக்கம், எவ்வாறு முற்காலத்தில் (ஒரோவழி இக்காலத்திலும் நடைமுறையில் இருக்கலாம்) தெருக்களும், ஊர்களும் இன்னின்ன சாதியார் வசிக்கும் இடத்திற்கு இன்னின்னப் பெயர் வழங்கப்பட்டது என்பதை அறிய வேண்டியேயாம். இதனை சிலப்பதிகாரத்திலும் பூம்புகாரின் தெருக்களைப் பற்றிச் சொல்லும் இளங்கோவடிகள் வரிசையாக ஒவ்வொரு சாதியினரும் வசிக்கும் தெருக்களைப் பற்றிச் சொல்லிச் செல்வதன் மூலம் அறியலாம், இவ்வமைப்பு அக்காலத்தில் பெரிதும் போற்றப் பட்டமைக்குப் காரணம் அவரவர் தொழில் வேற்றுமை கருதியே யொழிய வேறு காரணமன்று :

> "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வாச்
> செய்தொழில் வேற்றுமை யான்"

என்னும் வள்ளுவர் வாய்மொழியை ஈண்டு ஓர்தல் நலம். மேலும் தொல்காப்பியரும் சேரி என்பதனை எல்லா இனத்துடன் சேர்த்து வழங்குதலையும் நினைவிற் கொள்க. இனி சாதி அடிப்படையில் அமைந்த ஊர்ப்பெயர்கள் வருமாறு :

### 1. அந்தணர் :

1. அந்தணப்பேட்டை — நாகை — 35

### 2. கன்னார் :

1. கன்னாரக்குடி — திருவிடை — 31

3. செட்டியார் :

1. செட்டி உக்கடை ... மயில் ... 51/3
2. செட்டிக்கட்டளை ... ,, ... 2/1
3. செட்டிக்குளம் ... திரு ... 4/1
4. செட்டிக் கொல்லை ... ,, ... 2/2
5. செட்டிச் சத்திரம் ... நீடா ... 16/1
6. செட்டிப்புலம் ... வேதா ... 59
7. செட்டியமூலை ... திருத் ... 3/1
8. செட்டி வயல் ... பேரா ... 236

4. சேர்வைக்காரர் :

1. சேர்வைக் கட்டளை ... திரு ... 2/8
2. சேர்வைக்காரன் கட்டளை ... ,, ... 2/1

5. சோழர் :

1. சோழகன் குடிகாடு ... ஒரத் ... 114
2. சோழிய விளாகம் ... திருவிடை ... 6/1

6 தெலுங்கர் :

1. தெலுங்கன் குடிகாடு ... ஒரத் ... 3

7. நட்டுவாணரர் :

1. நட்டுவன் கோயில் பத்து ... மன் ... 117/1

8. நாகர் ;

1. நாகன் குடி ... மயில் ... 64/2

9. நாயகர் :

1. கஞ்ச நாயக்கன் தோட்டம் ... தஞ் ... 157
2. சிக்கனாயக்கன் பேட்டை ... திருவிடை ... 33
3. நாயர் வட்டம் ... மயில் .... 141/6
4. மாப்பிள்ளை நாயக்கன் பட்டி ... தஞ் ... 119/1
5. ராமநாயக்கன் தோட்டம் ... மயில் ... 19/2

## 10. பிள்ளை :

1. ராமசாமிப் பிள்ளைக் கட்டடளை ... தஞ் ... 101/7
2. ராமசாமிப் பிள்ளைத் தோப்பு ... திருவிடை ... 44/4

## 11. மருத்துவர் :

மருத்துவர் வசித்த இடமாக இருக்கலாம்.

1. மருத்துவக் குடி ... நன் ... 82
2. மருத்துவக் குடி ... பாப ... 14

## 12. மரவன் :

மறவர் என்பதன் திரிபாகலாம்.

1. மரவன் வயல் ... பேரா ... 101
2. மரவன் வயல் ... பட்டு ... 257

## 13. முதலியார் :

1. அத்தியப்ப முதலியார் தோட்டம் ... தஞ் ... 86/4
2. காலகஸ்தியப்ப முதலிக் கொல்லை ... திரு ... 3/4
3. சிதம்பரநாத முதலி தோட்டம் ... கும்ப .... 112/3
4. முதலியார் உக்கடை ... மயில் ... 4/3

## 14. ராயர் :

1. அச்சுத ராயபுரம் ... மயில் ... 74
2. உறந்தைராயன் குடிக்காடு ... ஒரத் ... ?
3. காளிங்கராயன் புரம் ... மயில் ... 65/4
4. பல்லவராயன் பேட்டை ... ,, ... 53/5
5. மழவராயன் நல்லூர் ... மன் ... 89
6. ராயநல்லூர் ... திருத் ... 4
7. ராயர் பிள்ளைத் தோப்பு ... திருவிடை ... 44/3
8. ராயர்புரம் ... நீடா ... 12
9. வானாதிராயபுரம் ... மயில் ... 47

## 15. ராவுத்தர் :-

1. ராவுத்தன் வயல் ... பேரா ... 100

**16. வண்ணார் :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வண்ணாரப் பேட்டை | ... | தஞ் | ... | 62 |

**17. வடுகர் :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வடுகச்சேரி | .... | நாகை | ... | 79 |

**18. வள்ளுவர் :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வள்ளுவக் குடி | ... | சீர் | ... | 56 |

**19. வாண்டையார் :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வாண்டையாரிருப்பு | ... | திருவிடை | ... | 35/3 |
| 2. | வாண்டையாரிருப்பு | ... | ஒரத் | ... | 30 |

**20. வாணிகர் :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வாணியன் கரம்பை | ... | வலங் | ... | 29/3 |

**21. வேடுவர் :**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | வேட்டைக்காரனிருப்பு | ... | நாகை | ... | 138 |

## வரலாற்றுப் பெயர்கள்

ஊர்ப் பெயர்களுள் பல முற்கால, பிற்கால வரலாற்றுத் தொடர்புடையவனவாய்—வரலாற்றுச் சிறப்பின் காரணமாக பெற்ற பெயராக இருப்பதை அறிய முடிகிறது. இவ்வரலாற்றுப் பெயர்களில் சிலவற்றிற்கு அவ்வாறு பெயர் வந்ததற்கு உறுதியாக சான்றுகள் உள்ளன. வேறு சிலவற்றிற்கோ அவ்வாறு உறுதியான சான்றுகள் இல்லை. அவ்வாறு இருப்பவற்றை செவிவழிக் கதைகள் எனத் தள்ளுதற்கியலாது. காரணம் அவற்றை மேன்மேலும் ஆய்வு செய்யின் ஆதாரம் கிட்டும் என்பது உறுதி ஆகும். இனி இவ்வகையில் இவ்வரலாற்றுப் பெயர்களை மூவகையாகப் பிரிக்கலாம்.

1. கல்வெட்டுப் பெயர்கள்.
2. கல்வெட்டில்லாது வேறு சான்றுகளுடன் வழங்குபவை.
3. ஆதாரங்கள் கிடைக்காதவை.

இவற்றுள் "கல்வெட்டுப் பெயர்கள்" பற்றிய ஆய்வினைத் தனியே காண இருப்பதால் ஏனைய இரு நிலையில் மட்டும் ஈண்டு இவ்வரலாற்றுப் பெயர்களைக் காண்வேம்

### 1. சான்றுகள் உள்ள பெயர்கள் :

1. ஒரத்தநாடு :- (ஒரத்-)

இவ்வூரின் பழைய பெயர் "முத்தம்மாள் புரம்" என்பதாகும். தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னன் ஒருவனின் மனைவியான் முத்தம்மாளுக்காக இவ்வூர் தரப்பெற்று இருந்ததால் இப்பெயர் பெற்றது என்ப. இது இன்று இவ்வூரின் ஒரு பகுதியாக வழங்குகிறது மூத்தம்மாளுக்கு வழங்கப்பட்டதாலேயே இவ்வூர், "ஓருத்தி

நாடு'' என்று அழைக்கப் பெற்றுப் பின்னதுவே "ஒரத்த நாடு'' என்றாயிற்று என்ப[1].

2. கோயில் வெண்ணி: (நீடா—18)

கரிகாற் சோழன் தன் பகைவர்களுடன் பொருது வென்ற 'வெண்ணிப் பறந்தலையே'' இன்று கோயில் வெண்ணி என்றழைக்கப்படுகிறது. போர் நடந்த இடமாகக் கருதப்படும் பெருந்திடல் ஒன்றும் இங்கே காணப்படுகிறது. இவ்வூரின் அருகில் உள்ள ஊர்களும் "லாயம்'' (குதிரைகள் கட்டிவைக்கப்பட்டிருந்த இடம்), முன்னாவல் கோட்டை (முன் காவல் கோட்டை), பெரியக் கோட்டை (கோட்டை இருந்த இடம்), நீடாமங்கலம் (வாள் மங்கலம் செய்வித்த இடம்) என்றுள்ளமையைக் காணமுடிகிறது. மேலும் இவ்வூர் பற்றிய ஆய்வு "செந்தமிழ்ச் செல்வி''[2] இதழ் ஒன்றிலும் வெளிவந்துள்ளது.

3. நீடாமங்கலம் :- (நீடா-)

இவ்வூரின் பழைய பெயர் "யமுனாம்பாள் புரம்'' என்று கூற படுகிறது. தஞ்சையை ஆண்ட மன்னன் பிரதாபசிங் தன் மனைவி யருள் ஒருத்தியான யமுனாம்பாளுக்காக இவ்வூரில் அரண்மனையும், பிற வசதிகளும் செய்து கொடுத்து, அவ்வம்மையார் இவ்வூரில் வாழ்ந்ததால் ஏற்பட்ட பெயர். இன்றும் இவ்வம்மையார் பெயரில் கோயில் ஒன்றும், சத்திரம் ஒன்றும் காணப்படுகிறது. இப்பகுதி இன்று பழைய நீடாமங்கலம் என்றழைக்கப்படுகிறது.

"நீடாமங்கலம்'' என்ற பெயர் "நீராட்டுமங்கலம்'' என்பதன் திரிபு எனவும், கரிகாற் சோழன் கோயில் வெண்ணியில் (வெண்ணிப் பறந்தலையில்) போர் முடித்து, வெற்றியினைத் தந்த தன் வீர வாளுக்கு—வீராபிடேகம்—நீராட்டுமங்கலம் இங்கே செய்ததாலேயே

---

1. தகவல் கூறியவர் : திரு கோவிந்தராசன், நீடாமங்கலம்
2. செந்தமிழ்ச்செல்வி, சிலம்பு-23, வை. சுந்தரேச வாண்டையார், பக். 242—244,

இவ்வூர் "நீராட்டு மங்கலம்" என்று அழைக்கப்பட்டு, நாளடைவில் நீடாமங்கலம்" ஆயிற்று என்ப[3].

4. மாதேவப்பட்டினம் :- (மன்-140)

இவ்வூரின் முன்னைய பெயர் "மகாதேவப்பட்டிணமாக" இருந்திருக்கலாம் என்பது இவ்வூர்ப் பெரியவர்கள் கூற்றால் அறிய முடிகிறது. துளசாஜி என்ற சிவாஜி மன்னனின் வழித் தோன்றல் களில் ஒருவனான அரசன் ஒருவன் இவ்வூருக்கு வந்து இங்கே ஒரு சிவன் கோவில் எழுப்பித்து, தனக்கும் ஒரு அரண்மனை கட்டி வாழ்ந்து வந்தான் எனவும், அக்கோயில் "சம்போ மகாதேவ கோயில்" என்று இன்றும் அழைக்கப்படுகிறது எனவும், அப்பெய ராலேயே ஊரும் அழைக்கப்பட்டது எனவும் கூறப[4]. கோயிலும் அரண்மனையுள் ஒரு பெருமாள் கோயிலும் இன்றும் உள்ளது. ஆனால் இம்மன்னன் வாழ்ந்த காலம் உறுதியாக அறியப்பட வில்லை.

## 2. ஆதாரங்கள் கிடைக்காதவை :

1. பட்டுக்கோட்டை : (பட்டு)

இவ்வட்டத்திலும், இவ்வூரிலும் சிறு சிறு கோட்டைகள் நிறைய காணப்படுகின்றன. "பட்டு மழவராயர்" என்ற இனத்தவர் -- குறுநில மன்னர்கள் ஆட்சி புரிந்த பகுதி ஆகையால் இவ்வூர்ப் "பட்டுக்கோட்டை" என்ற பெயரினைப் பெற்றது என்பர்[5].

2. செண்பக ராயநல்லூர் :- (வேதா-62)

கரிகாற்சோழனின் இலங்கைப் படைத்தலைவனின் பெயர் "செண்பக ராயன்" என்றும், அவன் நினைவாக இவ்வூருக்கு இப் பெயர் வந்ததென்றும் கூறுப. இவ்வழியேதான் கரிகாற் சோழன் இல்ங்கைக்குப் படையெடுத்துச் சென்றான் என்றும் இன்று "தலைக் காடு" என்று வழங்கும் ஊரில் இருந்து வேதாதாரண்யம் வரை ராஜ

---

3. தகவல் கூறியவர் : திரு. பாலசுப்பிரமணியம், ஆசிரியர், உயர்நிலைப்பள்ளி, நீடாமங்கலம்
4. தகவல் கூறியவர் : திரு சந்திரசேகர அதியமான், எளவனூர், மன்னார்குடி.
5. தஞ்சாவூர் மாவட்டம், ப. 32

பாட்டையாக இருந்நது என்றும் கூறுப.[6] மேலும் இவ்வூருக்கு அருகில் உள்ள "கரியாப்பட்டிணம்" என்னும் ஊர்ப் பெயரைக் "கரிகாலன் பட்டிணம்" என்பதன் திரிபு என்றும் கூறுவர். ஆனால் இவ்வூரின் கல்வெட்டுப் பெயர், "கல்யாணபுரங் கொண்ட சோழப் பட்டிணம்" என்பதாகும். இதன் திரிபாகவே கரியாப் பட்டிணம்" என்பது வழங்கப்படலாம் என்றும் தோன்றுகிறது. எனினும் இப்பெயரும், இவ்வூரைச் சுற்றியுள்ள சில ஊர்களும் (தலைக்காடு, தென்னாடர், பல்லவன் கோயில் ஆகியவை) வரலாற்றுத் தொடர்பு உடையவை என்பதில் ஐயமில்லை. எனினும் இவை விரிவான ஆய்விற்கு உடையவை ஆகும்.

மேலும் ஏனாதி, ஏனாதிக்கரம்பை, தளவாய்ப்பாளையம் போன்று வரும் ஊர்களினால் அக்காலத்தில் மன்னால் அளிக்கப் பட்டச் சிறப்புப் பெயர்களும், பிற பதவிகளும் பற்றியக் குறிப்புகளை அறிய முடிகிறது.

6. தகவல் கூறியவர் : திரு சோ. பாலசுப்பிரமணியம், ஆசிரியர், உயர்நிலைப்பள்ளி, வேதாரண்யம்.

# பெயர்த்தொடர்பான கதைகள்

ஒவ்வொரு ஊரைப் பற்றியும் ஏதாவது ஒரு கதை வழங்கி வருகிறது. பொரும்பாலும் தலபுராணங்கள் எந்த விதத்திலாவது பெயருக்கு விளக்கம் அளிக்கும் வகையில் கதையொன்றினை விளம்புகிறது. தலபுராணக் கதைகள் இல்லாமல் வேறு வகையிலும் கதைகள் வழங்குகின்றன. அவ்வகையில் தலபுராணத்திற்கு அடுத்த வகையில் விளங்குவது இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களை ஒட்டிய கதைகள் ஆகும். இதற்கடுத்த நிலையில் வழக்கில் செவிவழிச் செய்தியாக வழங்கப்படும் கதைகள் விளங்குகின்றன. இவ்வகையில் பெயர்த் தொடர்பாக வழங்கும் கதைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. தலபுராணக் கதைகள்
2. இதிகாசத் தொடர்பான கதைகள்.
3. வழக்கில் மரபாகச் சொல்லப்பட்டு வருவன.

இம்மூன்று வகையினுள் கடையிரண்டும் செவிவழிச் செய்தியாகவே வழங்கப்படுபவை எனினும், இரண்டாவது இலக்கியமாக இருக்கும் ஒரு வரலாற்றினை அடிப்படையாகக் கொண்டும், மூன்றாவது ஏதோவொரு கதையை அடிப்படையாகக் கொண்டும் இருப்பதால், இவற்றைத் தனித் தனியே வகைப்படுத்தலாம்.

## 1. தலபுராணக் கதைகள் :

இவை பெரும்பாலும் வடமொழி ஆக்கமாய், ஊரில் குடிகொண்டுள்ள இறைவனின் அருள் விளையாட்டுடன் தொடர்பு உடையதாய் இருக்கும். இப்புராணப் பெயர்கள் பெரும்பாலும் ஊர்ப்பெயர்களின் காரணத்தினைப் பொருந்தும் தன்மை உடையதாகவே எழுதப்பட்டிருக்கின்றன. உண்மையிலேயே ஊர்ப்பெயர்கள் இத்தலபுராணக் கதைகளின் அடிப்படையில் எழுந்தன அல்ல. ஊர்ப்பெயர்களின் அடிப்படையிலேயே தல புராணங்கள் தோன்றின என்றால் அது மிகையாகாது. இதனை,

"தலபுராணங்கள் கூறுகின்ற பெயர்கள் யாவும், அவை காட்டுகின்ற சம்பவங்களின் அடிப்படையில் எழுந்தன என்று கொள்ளமுடியாது. சில ஊர்ப் பெயர்களை அடிப் படையாக வைத்துக் கொண்டு, அதிலிருந்து சில புராணக் கதைகளை புனைந்து கொண்டு மக்களிடையே அதிகமாக வழங்குகின்ற சில ஆதி புராணங்களுடன் இவற்றைத் தொடர்பு படுத்திக் காட்டுகின்றனர் தலபுராண ஆசிரியர்கள். அவர்கள் கூறுவதைப் போன்று புராணச் சம்பவங்களின் அடிப்படையில் ஊர்ப்பெயர்களின் அமைப்பு முறையில் இருந்து புதிய புராணங்கள் எழுகின்றன என்று கூறுவதே பொருத்தமானதாகத் தோன்றுகிறது"[7].

என்னும் கூற்று உறுதி செய்வதைக் காணலாம்.

1. அகத்தியன் பள்ளி :- (வேதா-133)

இமயமலையில் இறைவனின் திருமணம் நடைபெற, திருமணத்திற்கு உலகின் எல்லா இடத்திலிருந்தும் மக்கள் வரவே, கயிலாயம் அதிக பளுவினால் பூமிக்குள் செல்ல, இறைவன் வடதிசை உயர்ந்து தென்திசை தாழ்வதால் அதை சரிசெய்யும் பொருட்டு அகத்திய மாமுனிவரைத் தென்திசைச் செல்லும் படிபணிக்க, அகத்தியர் யான் மட்டும் உம் திருமணக் கோலம் காணக்கூடாதோ எனக் கேட்க, இறைவன் தென்திசையில் நீ விரும்பிய இடத்தில் "யாம், எம் மணக்கோலம் காட்டுவோம்" எனவருளி, அவ்வண்ணமே வேதாரண்யத்தில் அகத்தியருக்கு மணக்கோலம் காட்டினாரென்ப. அதுபோது இறைவன் அகத்தி யருக்கு மணக்கோலம் காட்டிய இடம் வேதாரண்யம் எனவும், அகத்தியர் தென் திசையில் தங்கி இறைவனை வழிபட்ட இடம் அகத்தியான் பள்ளி எனவும் தல வரலாறு கூறும்.

2. அம்பர் மாகாளம் :- (நன்-40)

இவ்வூர் இன்று "கோயில் திருமாளம்" என அழைக்கப்படுகிறது. அம்பன், அம்பாசுரன் என்ற இரு அரக்கர்களைக் கொன்ற பாவம் போக காளி இங்கு இறைவனைப் பூஜித்ததால் இப் பெயர் பெற்றது

7. சுசீந்திரம் கல்வெட்டில் இடப்பெயராய்வு, மா. நயினார், ப. 4

எனவும், மாகாளம் என்ற பாம்பு வழிபட்டதால் ஏற்பட்ட பெயர், எனவும், மாகாள ரிஷி என்ற முனிவர் வழிபட்டதால் ஏற்பட்ட பெயர் எனவும் தலபுராண வரலாற்றில் கூறப்படுகிறது.

3. அரித்துவார மங்கலம் :- (வலங்-76)

முன்னொரு காலத்தில் பிரம்மனுக்கும் திருமாலுக்கும் தங்களுள் யார் பெரியவர் என்ற போட்டி எழுந்ததாகவும், சிவபெருமான் யார் என் முடியையும் அடியையும் கண்டு வருகின்றார்களோ அவரே பெரியவர் என்று விளம்பியதாகவும், அதன் பொருட்டு திருமால் வராக (பன்றி) உருவெடுத்து பூமியை துவாரம் செய்து சென்றதாகவும் அதனாலேயே அவ்வூருக்கு ஹரித்துவாரமங்கலம் என்ற பெயர் வந்தது என்றும் தல வர்லாற்றில் கூறப்படுகிறது.

4. கிடாய்த்தலை மேடு :- (மயில்-33/2)

துர்க்கை எருமைத்தலை அரக்கனை (மகிஷாசூரன்) வதம் செய்தபோது, அவ்வரக்கனின் தலை வந்து விழுந்த இடமாதலால் இப்பெயர் பெற்றதென்ப.

5. பந்தநல்லூர் :- (திருவிடை-10)

இவ்வூர்ப் பெயரின் முன்னைய வடிவம் பந்தனைநல்லூர் என்பதாகும். இறைவி நான்கு வேதங்களையும் பந்தாக்கி விளையாட, விளையாட்டு விறுவிறுப்பில் இறைவன் வந்ததையும் கவனியாது போகவே, சினம் வயப்பட்ட இறைவன் பந்தினை எட்டி உதைக்கவே, அது எல்லா உலகங்களையும் கடந்து வந்து இவ்வூரில் அணைந்ததால் இப் பெயர் பெற்றது என்ப. இதுவே வழக்கில் பந்தநல்லூர் ஆயிற்று.

## 2. இதிகாசத் தொடர்பான கதைகள் :

மகாபாரதம், இராமாயணம் ஆகிய இவ்விரு இதிகாசங்களிலும் இடம் பெறும் பல நிகழ்ச்சிகள் தங்கள் ஊரில் நடந்ததாக எல்லா மாவட்டத்தாருமே பெரும்பாலும் சொல்லி வருகின்றனர். இவ்வாறு சொல்வதற்கு ஏற்றவாறே எவ்வகையிலோ ஊர்ப் பெயரும் பல இடங்களில் நிலவி வருகின்றன. இவ்விரண்டிலும் பாரதக் கதையைவிட, இராமாயணக் கதையே அதிகமாக வழங்கி வந்துள்ளது. தஞ்சை மாவட்டமும் அதற்கு விலக்கல்லவே.

1. திருவாளப்புத்தூர் :- (மயில்-15)

திருவாளொளிபுத்தூர் என்பதே பெயர் வடிவம் எனவும் அதுவே சிதைந்து திருவாளப்புத்தூர் ஆயிற்று எனவும் கூறுப. பாண்டவர்கள் வனவாசக் காலத்தின்போது, அர்ச்சுனன் தன்னுடைய ஒளி பொருந்திய வாளாயுதங்களை எல்லாம் இங்குள்ள புற்றுள்ளே ஒளித்து வைத்தமையால் பெற்ற பெயர் என்ப.[8]

2. பாடகச்சேரி ;- (வலங் 53)

இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லும்போது, சீதை ராமனுக்குத் தன்னைத் தூக்கிச் செல்லும் இடம் தெரியவேண்டும் என்பதன் பொருட்டு ஒவ்வொரு அணிகலன்களாக கழற்றி வீசி வந்தாள் எனவும், அதுபோது பாடகம் என்னும் அணி வீழ்ந்த இடம் பாடகச்சேரி ஆயிற்று எனவும் கூறுவர்.[9]

### வலங்கை மான் : (வலங்—46)

சீதையின் பொருட்டு இராமன் மானாக உருவெடுத்து வந்த மாரீசனை-பொய்மானை விரட்டிக்கொண்டு வந்தபோது, அம்மான் இவ்வூரில் வலப்புறமாகவே ஓடியது என்றும், அதனால் இவ்வூர் வலங்கைமான் எனவும், இவ்வூரில் இருந்து சிறிது தொலைவு சென்றதும் வளைந்து சென்றதால் அவ்விடம் வளையும் மான் புரம்—வளையுமாபுரம் எனவும் பெயர் பெற்றது என்றும் உரைப்பர்.[10]

### விழுந்த மாவடி : (நாகை—137)

விழுந்து எழுந்த மாவடி அல்லது மாவடு என்பதே வழக்கில் விழுந்த மாவடி என்றாயிற்று என்ப. பாண்டவர்கள் வனவாசத்தின் போது, ஒருநாள் காட்டுவழியே செல்லும் போது ஒரு மாமரத்தின் கீழ் முனிவர் ஒருவர் தவம் செய்துக் கொண்டிருந்தாரம். மரத்தில் ஒரே ஒரு மாங்கனி இருக்க திரௌபதி அதை விரும்பித் தன்

---

8. தகவல் கூறியவர் : திரு சொக்கலிங்கம் தேசிகர், பந்தநல்லூர்.

9. தகவல் கூறியவர் : திரு புவனேஸ்வரன், வலங்கைமான்

10. தகவல் கூறியவர் : திரு புவனேஸ்வரன், வலங்கைமான்

கணவன்மார் ஒவ்வொருவரிடமும் கேட்க அனைவரும் அதைப் பறிக்கலாகாது; அது முனிவரின் உணவிற்கு உரியது; அதை மீறிப் பறித்தால் அவரின் சாபத்திற்கு ஆளாவோம் என்று மறுத்து விட்டனர். ஆனால் அர்ச்சுனன் மட்டும் அதை மீறி மாங்கனியைப் பறித்துத் தர, செய்தி அறிந்த தருமர் மனம் வருந்தி, முனிவரின் சாபத்தில் இருந்து உய்யும் பொருட்டு கண்ணனைத் தங்களை இவ் வாபத்தில் இருந்து காக்குமாறு பிரார்த்திக்கக் கண்ணனும் நேரில் வந்து, உங்கள் மனதில் இதுவரை மற்றவர்களுக்குத் தெரியாமல் மறைந்து வைத்திருந்த செய்தியை வெளிப்படையாகச் சொல்வீர் களானுல் மாங்கனி தானே மரத்தில் ஒட்டிக் கொள்ளும் எனக் கூற, அனைவரும் அவ்வாறே கூற' மாங்கனியும் கொஞ்சம் கொஞ்சமாக மேலேறியது; இறுதியில் திரௌபதியின் முறை வரும் போது அவளும் சில செய்திளைகச் சொல்லி, அவ்வளவுதான் என்று நிறுத்த, உயரே சென்றிருந்த மாங்கனி கீழே விழுந்து விட்டது. எல்லோரும் திகைத்துக் கண்ணனை நோக்கக் கண்ணனும் திரௌபதியை நோக்கி, "நீ ஏதோவொரு செய்தியை பிறர் அறியாமல் மறைத்து விட்டாய்; அதனாலேயே மாங்கனி கீழே விழுந்துவிட்டது என்று கூறி மீண்டும் உன் மனதில் உள்ள செய்தியை மறைக்காமல் உரைப்பாயாக" என்று கூற திரௌபதியும், தன் சுயவரத்தின் போது பாண்டவர்கள் அந்தணர் உருவில் இருக்க, எல்லா அரசர்களும் தன்னை மணப்பதற்காக வைத்திருந்த இலக்கை வீழ்த்தாமல் போய்விட, கர்ணன் வந்தபோது, அவனின் தோற்றம் கண்டு இவனே இலக்கை வீழ்த்தக் கூடியவன் என நினைத்து, அவனையே மாப்பிள்ளையாக நினைத்து, மயங்கியதையும் கூறினாள் இதைக் கூறியதும் கீழே விழுந்த மாங்கனி மீண்டும் உயரே சென்று, மரத்தில் பொருந்தியதாம். இவ்வாறு மாங்கனி விழுந்து எழுந்த மையால், விழுந்து எழுந்த மாவடி அல்லது மாவடு எனப்பெயர் பெற்றதே பின்னர் வழக்கில் விழுந்த மாவடி ஆயிற்று என்ப.[11]

## 5. வேடம்பூர் : (வலங்)

பாண்டவர்கள் வன வாசத்தின் போது இறைவன் வேடனாக

11. தகவல் கூறியவர் : திரு. சத்தியமூர்த்தி, ஆய்வாளர், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.

வந்து, அர்ச்சுனனை எதிர்த்தமையால் இப்பெயர் பெற்றது என்பர் இதற்குச் சான்ருக இவ்வூர் இறைவனின் பெயரை-வேடம்புரீஸ்வரர் என்பதைக் காட்டுவர்.

## 3. வழக்கில் மரபாகச் சொல்லப்பட்டு வருவன :

இதன் முன்பகுதியும் வழக்கில் மரபாகச் சொல்லப்பட்டு வருவதே ஆனாலும், அவை ஒரே கதையினை அடிப்படையாகக் கொண்டு- அதாவது இராமாயணம், மகாபாரதம் ஆகிய இவற்றில் வரும் நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு இருப்பதால் அவற்றைத் தனியேயும், இனி வருபவை தொடர்பற்று வேறுவேறு கதையமைப்-பினைக் கொண்டமையினால் இவற்றைத் தனியேயும் காணவேண்டியுள்ளது. சான்றிற்கு சில வருமாறு :-

### 1. ஆண்டான் கோயில் ; (வலங்)

திருவாரூரில் கோயில் கட்டும்போது, மலைப்பாங்கான பகுதியில் இருந்து இவ்வூர் வழியாக கற்களை எடுத்துச் சென்றதாகவும், ஒரு நாள் இரவு நேரமாகி விட அமைச்சன் இவ்வூரில் தங்கி விடவும், இவ்வூரார் அவனை உணவுண்ண அழைத்தபோது அவன் சிவலிங்க வணக்கம் செய்யாமல் உணவுண்ண மாட்டேன் என்று கூறியதால் இவ்வூர் மூதாட்டி ஒருத்தி தூரத்தே ஒரு விளக்கேற்றி வைத்து, அருகே ஒரு மரக்காலைக் கவிழ்த்து வைத்ததாகவும், சிவலிங்கம் போல் தோற்றம் அளித்த அதை அமைச்சன் வழிபட்டு உணவுண்டதாகவும் இரவு முடிந்துப் பகல் உதயமான பொழுது, அமைச்சன் கோயிலைப் பார்க்க விரும்பியதாகவும், ஊரார் மனம் வருந்தி "இறைவா! ஓர் உயிர் பசித்திருக்கப் பொறுக்காமல் பொய் சொன்னோம்; நீயே காத்தருளவேண்டும் என வேண்டிக் கொண்டதாகவும், பிறகு அமைச்சனை அழைத்துச் சென்துகாட்ட அங்கே மரக்கால் சிவலிங்கமாக இருந்ததாகவும் இவ்வாறு மக்களையும் அமைச்சனையும் இறைவன் அருளால் ஆண்டமையால் இவ்வூர் ஆண்டான் கோயில் எனப் பெயர் வந்ததென்ப.[12]

---

12. தகவல் கூறியவர் : திரு. புவனேஸ்வரன், வலங்கைமான்

## 2. உறந்தைராயன் குடிகாடு : (ஒரத்)

இவ்வூர் ஒரத்தநாடு தாலுக்காவில் உள்ளது. இவ்வூருக்கும், இதைச் சுற்றியுள்ள வேறு சில ஊர்களுக்கும் (புலவன் காடு, தெலுங்கன் குடி காடு) என பெயர்க் காரணம் பற்றி அறிய வேண்டி ஆய்வு செய்தபோது கிடைத்த தகவல், தஞ்சையை ஆண்ட மன்னன் (யாரென உறுதியாகத் தெரியவில்லை) ஒருவன் கடல் காண இவ்வூர் வழியே சென்றதாகவும், இடையே பல கூட்டம் கூட்டமாக மக்கள் வசித்து வந்ததாகவும் அவர்களை அரசன் விசாரித்து ஒவ்வொரு இனத்தவர் வாழ்ந்த பகுதியையும் அவ்வினப் பெயராலேயே அழைக்குமாறு கட்டளை இட்டதாகவும், அதனாலேயே உறந்தை ராயர், தெலுங்கர் என்ற இனத்தவர்கள் வசித்த பகுதி அவர்கள் பெயராலும், புலவர்கள் வாழ்ந்த பகுதி புலவர் காடு எனவும் அழைக்கப்பட்டது என்ப[13].

## 3. பாஸ்கர ராஜபுரம் : (திருவிடை 27/3)

பாஸ்கர ராயர் என்ற முனிவர் இவ்வூரில் வாழ்ந்ததாகவும், அவர் பெயராலேயே இவ்வூரும் வழங்கப்பட்டதாகவும் கூறுப. இம்முனி, வருடைய சமாதி என்று கூறப்படும் சமாதி ஒன்றும் இங்குள்ளது

இக்கதைகளை நோக்கும் போது இவைகள் பெரும்பாலும் வழக்கில் எந்த வித ஆதாரமும் இல்லாமல் வழங்கப்பட்டு வருவதாலும், ஏனையவை தலபுராணங்களில் வடமொழி ஆதிக்கத்தின் காரணமாக எழுந்தவை என்பதும் தெரிய வருவதால் இக்கதைகளை முழுவதுமாக ஏற்றுக்கொள்ள முடியாமையும், முழுவதுமாக விலக்க இயலாமையினாலும், இவற்றை ஏற்று இவற்றின் வழி உண்மையைக் காண இவை ஓரளவு துணை செய்கின்றன என உணரலாம்.

எனினும் இக்கதைகள் இலக்கிய வளர்ச்சிக்கும் பெரும் தொண்டினைச் செய்கின்றன என்பது மறுக்க முடியாத உண்மை ஆகும். குறிப்பாகத் தலபுராண இலக்கியங்கள் அவற்றின் வழியே இதிகாசங்களை ஒட்டிய சிறு சிறு புராணங்கள் தோன்றுவதற்கு

---

13. தகவல் கூறியவர் : திரு. வீ. தனபாலன், பூவத்தூர், ஒரத்தநாடு.

பெரிதும் துணை செய்கின்றன. மேலும் மனிதனின் கற்பனை வளத்தைப் பெருக்கவும் உதவியாக அமைகின்றன.

"இப்பெயர்கள் மனிதனின் கற்பனைக்கு இடம் அளிப்பன. அது ஒவ்வொரு மனிதனின் ஊருக்கும் அமைந்துள்ள பெயர்களை விளக்கும் வாயிலாக ஏற்பட்ட முயற்சியின் விளைவு. அம்முயற்சியில் அவரவர் கற்பனை காலங்காலமாய்த் தொடர்ந்து ஒரு ஊருக்கே பலகதைகள் என்ற அடிப்படையில் அது கற்பனைக்குரிய வழி அமைக்கிறது. இவ்வாறு கதை கற்பனையாக ஏற்பட அதை உறுதிப்படுத்தும் வண்ணம் பல்வேறு புராண நாட்டுக் கதைகள் ஏற்படும். இப்புராண வகை இலக்கியங்கள் ஒரு சிறப்பான இடத்தை இதனால் அடைந்துள்ளன. இந்தப் புராணக் கதைகளும், கோயில்களுக்குரிய கதைகளும், நாட்டுக் கதைகட்கு மிகுந்த உதவியாக அமைந்தன. மக்களின் சமுதாய நாட்டுக் கதைகள் பண்பாட்டு அடிப்படையிலும், நாட்டுத் தலைவர்கள் சிறப்புரைக்கும் வகையிலும், அமைந்து வளர்ந்தவை. இவ்வாறு ஊர்கள் பற்றிய கதைகள் ஒரு சிறப்பான இலக்கிய வகையையும் தோன்றச் செய்தற்குரிய கனமாக அமைந்தன[14].

என்னும் கூற்றும் நாட்டுக் கதைகளின் - பெயர்த் தொடர்பான இலக்கிய கதைகளின் அவசியத்தை நன்கு உணர்த்தும்.

---

14. திருநெல்வேலி மாவட்ட இடப்பெயராய்வு, ப. 23.

## கல்வெட்டுகளில் ஊர்ப்பெயர்கள்[15]

ஊர்ப்பெயர்களின் உண்மையான வடிவத்தை அறிந்து கொள்ளப் பெரிதும் உதவுபவை கல்வெட்டுகளேயாகும். கல்வெட்டுகளினால் அறியப்படும் பல வரலாற்று உண்மைகளில் இதுவும் ஒன்றாகும். கல்வெட்டுகளில் உள்ள பல ஊர்ப்பெயர்கள் இன்றும் அடையாளம் காணவியலாத அளவிற்கு மாற்றமடைந் துள்ளன. ஊர்களின் எல்லையைக் கணக்கிடும் போதும், கோயில்களுக்கு, நிபந்தமாக நிலமளிக்கும் போதும், அந்தணர் களுக்கும் பிறருக்கும் நிலங்களையோ அல்லது ஊர்களையோ தானமளிக்கும் போதும், இது போன்ற இன்ன பல காரணங்களினுல் தானமளிக்கப்படும் நிலங்களை, ஊர்களைப் பற்றி விளக்கமாகக் கூறும்பொழுது, அவ்வூரைப் பற்றிய முழு விவரமும் தரப்படுகிறது' இதிலிருந்து அக்காலத்தில் ஊர்களை எப்படியெப்படியெல்லாம் பிரித் திருந்தனர் என்பதை நன்கு அறிய முடிகிறது. பெரும் பாலும் இங்கே காணப்போகும் கல்வெட்டுப் பெயர்கள் சோழருடைய ஆட்சிக் காலத்தில் வழங்கியவைகளையே ஆதலால், அவர்கள் காலத்தில் நாடுகள் எவ்வாறு பிரிக்கப்பட்டிருந்தது என அறிதல் அவசியமாகும்.

> ''சோழப் பேரரசில் பல்வேறு நிர்வாகப் பிரிவுகள் இருந்தன. மிகப்பெரிய பிரிவுகளுக்கு வளநாடு அல்லது மண்டலம். என்பது பெயர். ஒவ்வொரு வளநாட்டிலும் பல நாடுகள் இருந்தன. நாடு பல கூற்றங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பெரிய நகர் ஒவ்வொன்றும் ஒவ்வொறு கூற்றமாக இருந்தது. அதற்குத் தனியூர் அல்லது தன் கூற்றம் என்பது பெயர்'' [16]

---

15. இத்தலைப்பிலும், இதன் பிற்சேர்க்கையாகக் கொடுக்கப்பட் டுள்ள அட்டவணை மூன்றிலும் தரப்பட்டுள்ள கல்வெட்டுப் பெயர்கள் அனைத்தும், தஞ்சை சென்னைக் கல்வெட்டுத் துறையினர் பலராலும், அத்துறை (கல் வெட்டுத் தொகுதிகள்) வெளியீடுகளாலும் அறியப்பட்டவை

16. தென்னிந்திய வரலாறு பகுதி--1. கே ஏ நீலகண்ட சாஸ்திரியார், ப 319

எனவரும் பகுதியினால் சோழர்காலத்தில் நாடுகள் பிரிக்கப்பட்டிருந்த முறையை அறிய முடிகிறது. இவற்றுள் வளநாடு, மண்டலம் என்று வழங்கப்படுபவைகளை இன்றைய மாவட்டம் (District), போன்றதாகவும், கூற்றம், நாடு என்று வழங்கப்படுபவைகளை இன்றைய வட்டம்(Taluk) போன்றதாகவும் கொள்ளலாம். அந்தணர்களுக்கு மானியமாக அளிக்கப்பட்ட ஊர்கள்'' சதுர்வேதி மங்கலம்'' என்றும், நகர்களிலும், கிராமங்களிலும் மக்கள் வசித்த பகுதி ஊர், நத்தம் என்றும், கைவினைஞர் வசித்தபகுதி கம்மாளச்சேரி என்றும், பறையர் வசித்த பகுதி பறைச்சேரி என்றும், இவைகளுக்கும், கோயில்' குளம், கிராமத்தின் வழியாகச் சென்ற கால்வாய், சுடுககாடு ஆகிய இவைகளுக்கும் வரி விலக்கு அளிக்கப்பட்டு இறையிலி நிலங்களாக இருந்தமையை அறிய முடிகிறது. இன்று சிறு கிராமங்கள் (Hamlets) என்று வழங்கப்படுபவை அக்காலத்தில் ''பிடாகை'' என்று வழங்கி இருக்கலாம் என்பது பல கல்வெட்டுக்களில், ''இவ்வூர்ப் பிடாகை'' எனவரும் தொடர்களால் அறிய முடிகிறது.

இனி இக்கல்வெட்டுப் பெயர்களை இருவகையாகப் பிரித்துக் காணலாம்.

1. அன்றும் இன்றும் ஒரே பெயரினதாக இருத்தல்.
2. அன்றைய பெயரில் இருந்து முற்றிலும் மாறுபட்டு எவ்வாறு மாறியது என்று அறிய இயலாதவாறு திரிந்து வழங்குபவை.

இவ்விரு நிலையிலும் நின்று கல்வெட்டில் காணப்படும் ஊர்ப்பெயர்களை ஆய்வு செய்யுமுன், பொதுநிலையில் சில கூறுகளைக் காணலாம். பொதுவாக கல்வெட்டில் காணப்படும் ஊர்ப்பெயர்கள் எல்லாம் பெரும்பான்மை அவை தானமாக வழங்கப்பட்ட ஊர்களாயின் தானமளித்த அரசன், அரசி அல்லது தானம் பெற்றவன் பெயரினை உடையதாய் இருப்பதைக் காணமுடிகிறது. சான்றிற்கு சில ஊர்ப் பெயர்கள் வருமாறு :

1. அருள் மொழித் தேவ சதுர்வேதி மங்கலம் (மன்னன் பெயர்)

2. ஆபரணதாரிச் சதுர் வேதி மங்கலம் (தானம் பெற்றவன் பெயராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது)
3. கிடாரங் கொண்டான் (மன்னன் பெயர்)
4. சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலம் (சந்திரலேகை என்ற தேவரடியாள் பெயர் கொண்டது).
5. செம்பியன் மாதேவி.சதுர்வேதி மங்கலம் (அரசி பெயர்)
6. சோழ குலவல்லிச் சதுர்வேதி மங்கலம் (அரசி பெயர்)
7. சோழ மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலம் (மன்னன் பெயர்)
8. திரைலோக்கிய மாதேவி சதுர்வேதி மங்கலம் (அரசி பெயர்)
9. மனுகுலச் சூளாமணி சதுர்வேதி மங்கலம் (அரசன் பெயர்)
10. ராஜேந்திர சிம்ம சதுர்வேதி மங்கலம் (மன்னன் பெயர்)
11. வானவன் மாதேவி சதுர்வேதி மங்கலம் (அரசி பெயர்)
12. விடேல் விடுகு சதுர்வேதி மங்கலம் (அரசனின் பட்டப்பெயரா கவோ அல்லது குறுநில மன்னர்களின் பெயராகவோ (முத்தரையர்) இருக்கலாம்)

இவ்வூர்கள் இன்று ஒரு சில அதே பெயருடனும் சில வேறு பெயருடனும் வழங்கி வருகின்றன. இவ்வூர்கள் முறையே இன்று 1. அருள் மொழித்தேவன் (நன்), 2. ஆபரணதாரி (நாகை), 3. புஞ்சை அல்லது திருநனிப்பள்ளி (மயில்), 4. செந்தலை (தஞ்) 5. செம்பியன் மாதேவி, (நாகை), 6. குடவாசல், (குட), 7. வேப்பத்தூர் (திருவிடை) 8. திருலோக்கி (திருவிடை), 9. இரும்புத்தலை (மயில்) 10. ஆக்கூர் (மயில்) 11. நாலூர் (நன்) 12. கடலக்குடி (மயில்) என்னும் பெயர்களில் வழங்கி வருகின்றன. இனி கல்வெட்டில் திரிந்தும், திரியாதும் வழங்கும் பெயர்களைக் காண்போம்.

## I. அன்றும் இன்றும் ஒன்றாகவே வழங்குபவை :

| | | | |
|---|---|---|---|
| 1. | அருள்மொழித் தேவன் | 11. | திருநள்ளாறு |
| 2. | ஆலங்குடி | 12 | திருப்பனந்தாள் |
| 3. | ஆபரணதாரி | 13. | திருப்புறம்பியம் |
| 4. | கண்டியூர் | 14. | திருமங்கலக்குடி |

5. கருப்பூர்
6. குடவாசல்
7. கொட்டையூர்
8. செம்பியன்மாதேவி
9. திருக்கண்ணபுரம்
10. திருச்செங்காட்டங்குடி
15. திருமருகல்
16. திருமீயெச்சூர்
17. திருவிசலூர்
18. பட்டம்
19. மருத்துவக்குடி
20. வைப்பூர்

## 2. சிறுசிறு மாற்றம் பெற்று வழங்குபவை :

| கல்வெட்டுப்பெயர் | — | மாற்றம் பெற்ற பெயர் |
|---|---|---|
| 1. அன்னவாயில் | | அன்னவாசல் |
| 2. இரும்புதல் | | இரும்புதலை |
| 3. இடையாற்றுமங்கலம் | | விடையாத்திமங்கலம் |
| 4 இன்னம்பர் | | இன்னம்பூர் |
| 5. எண்ணுகுடி | | எண்ணைக்குடி |
| 6. ஒகை | | அகர ஒகை |
| 7. கீரன்தேவன்குடி | | கீரத்தங்குடி |
| 8. சத்திமங்கலம் | | சத்திய மங்கலம் |
| 9. சாத்த மங்கலம் | | சாத்த மங்கை |
| 10. செம்பங்குடி | | செம்மங்குடி |
| 11. சேரூர் | | திருச்சேறை |
| 12. தலைச்செங்காடு | | தலைச்சங்காடு |
| 13. திருக்கடவூர் | | திருக்கடையூர் |
| 14. திருநெல்லிக்கா | | திருநெல்லிக்காவல் |
| 15. திருவலம்புரம் | | திருவலம்பூர் |
| 16. திருவைகா | | திருவைகாவூர் |
| 17. வல்லத்தூர் | | வலத்தூர் |
| 18. வாணார் கூரை | | மாணாங்கோரை |
| 19. வெட்சியூர் | | விச்சியூர் |
| 20. வெம்பற்றூர் | | வேப்பத்தூர் |

## 3. முற்றிலும் திரிந்து வழங்குபவை :

### 1. கரியாப்பட்டிணம் :

இதன் கல்வெட்டுப் பெயர் ''கல்யாண புரங்கொண்ட சோழப் பட்டிணம்''. இப்பெயரே வழக்கில் படிப்படியே மாற்றம் அடைந்து இன்று கரியாப்பட்டிணம் என்றாகி இருக்கலாம் எனத் தோன்று கிறது. கல்வெட்டுப் பெயர் சுருக்கமாக கல்யாணப்பட்டிணம் என்று வழங்கி வந்து, நாளடைவில் இவ்வாறு மாற்றம் அடைந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

### 2. செந்தலை :

இவ்வூரின் கல்வெட்டுப் பெயர் ''சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலம்'' என்பதாகும். சந்திரலேகை என்ற தேவரடியாளுக்கு. சோழ மன்னனால் மானியமாக அளிக்கப்பட்டது. வழக்கில் சந்திர லேகை என்றழைக்கப்பட்டு அதுவே சிறிது சிறிதாக மாற்றம் பெற்று செந்தலை என்று ஆகி இருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

### 3. சேங்காலிபுரம் :

இவ்வூரின் கல்வெட்டுப் பெயர், ஜெய சிம்ம குல காலபுரம் என்பதாகும். இப்பெயர் எவ்வாறு மாற்றம் பெற்றது என அறிய முடியவில்லை. எனினும் இன்று வழங்கும் பெயர் கல்வெட்டுப் பெயரின் திரிபே எனத் தோன்றுகிறது.

### 4. தாராசுரம் :

இவ்வூரின் கல்வெட்டுப் பெயர் 'ராஜராஜ புரம்'' என்பது. இப்பெயர் பேச்சு வழக்கில் ராரா புரம் என்றாகி, அது தாரா புரம் என்று மாற்றம் பெற்று,நாளடைவில் இதுவே தாரா சுரம் என்றாகியது என்பது கல்வெட்டாய்வாளர் துணிபு

### 5. திருலோக்கி :

''திரைலோக்கிய மாதேவிச் சதுர் வேதி மங்கலம்'' என்னும் கல்வெட்டுப் பெயரே நாளடைவில்'' திரைலோக்கி'' என சுருக்கமாக வழங்கப்பட்டு, இன்று திருலோகி—திருலோக்கி என்று வழங்கப் படுகிறது.

## 6. மாதிரி மங்கலம் :

"மதுரை கொண்ட சதுர்வேதி மங்கலம்" என்னும் கல்வெட்டுப் பெயரே, வழக்கில் சில மாற்றங்களைப் பெற்று, திரிந்து மாதிரி மங்கலம் என வழங்குகிறது எனத் தோன்றுகிறது.

## 7. ராஜகிரி :

"ராஜ கேசரி புரம் என்னும் கல்வெட்டுப் பெயரே வழக்கில் இவ்வாறு சிதைந்து ராஜகிரி என வழங்குகிறது என்பது உறுதி.

இக்கல்வெட்டுப் பெயராய்வினால்முற்கால வரலாற்றினை-அதிலும் சோழர் வரலாற்றினையும், அக்கால நாட்டு நிலையினையும், அரசியல் அமைப்பினையும், மக்கள் மன்னனை எந்த அளவு கொண்டாடினர் என்பதையும், அதே போல மன்னனும், மக்களுக்குப் பல்வேறு வகையில் உதவி புரிந்து அரசாண்டமையையும், மேலும் அக்கால நாட்டின் அமைப்பினையும் ஒரு சில பண்பாட்டுக் கூறுகளையும் அறிய வாய்ப்பாக இருத்தலைக் காணலாம்.

# இலக்கியங்களில் ஊர்ப்பெயர்கள்

சங்க இலக்கியங்கள் தொடங்கி இன்று வரை வெளிவந்துள்ள பல் வகையான இலக்கியங்களிலும் ஊர்ப்பெயர்கள் பற்றிய உண்மைகள் — விளக்கங்கள் பலவாக பெருகியுள்ளன. எனினும் அவ்விலக்கியங்கள் அனைத்தையும் காலவாரியாக ஆய்வு செய்த லின்றி, பொது நிலையில் ஒரு சில இலக்கியங்களில் காணலாகும் விளக்கங்களைக் காண்பதே இத்தலைப்பின் நோக்கமாகும்.

சங்க இலக்கியங்களில் பல ஊர்களின் பெயர்கள் சுட்டப்படுகின் றன. பல புலவர்கள் ஊர்ப் பெயர்களுடன் இணைத்தே அழைக்கப் படுகின்றனர். அரிசில் கிழார், ஆலியார், ஆலந்தூர் கிழார் இடைக் காடனார், இடைக்குன்றூர்க் கிழார், ஐயூர் முடவனார், ஐயூர் மூலங் கிழார், கடம்பனூர்ச் சாண்டிலியன், ஆடுதுறை மாசாத்தனார், இரும் பிடத்தலையார், காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், காவிரிப் பூம்பட்டினத்துச் செங்கண்ணனார் காவிரிப் பூம்பட்டினத் துக் கந்தரந்தனார், குடவாயிற் கொள்ளம் பக்கனார், கோக்குள முற்றனார், கோவூர்க் கிழார், செம்பியனார், சோனாட்டு முகை யலூர்ச் சிறுகருந் தும்பியார், துறையூர், ஓடைக் கிழார், நல்லாவூர்க் கிழார், பேரெயின் முறுவலார், வெள்ளைக்குடி நாகனார் இன்னும் பலர் ஆவர். இதுவன்றி பல ஊர்களும் இலக்கியங்களில் சுட்டப் பட்டுள்ளன. ஆவூர் ஆலங்குடி, ஆடுதுறை, காவிரிப்பூம் பட்டினம், குடந்தை, வெண்ணிப் பறந்தலை, தலையாலங்கானம் போன்ற பல ஊர்கள் இடம் பெற்றுள்ள.

அடுத்த நிலையில் பக்தி இலக்கிய காலத்தில் தேவார, திருவாச கங்களிலும், ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தத்திலும் சிவனும், மாலும் உறைகின்ற இடங்களைப் போற்றிப் புகழும் போது ஊர்ப் பெயர்களை உரைத்துச் செல்கின்றனர். இவற்றில் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் "திரு" என்ற அடைமொழி சேர்க்கப்பட்டு, ஒரு சில கோயில் பெயர்களுடனும் இணைந்து வழங்குகின்றன. இவற்றிலும் பெரும்பாலானவை தலபுராணங்களை ஒட்டியும் வருகின்றன.

பெரும்பாலும் கோயில் தலபுராணங்கள் அவ்அவ் ஊரின் பெயரையும், அவ்வவ்வூர் கோயில் இறைவனுடன் இணைத்து ஒரு கதையினையும் கூறி, அதற்கேற்றாற் போல பெயரையும் பெரும்பாலும் வடமொழி ஆக்கமாக மாற்றி இருப்பதைக் காணமுடிகிறது.

சிற்றிலக்கியங்கள் பலவற்றிலும் ஊர்ப்பெயர்கள் பற்றிய விளக்கங்கள் பலவாகக் காணப்படுகின்றன. கோவை, உலா அந்தாதி போன்ற சில சிற்றிலக்கியவகைகள் தனியொரு ஊரின் இறைவனை நாயகனாக—தலைவனாக கொண்டு பாடப்படுகின்ற போது, அவற்றில் அவ்வூரைப் பற்றிய விளக்கங்களும், அதன் அருகே உள்ள ஊர்கள் பலவற்றின் விளக்கங்களும் சுட்டிச் செல்லப்படுவதைக் காணமுடிகிறது. இவையும் ஊர்ப்பெயர் ஆய்விற்கு உறுதுணையாக அமைகிறது.

பயணக் கட்டுரைகள்—அதாவது இமயம் முதல் குமரி வரை தல யாத்திரை செய்தும், பிறவாறாகவும் ஊர் ஊராகச் சென்று சுற்றி வந்து பல ஊர்களைக் கண்டு, அவற்றில் தாம் கண்டவற்றையும் கேட்டவற்றையும் கட்டுரையாக வடித்து உள்ளனர். இவை பெரும்பாலும் தல புராணப் பெயர்களையே சுட்டுவதைக் காணமுடிகிறது. மேலும் இவர்கள் இக்கட்டுரைகளை ஆய்வு நோக்கில் எழுதியிராமையாலும் இவை பலனளிக்கவில்லை எனலாம்.

செந்தமிழ்ச் செல்வி[17] போன்ற இதழ்களிலும், குமரகுருபரன் ஞானசம்பந்தம் போன்ற இதழ்களிலும் ஆய்வுக் கட்டுரைகள் பெருமளவிற்கு வந்துள்ளன. இவற்றில் பல ஊர்ப் பெயர்கள் பற்றியனவாகவும் உள்ளதைக் காணமுடிகிறது. செந்தமிழ் செல்வியின் ஆய்வுக் கட்டுரை ஒன்றில், "கோடிக்கரையின் இலக்கியப் பெயர் தொன்முது கோடி (அக நானூறு-பாடல் 70) எனவும், தாலமி-வேதாரண்யத்தை "நிகமம்" என்ற பெயரால் குறிப்பிட்டு உள்ளதையும் கூறி விளக்கமான ஆய்வு ஒன்று பயனுள்ள முறையில் செய்யப்பட்டுள்ளது. மேலும் பல இதழ்களில்

---

17. செந்தமிழ்ச் செல்வி, 1975, பக்—32—36
    ,, 1948-49, பக்—242-44, 463-67
    ,, 1925 26, பக்—395-401, 529-540

கோயில் வெண்ணி, திருவையாறு, மிழலை நாடு, போன்ற பல ஊர்களைப் பற்றிய விளக்கமான ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளன. இவை ஊர்ப்பெயர்கள் பற்றிய உண்மையான வரலாற்று நோக்குடன் செய்யப்பட்ட ஆய்வாகப் பயன் தரும் வகையில் அமைவதைக் காண முடிகிறது.

கலைக் களஞ்சியம் போன்ற அகராதிகளிலும் ஊர்கள் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. தஞ்சைமாவட்டத்தின் சுமார் 200 ஊர்களைப் பற்றிய குறிப்புக்கள்கலைக் களஞ்சியத்தில் காணப் படுகிறது. எனினும் இவை பெரும்பான்மை அவ்வூர்ச் சிறப்பை நல்கு வனவாகவே உள்ளதே தவிர,ஊர்ப்பெயர் பற்றியஆய்வு காணப்பட வில்லை. எனினும் இவையும் ஒவ்வொரு ஊரின் சிறப்பம்சம்தையும் தெரிந்து கொள்ளத் துணை செய்கின்றது. இஸ்லாமியக் கலைக்களஞ் சியமும் ஒரு சில ஊர்களைப் பற்றி-அடியக்கமங்கலம்—அடியார்க்கு மங்கலம், அந்திக்கடை-அந்திக்காடு-ஹாத்திகாட், அதிராம்பட்டினம் அதிவீரராமன் பட்டினம் என்பன போன்ற ஊர்ப்பெயர்கள் பற்றிய உண்மையை அறிய ஆய்வுக்குத் துணை செய்கிறது.

இலக்கியங்கள் வரலாற்றுக்கு பெருமளவில் துணை செய்வன என்ற அளவில் ஊர்ப்பெயர்கள் ஆய்விற்கும் பல்வேறு விதங்களில், சிறந்த முறையில் விளக்கமான உண்மைகளை அளித்து துணை செய்கின்றன. இலக்கியங்களில் குறிப்பிடப்படும் பல ஊர்ப் பெயர்கள் இன்று வழக்கில் வழங்கப்படாமல் இருப்பினும், ஒரு சில ஊர்ப்பெயர்களில் அவற்றின் கூறுகள் வழங்கி வருவதைக் காணமுடிகிறது. இலக்கியங்களைக் காலவாரியாக ஆய்வு செய்யின் வரலாற்றுக்காதாரமான பல ஊர்களின் பெயர் உண்மைகள் புலனாகும் என்பதில் ஐயமில்லை.

## மொழியியல் நோக்கில் ஊர்ப்பெயர்கள்.

ஊர்ப்பெயர்கள் காலத்திற்குக் காலம், இடத்திற்கு இடம் வழங்குவோரின் தன்மைக்கு ஏற்பப் பல்வாறுகத் திரிந்து வழங்குவதைக் காணமுடிகிறது.

இவ்வூர் பெயர்களை மொழியியல் நோக்கில் ஆய்வு செய்யும் போது பல சிறப்பான உண்மைகள் விளக்கமாகின்றன. மொழியியலில் விகாரங்கள் எனக் குறிப்பிடப்படும் தோன்றல், திரிதல் கெடுதல் என்பனவும், உயர்பொருட் பேறு, இழிபொருட் பேறு என்பனவும் மரூஉப் பெயராய் வருவனவும், இதுபோன்ற இன்னபிற விளக்கங்களையும் நன்கு காணமுடிகிறது.

எழுத்து வழக்கில் ஒன்றாக வழங்கப் பெறும் ஒரு ஊர்ப்பெயரே பேச்சு வழக்கில் வேறு முறையாக மாற்றி திரிந்து வழங்கப்படுகிறது. உதாரணமாகத் திருவிடை மருதூர் என்று எழுத்து வழக்கில் வழங்கும் பெயரே பேச்சு வழக்கில் திருடமருதூர் என்று வழங்கப்படுதலைக் காணமுடிகிறது. ஊர்ப்பெயர் இடையில் சில எழுத்துக்கள் குறைந்து வழங்கப்படும் இதனை மொழி நூலார் இடை கெடுதல் என வழங்குவர்.

வழக்கில் பல ஊர்ப்பெயர்கள்—"இங்கன்" என்பது "என்கண்" எனவும், "இள நகர்" என்பது "எள நகர்" எனவும், "இளவனூர்" என்பது "எளவனூர்" எனவும் இகரம் எல்லாம் எகரமாக மாறி இருத்தலைக் காணமுடிகிறது. இதனை மொழியியலார் திரிதல் என்பர்.

உயர்ந்த பொருளில் வழங்கப்பட்ட ஒரு சொல் நாளடைவில் தாழ்ந்த பொருளில் வழங்குவதை மொழி நூலார் பொருட்பேறு என வழங்குபவர். சிலப் பொருள்கள் இழிந்த நிலையில் வழங்கப்பட்டது உயர்ந்த கருத்திலும், உயர்ந்த கருத்தில் வழங்கப்பட்டது இழிந்த நிலையிலும் வழங்கப்படுதல் மொழியியல் நோக்கில் முறையே "உயர்

பொருட்பேறு எனவும் இழிபொருட்பேறு'' எனவும் வழங்கப்படும்.[18] இவ்வகையிலேயே' 'சேரி'' என்பது மூற்காலத்தில் சேர்ந்து வாழ்தல் என்ற பொருளைக் குறிக்க இன்று வழக்கில் பிற்ப்பட்டோர் வாழு மிடம் என்பதைத் குறிக்கும் இழிபொருட்பேறாய் வழங்குவதைக் காணமுடிகிறது.

சில பெயர்கள் தம்பெயர் சுருக்கப்பட்டு இறுதியில் ஐகார விகுதி பெற்று மரூஉப்பெயராக வழங்குவதைக் காணமுடிகிறது.

1. கும்பகோணம்—குடந்தை
2 அதிராம் பட்டிணம் — அதிரை
3. திருவாவடுதுறை — துறைசை
4. தஞ்சாவூர் — தஞ்சை
5. கருந்தட்டான்குடி — கரந்தை
6. நாகப்பட்டினம் — நாகை
7. தரங்கம்பாடி — தரங்கை
8. தருமபுரம் — தருமை
9. திருப்பனந்தாள் — பனசை

போன்று மாற்றமடைந்து வழங்குவதைக் காணமுடிகிறது.

பலபெயர்கள் முந்தைய மூலம் தமிழாஃஎனத் தெரியாத நிலையில் பிற்காலத்தில் வடமொழி ஆக்கமாக வழங்கப்படுவதைக் காண முடிகிறது. திருமறைக்காடு — வேதாரண்யம் என வழங்குதல் போன்றவை இதற்கு உதாரணம் எனலாம் இவையெல்லாம் மொழியியல் நோக்கில் விரிவாக ஆராயப்படின் பல வரலாற்று உண் மைகளை அறியப்பயனுள்ள சான்ருய் அமையும் என்பது உறுதி

> இடங்கள் ஆட்கள் போன்றவற்றின் பெயர்கள் சொற் களாக இருப்பினும் அவைகள் மொழியின் மற்ற சொற்களில் இருந்து பல நிலைகளில் மாறுபட்டுச் சில சிறப்பியல்பு களோடு விளங்குகின்றன. இப்பெயர்கள் மொழியில் ஏற்படும் பொது மாற்றங்கட்டு உட்பட்டு உட்படாமலும் நிற்கும் வல்லமை உடையன. மொழியில் உள்ள மற்ற சொற்களைவிட நிலைபேறுமை இச்சொற்கள் வரலாற்றோடு நேரடித் தொடர்பு கொண்டு பழமை எச்சங்களாக நின்று மனித வரலாற்றையும் பண்பாட்டையும் விளக்கும் ஆற்றல் உடையன.[19]

என்னும் கூற்று ஈண்டு நினைத்து சிந்தித்தற்குரியது.

18. மொழியியல், ரா. சீனிவாசன், பக். 299-300
19. நாச்சிமுத்து, இடம்பெயராய்வு ஓர் அறிமுகம், ப-339.

## முடிவுரை :

ஊர்ப்பெயர்கள் ஆய்வு என்பது ஆய்வு உலகில் ஒரு பெரும் முயற்சி-புதுமுயற்சி எனினும் இதனால் விளையும்-விளைந்த பல்வேறு விதமான நன்மைகள் ஆய்வுலகிற்கும், சமுதாயத்திற்கும் பெரும் முன்னேற்றம் தருவனவாகும். முக்கியமாக இம்மாவட்டக் கல்வெட்டுப் பெயர்கள் விரிவாக எடுத்தாராயப்படின் இன்னும் வரலாற்றில் விளக்கம் பெறாமல் இருக்கும் சோழ, பாண்டிய, சேர, மன்னர்கள் வரலாறு, குறுநிலத்தலைவர்கள் வரலாறுஆகியவை நன்கு விளக்கம் செய்யப் பெறுவதுடன் பல வகையிலும் சமுதாய அமைப்பினை அறிய ஒரு வழி செய்வதாகவும் அமையும் என்பது உறுதி. பல ஊர்ப்பெயர்கள் பண்பாட்டு அடிப்படையிலும் அமைந்து இருப்பதைக் காணமுடிகிறது. இயற்கை அமைப்பிற்கு ஏற்றவாறு ஊர்களுக்குப் பெயர்கள் வழங்கி இருந்த பண்டையோர் கூர்த்த அறிவும் இதனால் புலனாகிறது. மேலும் மொழியியல் நோக்கில் எழுந்த பல்வேறு மாற்றங்களையும், வரலாற்று நோக்கில் எழுந்த பல்வேறு மாற்றங்களையும், சமுதாய அமைப்பினையும் விரிவாக அறிய உதவியாக அமைகிறது. இவ்வாய்வு அடிப்படை ஆய்வே ஆதலின் இதன் வழி மேலும் பல விதங்களில் ஆய்வினை விரித்துச் செய்யின் பல்வேறு உண்மைகளை அறிய பயனுள்ளதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

# ஊர்ப்பெயர்கள் அகர நிரல்

## 1. பேராவூரணி வட்டம்

| | |
|---|---|
| பின்னவாசல் | 52 |
| புளிச்சங்காடு | 16/1 |
| பூலான் கொல்லை | 182 |
| பூனைக்குத்திக்காடு | 110 |
| பைங்கால் | 13 |
| பெத்தனாட்சி வயல் | 97 |
| பெரியகத்திக் கோட்டை | 95 |
| பெரியநாயகிபுரம் | 235 |
| பெருமகலூர் தென்பாதி | 58 |
| ,, வடபாதி | 57 |
| பேராவூரணி | 79 |
| மணக்காடு | 86 |
| மரக்காவலசை | 103 |
| மரவன் வயல் | 101 |
| மருங்கப்பளளம் | 119 |
| மாவடுக்குறிச்சி | 38 |
| முடப்புளிக்காடு | 51/1 |
| முடப்புளிக்காடு | 51/2 |
| முதுகாடு | 183 |
| ராவுத்தன் வயல் | 100 |
| ருத்திர சிந்தாமணி | 60 |
| ரெகுநாதபுரம் | 59 |
| ரெகுநாயகிபுரம் | 107 |
| ரெங்கநாயகிபுரம் | 9 |
| ரெட்டை வயல் | 90 |
| ,, ,, உக்கரை | 89 |
| லெட்சுமி நரசிம்மபுரம் | 49/1 |
| வலப்பிரமன்காடு | 85 |
| வலையன் வயல் | 56 |
| வாத்தலைக்காடு | 111 |
| வில்லுனி வயல் | 99 |
| விளங்குளம் | 61 |
| வீரக்குடி | 87 |
| வீரியங்கோட்டை | 109 |

## 2. நீடாமங்கலம் வட்டம்

| | |
|---|---|
| அகரவேலுகுடி | 58 |
| அதங்குடி | 37 |
| அரிச்சபுரம் | 35 |
| அன்னவாசல் | 31 |
| அன்னவாசல் தென்பாதி | 31/1 |
| அனுமந்த புரம் | 24 |
| ஆதனூர் | 17 |
| ஆயிகுடி | 38 |
| ஆலம் பல்லம் படுகை | 17/1 |
| இடையர் நத்தம் படுகை | 16/3 |
| இளமதுக்கூர் | 69/1 |
| ஒட்டக்குடி | 24/2 |
| ஒளிமதி | 23 |
| ஓகை பேரையூர் | 64 |
| ஓகைபேரையூர் தோட்டம் | 64/1 |
| ஓவர்ச்சேரி | 52 |
| காக்கையாடி | 54 |
| காட்டு சன்னாவூர் | 21/2 |
| காளச்சேரி | 15 |
| காளச்சேரி படுகை | 15/2 |
| கிளியனூர் | 66 |
| கீழப்பட்டு | 12/1 |
| கீழமணலி | 63 |
| கீழாளவந்த சேரி | 33 |
| குலமாணிக்கம் | 76 |
| கூத்தாநல்லூர் | 42 |
| கொத்தங்குடி | 50 |
| கொத்தமங்கலம் | 1/31 |

| | |
|---|---|
| கோவில் வெண்ணி | 18 |
| சமுதாயக்கரை | 34/3 |
| சாத்தனூர் | 55 |
| சித்த மல்லி கீழ் பாதி | 19/1 |
| சித்தமல்லி மேல் பாதி | 19 |
| சித்தனக்குடி | 59 |
| சித்தாம்பூர் | 44 |
| சித்திரையூர் | 70 |
| செட்டிச் சத்திரம் | 16/1 |
| செருவாமணி | 62 |
| சேகரை | 39 |
| சேந்தங்குடி | 73 |
| சோத்துரை படுகை | 15/1 |
| திருக்கண்ணமங்கை கோட்டை | 24/3 |
| திருராமேஸ்வரம் | 90 |
| தென் கோவனூர் | 43 |
| நகர் | 20 |
| நரசிங்கமங்கலம் | 20/1 |
| பண்டிதக்குடி | 56 |
| பரப்பன மேடு | 14 |
| பழங்களத்தூர் | 24/1 |
| பழைய நீடா மங்கலம் | 22 |
| பழையனூர் | 57 |
| பாகவ மேளம் | 16 |
| பாலக் குறிச்சி | 69 |
| பித்துண்டம் | 16/2 |
| புதுத் தேவங்குடி | 34 |
| புனவாசல் | 61 |
| புள்ளமங்கலம் | 68 |
| பூந்தாழங்குடி | 62 |
| பூவனூர் | 13 |
| பெரம்பூர் | 26 |
| பெரிய கொத்தூர் | 75 |
| மஞ்சன வாடி | 51 |
| மணக்கரை | 74 |
| மணப்பாலக்குடி | 19/2 |
| மன்னி மங்கலம் | 21 |
| மாரங்குடி | 71 |
| மாவட்டக்குடி | 77 |
| முன்னுவல் கோட்டை | 16 |
| மேல தொட்டி | 34/1 |
| மேலாள வந்த சேரி | 32 |
| ராமனுதன் கோயில் | 43 |
| ராயபுரம் | 12 |
| ரிஷியூர் | 25 |
| லெட்சுமாங்குடி | 41 |
| வக்ர நல்லூர் | 40 |
| வடகார வயல் | 27 |
| வட கோவனூர் | 49 |
| வடபாதி மங்கலம் | 65 |
| வளத்தா மங்கலம் | 34/2 |
| வாசு தேவ மங்கலம் படுகை | 2/2 |
| வையகளத்தூர் | 23/1 |
| வெங்காரம் பேரையூர் | 60 |
| வெள்ளக்குடி | 36 |
| வேற்குடி | 53 |
| ஹரிச்சந்திர புரம் | 76 |

## 3. மன்னார்குடி வட்டம்

| | |
|---|---|
| அக்கரைக் கோட்டகம் | 109 |
| அத்திக் கோட்டை | 7/1 |
| அரவத்தூர் | 29 |
| அசேஷம் | 135 |

## வேதாரண்யம் வட்டம்

| | |
|---|---|
| பஞ்ச நதிக்குளம் கிழக்கு | 117 |
| பஞ்ச நதிக்குளம் மேற்கு | 118 |
| பன்னாள் | 125 |
| பிராந்தியக் கரை | 62 |
| பிரிஞ்சி மூலை | 42 |
| புஷ்பவனம் | 50 |
| பெரிய குத்தகை | 94 |
| மணக்குடி | 40 |
| மருதூர் தெற்கு | 116 |
| மகாராஜபுரம் கிழக்கு | 52/1 |
| மகாராஜபுரம் ,, | 65/3 |
| மகாராஜபுரம் ,, | 93 |
| மகாராஜபுரம் ,, | 129/1 |
| ,, ,, | 130/1 |
| ,, ,, | 131/4 |
| ,, மேற்கு | 66 |
| மூலக்கரை | 64 |
| வடமழை | 64 |
| வடுகூர் | 39 |
| வண்டுவாஞ் சேரி | 113 |
| வாய்மேடு | 106 |
| வெள்ளப் பள்ளம் | 48 |
| வேதாரண்ய புரம் | 65/1 |
| வேதாரண்யம் | 131 |
| வேதாரண்யம் பட்டினம் | 131/3 |

## திருத்துறைப் பூண்டி வட்டம்

| | |
|---|---|
| அண்டங்கரை | 12 |
| அம்மனூர் | 16 |
| அரியலூர் | 90 |
| அலிவலம் | 10 |
| ஆதனூர் | 11 |
| ஆதிரெங்கம் | 67 |
| ஆலங்காடு | 101 |
| ஆலத்தம் பாடி | 21 |
| இடும்பாவனம் | 107 |
| உதய மார்த்தாண்டபுரம் | 99 |
| உப்பூர் | 100 |
| எக்கல் | 111 |
| எடையூர் | 89 |
| எழிலூர் | 80 |
| ஓவரூர் | 88 |
| கச்ச நகரம் | 30 |
| கச்சனம் | 19 |
| கட்டி மேடு | 69 |
| கடுவ கொத்த மங்கலம் | 134 |
| கரும்பையூர் தோட்டம் | 22/1 |
| கள்ளிக்குடி | 58 |
| கறுவங்காடு | 105/1 |
| கீரக்களூர் | 7 |
| கீரம் பேர் | 35 |
| கீராளத்தூர் | 14 |
| கீழபாண்டி | 87 |
| கீழப் பெருமழை | 109 |
| கீழ நம்மங்குறிச்சி | 102/2 |
| குரும்பல் | 23 |
| குன்னூர் | 110 |
| கொக்கலாடி | 74 |
| கொத்தல் குடி | 20 |
| கொத்தங் குடி | 91 |
| கொத்த மங்களம் | 78 |
| கொருக்கை | 73 |
| கொனப்பாடு | 32 |
| கோமல் | 13 |
| கோவில் குடி | 78 |
| சங்கத்தி | 96 |
| சாத்தங்குடி | 25 |

## திருத்துறைப்பூண்டி

## பட்டுக்கோட்டை

## ஒரத்த நாடு

| | |
|---|---|
| கண்ணுகுடி மேல்பாதி | 16 |
| கண்ணுந்தங்குடி கீழையூர் | 6 |
| கண்ணந்தங்குடி மேலையூர் | 26 |
| கரைமீண்டான் கோட்டை | 31 |
| கருக்காக் கோட்டை | 21 |
| காடுவெட்டி விடுதி | 40 |
| காட்டுக்குறிச்சி | 22 |
| காலாரப்பட்டு | 9 |
| காவாலிப் பட்டி | 33 |
| காளம் புத்தூர் | 4 |
| கிருஷ்யாபுரம் | 76 |
| கிருஷ்யாபுரம் | 104 |
| கிளாமங்கலம் | 115 |
| கீழ உளூர் | 29-1 |
| கீழவன்னிப்பட்டு | 78 |
| குனமங்கலம் | 45 |
| கொடியாலம் | 136 |
| கோபாலபுரம் | 122 |
| கோவிலூர் | 2 |
| சங்கரன் குடிக்காடு | 102 |
| சாமிப்பட்டி | 19-2 |
| சின்ன அம்மன்குடி | 106 |
| சில்லாத்தூர் | 947 |
| சென்னிய விடுதி | 75 |
| சோழன் குடிக்காடு | 114 |
| சோழபுரம் | 87 |
| தலையாமங்கலம் | 45-1 |
| தனிகை விடுதி | 110 |
| திருநல்லூர் | 96 |
| திருமங்கலக் கோட்டை மேலையூர் | 11 |
| தெற்குக் கோட்டை | 112 |
| தெக்கூர் | 92 |
| தெலுங்கன் குடிக்காடு | 3 |
| தென்மை நாடு | 25 |
| தொண்டராம் பட்டு | 15 |
| தோப்பு விடுதி | 37 |
| நடுவூர் | 20 |
| நெம்மேலி திப்பியக்குடி | 101 |
| நெய்வாசல்தென்பகுதி | 34 |
| நெய்வேலி தென்பாதி | 42 |
| ,, வடபாதி | 41 |
| பஞ்சநதிக் கோட்டை | 23 |
| பணிக் கொண்டான் விடுதி | 39 |
| பரவத்தூர் | 135 |
| பருத்திக் கோட்டை | 27 |
| பருத்திப்பார் கோவில் | 27-1 |
| ,, ,, | 27-2 |
| ,, ,, | 44-1 |
| பாச்சியார் | 83 |
| பாண்டி பழமனைக்காடு | 35/1 |
| பின்னையூர் | 93 |
| புதூர் | 79 |
| புலவன் காடு | 14 |
| பூவத்தூர் | 12 |
| பெரிய அம்மங்குடி | 107 |
| பேய்க்கரப்பன் கோட்டை | 13 |
| பொய்யுண்டார் குடிக்காடு | 97 |
| பொய்யுண்டார்க்கோட்டை | 85 |
| பொன்னுப்பா கீழ்பாதி | 43 |
| பொன்னுப்பூர் மேல்பாதி | 44 |
| மண்டலங் கோட்டை | 89 |
| முத்தாம்பாள் புரம் | 80 |
| முள்ளூர் பட்டிக்காடு | 124 |
| மூர்த்தியம்பாள்புரம் | 32 |
| மேடயக் கொல்லை | 119 |
| வடக்குக் கோட்டை | 103 |
| ,, ,, | 90 |

## தஞ்சாவூர் வட்டம்

## திருவையாறு வட்டம்

| | | | |
|---|---|---|---|
| ஓரத்தூர் | 16 | தென்னச்சேரி | 76/3 |
| கச்ச மங்கலம் | 8 | தோகூர் | |
| கடுவேலி | 155 | நடுக்காவேரி | 54/1 |
| கண்டியூர் | 69/1 | நாகத்தி | 67 |
| கத்தூர் | 46 | நேமம் | 21 |
| கருப்பூர் | 50 | பருத்திக்குடி | 74/1 |
| கரூர் | 692 | பருப்பூர் | 74/2 |
| கலியபாணர் ராஜ தோட்டம் | 68/1 | பவன மங்கலம் | 25 |
| கலு மங்கலம் | 39 | பழமானேரி | 18 |
| கல்யாண புரம் | 93 | பாதிரக்குடி | 2 |
| ,, இரண்டாம் சேத்தி | 81 | பூதராய நல்லூர் | 31 |
| ,, முதல் சேத்தி | 80 | பெரமூர் | 78 |
| கார்க்குடி | 92 | பெரும் புலியூர் | 73 |
| குழிமாத்தூர் | 54 | பொன்வாசல் | 72 |
| கிருஷ்ணாம் பேட்டை | 26 | மகாராஜ புரம் | 51/1 |
| கீழத்திருப்பந்துருத்தி | 69 | மகாதேவ புரம் | 7 |
| கோவிலடி. | 3 | மணக்கரம்பை | 94 |
| கோனேரி ராஜபுரம் | 53 | மரூர் | 40 |
| சத்த மங்கலம் | 17 | மன்னார் சமுத்திரம் | 45 |
| சாத்தனூர் | 48 | மேகளத்தூர் | 9 |
| சுயம்பாச்ச நல்லூர் | 76/4 | மேலதிருப் பந்துருத்தி | 70 |
| செங்கழுநீர் தோட்டம் | 68/2 | ராஜகிரி | 5 |
| செம்மங்குடி | 76/2 | ரெங்கநாத புரம் | 20 |
| திங்களூர் | 77/1 | வடுக்குடி | 49/1 |
| ,, | 78/2 | வரகூர் | 44 |
| திருக்காட்டுப் பள்ளி | 23 | வளப்பக்குடி | 51 |
| தீட்ச சமுத்திரம் | 29 | வானராங்குடி | 47 |
| திருச் சோற்றுத்துறை | 79-2 | விட்டலா புரம் | 27 |
| திருச்சினம் பூண்டி | 4 | விண்ண மங்கலம் | 42 |
| திருப்பழனம் | 77 | விளாங்குடி | 75 |
| திருவலாம் பொழில் | 70/1 | வைத்தியநாதன் கோட்டை | 71 |
| திருவையாறு | 74 | வெங்கிட சமுத்திரம் | 28 |
| துளசேந்திர மகாராஜபுரம் | 49/2 | ,, ,, முதல் சேத்தி | 43 |
| தென் பெரம்பூர் | 66 | வெள்ளாம் பெரம்பூர் | 56 |
| | | சேஷநாராயணத்தோட்டம் | 68/4 |

## குடவாசல் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| அகர ஓகை | 190 | காவனூர் | 226 |
| அகரத் திருநல்லூர் | 177 | குடவாசல் | 99 |
| அத்தி சோழ மங்கலம் | 214 | குளிக்கரை | 224 |
| அம்மையப்பன் | 178 | கிருஷ்ணன் கோட்டகம் | 210 |
| அபிவிருத்தீஸ்வரம் | 200 | கீரங்குடி | 173 |
| அரசவனங்காடு | 180 | கீழப்பாலையூர் | 185 |
| அரசூர் | 189 | சித்தாடி | 94 |
| அன்னவாசல் | 101 | சிமிழி | 104 |
| ஆடிப் புலியூர் | 98 | சீதக்கமங்கலம் | 86 |
| ஆயிகுடி | 213 | சுப்பையன் சேத்தி | 92/1 |
| ஆர்பார் | 212 | செம்மங்குடி | 118 |
| ஆலடிக்கருப்பூர் | 196 | செருகளத்தூர் | 97 |
| ஆனை வட பாதி | 227 | செல்லூர் | 198 |
| இலந்த வளஞ்சேரி | 105/1 | சேங்காலிபுரம் | 102 |
| இலவங்கார் குடி | 167 | சேதினிபுரம் | 111 |
| உத்திரங்குடி | 187 | திட்டாணி முட்டம் | 218 |
| உள்துறைத் தோட்டம் | 167/2 | தியாகராஜபுரம் | 225 |
| ஊர்குடி | 211 | திருக்கண்ணமங்கை | 176 |
| எண்கண் | 182 | திருக்குடி | 195 |
| எருக்காட்டூர் | 222 | திருக்களம்பூர் | 197 |
| எலையூர் | 192 | திருவிடச்சேரி | 109 |
| கடலங்குடி | 90 | திருவிடவாசல் | 206 |
| கண் கொடுத்த வனிதம் | 220 | தீபங்குடி | 117 |
| கண்டிர மாணிக்கம் | 92 | தேவர் கண்ட நல்லூர் | 225 |
| கமலாபுரம் | 223 | நட்டுவாக்குடி | 213 |
| கமலாலயன் கட்டளை | 167/1 | நாரண மங்கலம் | 108 |
| கமலாலயன் கொல்லை | 167/5 | நாராயணபுரம் | 199/1 |
| கமுகக் குடி | 199 | நாலில் ஒன்று | 208 |
| கரையாப் பாளையூர் | 183 | நெடுஞ்சேரி | 106 |
| களத்தூர் | 205 | நெய்க் குப்பை | 117 |
| கள்ளிக் குடி | 183/1 | நெய்க் குப்பை | 184 |
| காட்டூர் | 168 | நெய்க் குண்ணம் | 91/1 |
| காப்பனாமங்கலம் | 181 | பட்டார் | 203/2 |

| | |
|---|---|
| பத்தூர் | 206 |
| பருத்தியூர் | 91 |
| ,, | 221 |
| பாலவாய் | 175/1 |
| பிரதாராமபுரம் | 93 |
| புதுக்குடி | 91 |
| ,, | 103 |
| புரசாத்தாங்குடி | 199/2 |
| புலவ நல்லூர் | 174 |
| புளியூர் | 228/1 |
| புளியன் சேரி | 95 |
| பெருந்தரக்குடி | 228 |
| பெருமங்களம் | 100 |
| பெரும் பண்ணையூர் | 105 |
| பெருமாளகரம் | 209 |
| மஞ்சக் குடி | 188 |
| மணக் கால் | 179 |
| மணப் பறவை | 191 |
| மாங்குடி | 204 |
| முசிரியம் | 207 |
| மேலக் கொல்லை | 167/3 |
| மேலப் பாலையூர் | 194 |
| மேலத் திருமதிக் குன்னம் | 219 |
| மேல ராதா நல்லூர் | 216 |
| மேலராமன் சேத்தி | 87 |
| மேலாதிச்ச மங்கலம் | 186 |
| மேல்கரை | 203/1 |
| வடகண்டம் | 175 |
| வடவேர் | 117 |
| வடுகக்குடி | 223/1 |
| வளவ நல்லூர் | 201 |
| விக்ர பாண்டியம் | 110 |
| விடயபுரம் | 217 |
| விஸ்வநாதபுரம் | 203 |

## திருவாரூர் வட்டம்

| | |
|---|---|
| அகரக் கடம்பனூர் | 23 |
| அடியக்கமங்கலம் | 10 |
| அடிப் புதுச்சேரி | 12 |
| அணக் குடி | 50/3 |
| ,, | 75 |
| ,, | 119 |
| அத்திப்புலியூர் | 44 |
| அபிஷேக நல்லூர் | 100/1 |
| அம்மாக் கட்டளை | 49/2 |
| அருள் மொழித் தேவன் | 43/2 |
| அலிவலம் | 46 |
| அன்னவாசல் | 50/2 |
| ஆணை மங்கலம் | 20 |
| ஆதமங்கலம் | 107 |
| ஆந்தகுடி | 63 |
| ஆமூர் | 19 |
| ஆணை மாகாணம் | 20/1 |
| ஆணை மாகாணம் | 25/2 |
| ,, | 26/1 |
| இருக்கை | 72 |
| இலுப்பூர் | 70 |
| ஈஸ்வரவாசல் | 16/1 |
| உமா மகேஸ்வரபுரம் | 112 |
| எரவாஞ்சேரி | 22 |
| ஒக்கூர் | 26 |
| ஓடாச் சேரி | 13 |
| கடம்பர வாழ்க்கை | 25/3 |
| கடுவங்குடி | 56 |

| | | | |
|---|---|---|---|
| பழைய வல்லம் | 14 | ராதா மங்கலம் | 71 |
| பழவனக்குடி | 8 | ராமகே | 6 |
| பள்ளிச் சந்தம் | 43/1 | வஞ்சியர் | 109 |
| பள்ளிவார மங்கலம் | 7 | வண்டலூர் | 76 |
| பாவாடை தோப்பு | 2/4 | வடகரை | 28 |
| பிச்சைக் கொல்லை | 3/5 | ,, ,, | 54 |
| பிராங்குடி | 18/2 | வடக்காலத்தூர் | 69 |
| பில்லூர் | 103/2 | வடக்குவெளி | 22/4 |
| பின்னவாசல் | 114 | ,, ,, | 22/3 |
| புதூர் | 113 | ,, ,, | 42/1 |
| புதுப் பத்தூர் | 60 | ,, ,, | 41/2 |
| புதுக் கொல்லை | 48/2 | ,, ,, | 43/3 |
| புத்த மங்கலம் | 23/2 | வடகுடி | 18/3 |
| புலிவலம் | 48 | வடக்குப் பனையூர் | 102 |
| புள்ளிச் சந்தம் | 41/1 | வலிவலம் | 117 |
| பெரிய தோப்பு | 48/1 | வளத்தா மங்கலம் | 103/1 |
| பெருங்குடி | 49 | ,, ,, | 104 |
| மஞ்சாடி | 20/2 | வீதிவிடங்கண் | 2/3 |
| மங்கள நாயகி புரம் | 13/1 | வில்வங்குளம் | 2/6 |
| மாங்குடி | 53 | விளமல் | 1/1 |
| மணலூர் | 64 | விஜய புரம் | 2 |
| மாணலூர் | 105 | வெங்கிடங்கால் | 27 |
| மாணிக்கவாசன் கட்டளை | 7/1 | வெங்கடேஸ்வர புரம் | 47 |
| மேல ஒதியாத்தூர் | 22/1 | வெண்மணி | 74 |
| மேலக் கொல்லை | 3 3 | வெள்ளை பிள்ளையார் கட்டளை | 60/1 |
| மோகனூர் | 100 | | |
| ராதா நல்லூர் | 55 | வேப்பத்தாங்குடி | 110 |
| ,, ,, | 44/1 | வைப்புர் | 17 |

## நாகப்பட்டினம் வட்டம்

| | | | |
|---|---|---|---|
| அகர ஒரத்தூர் | 83 | அகிலாண்ட புரம் | 82/1 |
| அகளங்கனி | 78 | அந்தணப் பேட்டை | 35 |

## நன்னிலம்

## பாபநாசம் வட்டம்

## வலங்கைமான் வட்டம்

| | |
|---|---|
| நெடுவாசல் | 82 |
| நெம்மேலிக்குடி | 80 |
| நெம்மேலிக்குடி படுக்கை | 151 |
| நெய்க்குன்மை | 133 |
| பயத்தஞ் சேரி | 68/1 |
| பாடகச் சேரி | 53 |
| பாப்பாக்குடி | 71 |
| புத்தூர் | 136 |
| புலவர் நத்தம் | 72 |
| புளியக்குடி | 52 |
| புளியக்குடி | 137 |
| பூந்தோட்டம் | 78 |
| பூனாயிருப்பு | 63 |
| பெருங்குடி | 75 |
| மகிமாலை | 150 |
| மணக்கால் | 87 |
| மருவத்தூர் | 51 |
| மாணிக்க மங்கலம் | 66 |
| மாத்தூர் | 61 |
| மாளிகைத் திடல் | 35 |
| முனியூர் | 86 |
| மேலிவிடயல் | 58 |
| ராஜேந்திரநல்லூர் | 62 |
| ரெங்கநாதபுரம் | 28 |
| ரெகுநாதபுரம் | 44 |
| ரெகுநாதபுரம் | 65 |
| ரெகுநாதபுரம் | 83 |
| வடக்குப் பட்டம் | 48 |
| வடபாதி | 135 |
| வலங்கைமான் | 46 |
| வாணியன் கரம்பை | 29/3 |
| விருப்பாட்சிபுரம் | 54 |
| விளத்தூர் | 50 |
| வீராணம் | 40 |
| வேலக்குடி | 37 |
| வேளூர் | 32 |

## கும்பகோணம் வட்டம்

| | |
|---|---|
| அகரத்தூர் | 85 |
| அசூர் | 92 |
| அண்ணலக்கிரஹாரம் | 112 |
| அண்டங்குடி குறித் தோட்டம் | 107/3 |
| அம்மங்குடி | 73 |
| அத்தியூர் | 60 |
| அம்மாசமுத்திரம் | 98/1 |
| அம்மாத்தோட்டம் | 113/2 |
| அன்னக்குடி திரு நாகேஸ்வரம் | 117 |
| ஆண்டாகூர் | 144/2 |
| ஆரியப்படை வீடு | 105/1 |
| இஞ்சிக் கொல்லை | 152 |
| இரண்டாங்கட்டளை | 121/1 |
| இலந்துறை | 74/1 |
| இன்னம் பூர் | 00 |
| இனாம் அசூர் | 92 |
| உடையாளூர் | 110 |
| உத்தமதானி | 61/1 |
| உள்ளூர் | 114 |
| ஏகாரம் | 98 |
| ஏனநல்லூர் | 131 |
| கச்சுக்கட்டு | 7 |
| கடித்தம் பாடி | 90 |
| கருப்பூர் | 133 |

| | |
|---|---|
| பாபுராஜபுரம் | 102 |
| பாளையநல்லூர் | 132/1 |
| பிருத்தியஞ்சப்படைவீடு | 113/4 |
| பெருமாண்டி | 95 |
| பெரம்படி | 146 |
| புத்தகரம் | 121 |
| புதுத்திவான் வாடைத் தோட்டம் | 97/2 |
| மருதடி | 82/8 |
| மருதநல்லூர் | 132 |
| மல்லபுரம் | 71 |
| மலையப்ப நல்லூர் | 112/4 |
| மாங்குடி | 119 |
| மாத்தி | 112/1 |
| மாத்தூர் | 141 |
| மாதல புரம் | 102 |
| மூகாசா சின்னம்பூர் தென்பாதி | 100/0 |
| மூப்பக் கோயில் | 97 |
| மேலக் காவேரி | 98 |
| மேலக் கொருக்கை | 111 |
| ராஜன் தோட்டம் | 113/1 |
| வண்டுவாஞ்சேரி | 144 |
| வளையப் பேட்டை | 103/3 |
| வார்வாங்கரை | 149/1 |
| வாளாபுரம் | 91 |
| விசலூர் | 137 |
| விட்டலூர் | 74 |
| வில்லிர வரமடல் | 123 |
| விலாங்குடி | 72 |
| விளந்தகண்டம் | 58 |
| வெள்ளைப் பிள்ளையார் பேட்டை | 107/5 |
| வேலங்குடி | 144/1 |

## திருவிடை மருதூர் வட்டம்

| | |
|---|---|
| அண்ட மங்கலம் | 78/1 |
| அத்திப் பாக்கம் | 201 |
| அபிராம புரம் | 8/1 |
| அம்மன் பேட்டை | 63/5 |
| அம்மாப் பேட்டை | 27/1 |
| அம்மையப்பன் | 16/1 |
| அய்யா நல்லூர் | 37/4 |
| அர்த்த ஜாமக் கட்டளை | 77/7 |
| அரசேரி | 10/3 |
| அரிக் கோயில் | 36/1 |
| அழகன் சேரி | 12/2 |
| அழகேச புரம் | 24/5 |
| அளக்குடி | 57 |
| அளியா மலை | 53/1 |
| அளைக்கரை | 15/7 |
| ஆச்சாள் புரம் | 51/1 |
| ஆத்திராம புரம் | 13/4 |
| ஆரசூர் | 25 |
| ஆரியன் கூந்தல் | 67/2 |
| ஆலவெளி | 30/1 |
| ஆவணியா புரம் | 66/1 |
| ஆற்காடு | 5/1 |
| ஆற்காடு | 26/1 |
| இடைய நல்லூர் | 44/1 |
| இரு மூளை | 11 |

| | | | |
|---|---|---|---|
| மணியப் பேட்டை | 67/1 | வடுவக்குடி | 18 |
| மரத்துரை | 3 | வண்ணக்குடி | 77 |
| மருத்துவக்குடி | 65 | வண்ணபுரம் | 77 |
| மாராச்சேரி | 29/1/1 | வழுத்தூர் | 33 |
| மாராச்சேரி | 34/1 | வள்ளிக்குடி | 6 |
| மாராச்சேரி நத்தம் | 34/6 | வாண்டையாரிருப்பு | 35/2 |
| மாவுத் திருப்பு | 35 | வாய்க்கால் வெட்டுப் படுகைத் தோட்டம் | 65/1 |
| மானம் பாடி | 38 | விளத்தொட்டி | 212 |
| முட்டக்குடி | 54/1 | வினாயகன் தெரு | 15 |
| முத்தூர் | 78 | விஸ்வநாதபுரம் | 29/2 |
| முள்ளங்குடி | 14 | விஸ்வநாதபுரம் | 76 |
| முள்ளுக்குடி | 25 | வீராக்கண் | 36 |
| மேலக் காட்டூர் | 19 | வெங்கராயன் உக்கடை | 27 2 |
| மேல மரத்துரை | 3/4 | வேட்ட மங்கலம் | 2/1 |
| மேல மரையன் | 55/1 | வேப்பத்தூர் | 63 |
| மேலையூர் | 69 | வேலிக் கண்டம் | 68/4 |
| மேலையூர் | 7/1 | வேலூர் | 26/2 |
| ராயர் பிள்ளைதோப்பு | 44/4 | ஜம்புநாதபுரம் | 19/1 |
| ரெகு நாதபுரம் | 54/2 | ஜம்பகத் தோட்டம் | 77/3 |
| லட்சிக்குடி | 31/1 | ஸ்ரீகலபதிபுரம் | 63/2 |
| வடகரை | 75/2 | ஸ்ரீ சைலபுரம் | 64/3 |
| வடபாதி | 16/4 | ரெங்கராஜபுரம் | 9/1 |
| வடபாதி | 8/4 | | |
| வடக்கு மரத்துரை | 3/2 | | |

## மயிலாடுதுறை வட்டம்

| | | | |
|---|---|---|---|
| அக்களூர் | 55/1 | அசிக்காடு | 127 |
| அகரக்கீரங்குடி | 61 | அஞ்சாறுவாத்தலை | 35/5 |
| அகரக் கொருக்கை | 29/1 | அபிசேகக்கட்டளை | 62/1 |
| அகர நல்லத்துக்குடி | 77/1 | அபிராமி கோயில் பத்து | 33/6 |
| அகரமணக்குடி | 73/1 | அரயபுரம் | 45/1 |
| அகரமணல் மேடு | 1 | அரும்பானுதபுரம் | 49/1 |
| அச்சுதராயபுரம் | 74/1 | அரும்பூர் | 75/3 |

## பொறையாறு வட்டம்

## சீர்காழி வட்டம்

| | |
|---|---|
| அகர எலத்தூர் | 3 |
| அகரப் பெருந்தோட்டம் | 77 |
| அகர வட்டாரம் | 25 |
| அகனி | 53 |
| அத்தியூர் | 5 |
| அரசூர் | 12 |
| அளக்குடி | 30 |
| ஆசாள்புரம் | 28 |
| ஆரப்பள்ளம் | 36 |
| ஆலங்காடு | 23 |
| ஆலால சுந்தரம் | 27 |
| ஆறாப்பாக்கம் | 19 |
| உமையாள்பதி | 20 |
| எடக்குடி வடபாதி | 65 |
| எடமணல் | |
| எருக்கூர் | 11 |
| ஏ யோஜி மகராஜபுரம் | 23/1 |
| ஓதவந்தாங்குடி | 17 |
| ஓலையாம்புத்தூர் | 6 |
| கடவாசல் | 21 |
| கதிராமங்கலம் | 64 |
| கத்தியம்பேட்டை | 16 |
| கருவியம்பள்ளம் | 25/1 |
| கன்னபிராண்டி | 26/2 |
| கன்னியாகுடி | 62 |
| கற்கோயில் | 63 |
| காட்டூர் | 32 |
| காரதியானிருப்பு | 67 |
| காரைமேடு | 66 |
| கார் சேத்தி | 73/1 |
| கீழச்சட்டநாதபுரம் | 78 |
| கீழமாத்தூர் | 4 |
| கீழையூர் | 81 |
| குணதளபடி | 50/1 |
| குன்னம் | 7 |
| கைவிளஞ்சேரி | 49 |
| கொண்டத்தூர் | 64/1 |
| கோபாலசமுத்திரம் | 10 |
| சட்டநாதபுரம் | 47 |
| சரஸ்வதி விளாகம் | 10/1 |
| சீயாளம் | 15/1 |
| சீயாளம் | 16/1 |
| சீர்காழி | 50 |
| செம்பதனிருப்பு | 68 |
| செம்மங்குடி | 44 |
| செருகுடி | 26/1 |
| சோதிகக்குடி | 9 |
| தாடளங்கோவில் | 52 |
| தாண்டவன் குளம் | 38 |
| திட்டை | 46 |
| திருக்கருகாவூர் | 43 |
| திருநகர் | 72 |
| திருப்பத்தூர் | 61 |
| திருமுல்லைவாசல் | 40 |
| திருமைலாடி | 13 |
| தில்லைவிடங்கன் | 45/1 |
| திருவாலி | 71 |
| திருவெண்காடு | 79 |
| துளசேந்திரபுரம் | 13-2 |
| தென்னங்குடி | 53/1 |
| தென்னும்பட்டினம் | 75 |
| நல்லநாயகிபுரம் | 14 |
| நாங்கூர் | 70 |
| நெப்பத்தூர் | 74 |
| நெம்மேலி | 58 |
| பக்கிரிதைக்கல் | 13/4 |
| பச்சை பெருநல்லூர் | 18 |
| பழைய பாளையம் | 37 |

## பிற்சேர்க்கை—2

# கல்வெட்டுகளில் தஞ்சை மாவட்டம்

| இன்றைய பெயர் | வட்டம் | கல்வெட்டுப் பெயர் |
|---|---|---|
| அகத்தியான் பள்ளி | வேதா | திருவகத்தியான்பள்ளி |
| அகர ஓகை | நன் | ஓகை |
| அகரக் கடம்பனூர் | நாகை | கடம்பனூர் |
| அச்சுத மங்கலம் | நன் | சிவபாத சேகர மங்கலம் - சோமநாத சதுர்வேதி மங்கலம் அச்சுதமங்கலம் |
| அசிக்காடு | | அயிரைக்காடு |
| அசூர் | | அசுகூர் — ஆசூர் |
| அடியக்க மங்கலம் | நாகை | அடைப்பையைச் சதுர்வேதி மங்கலம் — அடியக்க மங்கலம் |
| அதளையூர் | நன் | அதளையூர் |
| அம்பர் | நன் | அம்பர் திருமாகாளம் - விக்கிரம சோழபுரம் - கோவில் திருமாகாளம் |
| அம்பருவந்தை | நன் | அம்பரத்தூர் |
| அம்பகரத்தூர் | நன் | அம்பரத்தூர் |

| | | |
|---|---|---|
| அரியநாற்றூர் | திருந் | அரியநாற்றூர் |
| அருள்மொழித்தேவன் | நன் | அருள்மொழிதேவச் சதுர்வேதி மங்கலம் |
| அரையபுரம் | பாப | அராபுரம் |
| அழிசிகுடி | தஞ் | அழிச்சகுடி - அழிசி குடி |
| அவளிவநல்லூர் | கும்ப | அவளிவள நல்லூர் |
| அன்னவாசல் | நன் | அன்னவாயில் |
| ஆக்கூர்-ஆக்கூர் பண்டாரவாடை | மயில் | ஆக்கூர் ராஜேந்திர சிம்ம சதுர்வேதி மங்கலம் |
| ஆடுதுறை | திருவிடை | திருக்குரங்காடுதுறை |
| ஆத்தூர் | மயில் | ஆற்றூர் - ராஜநாராயணச் சக்கரவர்த்தி மங்கலம் |
| ஆதனூர் | நன் | ஆதனூர் |
| ஆதமங்கலம் | நாகை | ஆதமங்கலம் |
| ஆபரண தாரி | நாகை | ஆபரண தாரிச் சதுர்வேதி மங்கலம் |
| ஆமூர் | நாகை | ஆமூர் |
| ஆரப்பல் - ஆரப்பர் | நன் | ஆரப்பல் |
| ஆலத்தூர் | பாப | ஆலத்தூர் |
| ஆலத்தூர் | நன் | ஆலத்தூர் |
| ஆலங்குடி | பாப | ஆலங்குடி. - சிம்ம விஷ்ணு சதுர்வேதி மங்கலம் - ஜனநாத சதுர்வேதி மங்கலம் |

| | | |
|---|---|---|
| ஆலிவலம் | மன் | ஆர்வலம் - |
| ஆவூர் | கும்ப | ஆவூர் |
| ஆற்காடு | தஞ் | ஆற்காடு |
| ஆனாங்கூர் | மயில் | ஆனாங்கூர் |
| ஆனைமங்கலம் | நாகை | ஆனைமங்கலம் |
| இசனூர் | நாகை | இசனூர் - பரமேஸ்வர சதுர்வேதி மங்கலம் |
| இடையாத்தங்குடி | நன் | இடையாற்றங்குடி — கலிக் கண்டச் சோழச் சதுர்வேதி மங்கலம் |
| இடையான நல்லூர் | திருவிடை | இடையார் நல்லூர் |
| இரும்புதலை | கும்ப | இரும்புதல் - மனுகுலச் சூளா மணிச் சதுர்வேதி மங்கலம் |
| இன்னம்பூர் | கும்ப | இன்னம்பூர் |
| ஊத்துக்காடு | பாப | ஊற்றுக்காடு - ராஜராஜ சதுர்வேதி மங்கலம் |
| எண்கண் | நன் | இங்கல் - இங்கண் |
| எண்ணைக்குடி | நன் | எண்ணுகுடி |
| எரவாடி | கும்ப | எருபாடி |
| எரவாஞ்சேரி | மயில் | இறையான்சேரி - இறைவான்சேரி |
| எளநகர் | மன் | இளநகர் |

| | | |
|---|---|---|
| எளவனூர் | மன் | இளவனூர் |
| எளையான்குடி | மயில் | இளையான்குடி |
| ஏரக்கிரஹாரம் | ஏர் | மும்முடிச் சோழமங்கலம் |
| ஒட்டக்குடி | நன் | ஓட்டைக்குடி - எதிரிலிச் சோழபுரம் - ராசேந்திர சோழபுரம் |
| ஓகையூர் | நன் | ஓகையூர் |
| கச்சினம் | திருத் | கச்சினம் - திருகச்சினம் |
| கஞ்சனூர் | திருவிடை | கஞ்சனூர் - சிம்ம விஷ்ணு சதுர்வேதி மங்கலம் |
| கஞ்சா நகரம் | மயில் | கஞ்சா நகர் |
| கஞ்சிவய | மயில் | கஞ்சிவயல் |
| கடகக்குடி | நன் | கடையக்குடி |
| கடம்பரவாழ்க்கை | நாகை | கடம்பவல வாட்கை |
| கடலங்குடி | மயில் | கடலங்குடி - விடேல் விடுகு சதுர்வேதி மங்கலம் |
| கண்டியூர் | தஞ் | திருக்கண்டியூர் |
| கரியாப்பட்டினம் | திருத் | கல்யாணபுரங்கொண்ட சோழப்பட்டினம் |
| கருப்பூர் | கும்ப | கருப்பூர் |
| கருப்பூர் | நன் | சருப்பூர் |

| | | |
|---|---|---|
| கருப்பூர் | மயில் | கருப்பூர் |
| கருப்பூர் | திருவிடை | கருப்பூர் |
| கருந்தட்டாங்குடி | தஞ் | கருததிட்டைக்குடி |
| களப்பாள் | திருத் | முடிவழங்கு சதுர்வேதி மங்கலம் - கோவில் களப்பாள் |
| கள்ளிக்குடி | நன் | கள்ளிக்குடி |
| கழனிவாசல் | மயில் | கழனிவயல் |
| காஞ்சி வய | மயில் | காஞ்சிவயல் |
| காவலூர் | தஞ் | காவனூர் |
| கிரிநல்லூர் | திருத் | கிரிநல்லூர் |
| கிளியூர் | நன் | கிளியூர் |
| கீரக்களூர் | திருத் | கீரைக்களூர் |
| கீரங்குடி | நாகை | கீரங்குடி |
| கீரந்தங்குடி | நன் | கீரன்தேவன்குடி |
| கீழ்ப்பாலையூர் | நன் | பாலையூர் |
| கீரமங்கலம் | பட்டு | கீரமங்கலம் - கிடாரங்கொண்ட சோழபுரம் |
| குடவாசல் | குட | சோழகுலவல்லிச் சதுர்வேதி மங்கலம் — குடவாயில் |
| குத்தாலம் | மயில் | குற்றலம் — குத்தாலம் — திருத்திருத்தி |

| | | |
|---|---|---|
| குத்தாலம் | நாகை | குத்தாலம் |
| கும்பகோணம் | கும்ப | திருக்குடமூக்கு |
| குருவாடி | பாப | குருபாடி |
| குருவாடி | தஞ் | குருவாடி |
| குலதீபமங்கலம் | திருத் | குலதீபமங்கலம் |
| குலமங்கலம் | தஞ் | கிள்ளிமங்கலம் |
| குழலூர் | திருத் | குழலூர் |
| குளப்பாட்டு | திருத் | குளப்பாட்டு |
| குன்னியூர் | மன் | குன்றியூர் |
| கூகூர் | கும்ப | குலோத்துங்கச் சோழநல்லூர் |
| கூத்தானூர் | கும்ப | கூத்தானூர் |
| கொட்டாரக்குடி | நாகை | கோட்டாரக் குடி |
| கொட்டையூர் | கும்ப | கருப்பூர் |
| கொடவாசல் | நன் | கொரவாசல் — கூரவாசல் |
| கொத்தங்குடி | கும்ப | கொற்றமங்கலம் |
| கொத்தமங்கலம் | மன் | தலைக் கூரங்குடி |
| கொத்தமங்கலம் | திருத் | வங் கொற்றங்குடி |

| | | |
|---|---|---|
| கொருக்கை | மயில் | குறுக்கை — விக்கிரம சோழ சதுர்வேதி மங்கலம் |
| கொல்லுமாங்குடி | நன் | கொல்லி மாங்குடி |
| கொற்றங்குடி | நன் | கொற்றங்குடி |
| கொற்றமங்கலம் | திருத் | சுத்தவல்லிச் சதுர்வேதிமங்கலம் — கொற்ற மங்கலம் |
| கொற்ற வாசல் | நன் | கொற்ற வாசல் |
| கோகூர் | நாகை | கோவூர் |
| கோட்டூர் | மன் | கோட்டூர் |
| கோட்டூர் | திருவிடை | மகேந்திரன் கோட்டூர் |
| கோட்ட மங்கலம் | மன் | கூற்ற மங்கலம் |
| கோடியக் காடு | வேதா | திருக்கோடி |
| கோவிலூர் | திருத் | கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலம் |
| சத்திய மங்கலம் | கும்ப | சக்திமங்கலம் |
| சன்னாபுரம் | மயில் | ஜனநாதபுரம் |
| சாத்தனூர் | மயில் | சாத்தனூர் |
| சாத்தமங்கலம் | தஞ் | சட்டமங்கலம் |

| | | |
|---|---|---|
| சாத்தமங்கலம் | நன் | சாத்த மங்கலம் |
| சாத்த மங்கை | நாகை | சாத்த மங்கலம் |
| சாயாவனம் | சீர் | திருச்சாய்க்காடு |
| சிக்கல் | நன் | தீன சிந்தாமணி சருப்பேதி மங்கலம் — சிக்கல் |
| சித்தம்பர் | மன் | சிறற்றம்பர் |
| சித்தமல்லி | மன் திருத் | சுத்தவல்லிச் சதுர்வேதி மங்கலம் |
| சித்தாமூர் | நாகை | சிற்றமூர் |
| சித்தாய்மூர் | திருத் | சிற்றமூர் |
| சித்தனாவலூர் | பாப | பரமேஸ்வர சதுர்வேதி மங்கலம் |
| சிவபுரம் | கும்ப | சிவபுரம் |
| சிறு மன்னூர் | நன் | சிறுமன்றூர் |
| சின்னமங்கலம் | நாகை | சன்ன மங்கலம் |
| சீர்காழி | சீர் | திருக்கழுமலம் |
| சீயாத்த மங்கை | நன் | சீர்யாத்த மங்கை |
| செந்தலை | தஞ் | சந்திரலேகைச் சதுர்வேதி மங்கலம் — உலக மாதேவீச் சதுர்வேதி மங்கலம் |

| | | |
|---|---|---|
| செம்பிய மகாதேவி | நாகை | செம்பியன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம் |
| செம்மங்குடி | கும்ப | செம்பங்குடி |
| செருகுடி | நன் | சிறுகுடி |
| செருவேளூர் | நன் | ஆற்றூர் சிறுவேளூர் |
| சேங்காலிபுரம் | குட | ஜெயசிம்ம குலகாலபுரம் |
| சேங்கமங்கலம் | பட்டு | சங்கமங்கலம் — கண்டியூர் சோழ சிகாமணிபுரம் |
| சுங்கந்தவிர்த்தான் | நன் | சுங்கந்தவிர்த்தச் சோழநல்லூர் |
| சூலமங்கலம் | தஞ் | சூலமங்கலம் |
| சோழநாதமங்கலம் | நன் | சோழநாத தேவமங்கலம் |
| சோழன் மாருதி நல்லூர் | திருத் | சுத்தவல்லிச் சதுர்வேதிமங்கலம் சோழன் மாருதிநல்லூர் |
| தகட்டூர் | திருத் | தகட்டூர் — கேரளாந்தகபுரம் |
| தஞ்சாவூர் | தஞ் | தஞ்சாவூர் |
| தலைச்சங்காடு | மயில் | தலைசெங்காடு |
| தலைஞாயிறு | திருத் | தலைஞாயிறு — மதுராந்தகச் சதுர்வேதி மங்கலம் |
| தண்ணீர்க்குன்னம் | நன் | ராஜராஜநல்லூர் — தண்ணீர்க்குன்னம் |
| தண்டந்தோட்டம் | கும்ப | சதுர் மும்முடிச்சோழச் வேதி மங்கலம் — தண்டந் தோட்டம் |

| | | |
|---|---|---|
| தலைக் தெருவு | மயில் | தலைச்சேரி — பராக்கிரமச் சோழ சதுர்வேதி மங்கலம் |
| தப்பலாம் புலியூர் | நாகை | புலியூர் |
| தர்மபுரம் | மயில் | தருமபுரம் — தர்மபுரம் |
| தனியூர் | திருத் | தனியூர் — வீர நாராயணச் சதுர்வேதி மங்கலம் |
| தாராசுரம் | கும்ப | ராஜராஜபுரம் |
| திருக்கடைலூர் | மயில் | திருக்கடவூர் |
| திருக்கருகாவூர் | கும்ப | கருகாவூர் — ராஜநாராயணச் சதுர்வேதி மங்கலம் |
| திருக்கண்ணங்குடி | நாகை | திருக்கண்ணங்குடி |
| திருக்கண்ணபுரம் | நன் | திருக்கண்ணபுரம் |
| திருக்களர் | திருத் | திருக்களர் |
| திருக்காரவாசல் | மன் | திருக்காரயில் |
| திருக்குவளை | நாகை | திருக்கோளிலி |
| திருக்கொள்ளிக் காடு | திருத் | திருக் கொள்ளிக்காடு |
| திருக் கொலம்பியூர் | மயில் | திருக் கோலம்பம் |
| திருக்கோத்திட்டை | நன் | திருக்கோத்திட்டை |
| திருக்கோடிக் காவல் | திருவிடை | திருக் கோடியக்கா |

| | | |
|---|---|---|
| திருக்கோலக் காடு | மன் திருத் | கோலக்காடு |
| திருச்சின்னம் பூண்டி | தஞ் | திருக்கடைமுடி |
| திருச் செங்காட்டங்குடி | நன் | திருச் செங்காட்டங்குடி |
| 162 திருச் சோற்றுத் துறை | தஞ் | திருத் சோற்றுத் துறை |
| திருத்துறைப் பூண்டி | திருத் | திருத்தருப்பூண்டி |
| திருத் தொங்கூர் | திருத் | திருத்தெங்கூர் |
| திரு நல்லம் | கும்ப | கோனோரிராசபுரம் — திருநல்லம் |
| திருநள்ளாறு | நன் | திருநள்ளாறு |
| திருநாகேஸ்வரம் | கும்ப | திருநாகேஸ்வரம் |
| திருநாரையூர் | கும்ப | பஞ்சவன் மாதேவிச் சதுர்வேதிமங்கலம்—திருநாரையூர் |
| திருநெல்லிக் காவல் | திருத் | திருநெல்லிக்கா |
| திருப்பயத்தங்குடி | நன் | திருப்பயற்றூர் |
| திருப்பனந்தாள் | திருவிடை | திருப்பனந்தாள் |
| திருப்பனைலூர் | நன் | பனையூர் — திருப்பனையூர் |
| திருப்பாம்புரம் | நன் | திருப்பாம்புரம் — குலோத்துங்க சோழசருப்பேதி மங்கலம் |
| திருப்பாலைத் துறை | பாப | திருத்பாலைத் துறை |
| திருப்புகலூர் | நன் | முடிகொண்ட சோழ சதுர்வேதி மங்கலம்—திருப்புகலூர் |

| | | |
|---|---|---|
| திருப்புங்கனூர் | மயில் | திருப்புங்கனூர் |
| திருப்புறம்பியம் | கும்ப | திருப்பிறம்பியம் |
| திருப்பூண் துருத்தி | தஞ் | திருந்துருத்தி |
| திருப்பையூர் | தஞ் | திருப்பேரூர் |
| திருமங்கலக்குடி | திருவிடை | திருமங்கலக்குடி |
| திருமங்கலம் | மயில் | ராஜராஜன் திருமங்கலம் |
| திருமணஞ்சேரி | மயில் | திருமணஞ்சேரி — கடலங்குடி — கங்கை கொண்ட சோழ சதுர்வேதி மங்கலம் |
| திருமணமேடு | தஞ் | திருமணமேடு |
| திருமருகல் | நன் | மருகல் |
| திருமெய்ஞ்ஞானம் | நன் | நாலூர் — திருமயானம் |
| திருமாளம் | நன் | அம்பர் — கோயில் திருமகாளம் |
| திருமீயெச்சூர் | நன் | திருமீயெச்சூர் |
| திருலோக்கி | திருவிடை | எமநல்லூர் — திரைலோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலம் |
| திருவலஞ்சுழி | கும்ப | திருவலஞ்சுழி |
| திருவலம்பூர் | மயில் | திருவலம்புரம் |

| | | |
|---|---|---|
| திருவழுத்தூர் | மயில் | திருவிந்தளூர் |
| திருவாஞ்சியம் | நன் | திருவாஞ்சியம் - ராஜகம்பீர சதுர்வேதி மங்மலம் |
| திருவாரூர் | நிரு | திருவாரூர் |
| திருவாய்ப்பாடி | திருவிடை | சேங்களூர் - திருவாய்ப்பாடி |
| திருவாலங்காடு | மயில் | விக்கிரம சோழநல்லூர் - திருவாலங்காடு |
| திருவாலி | திருவாலி | திருவாலி |
| திருவாடுதுறை | மயில் | சாத்தனூர் - திருவாவடுதுறை |
| திருவிசலூர் | திருவிடை | அவனி நாராயணச் சதுர்வேதி மங்கலம் – திருவிசலூர் |
| திருவிடைக்காளி | மயில் | திருவிடைக்காளி |
| திருவிடைவாசல் | நன் | திருவிடைவாயில் |
| திருவிடைமருதூர் | திருவிடை | திருவிடைமருதூர் |
| திருவேடுகுடி | தஞ் | கீழ்ப்பரம்பில் – திருவேதிமகுடி - பரகேசரிபுரம் |
| திருவேள்விக்குடி | மயில் | முருகவேள் மங்கலம் - கங்கை கொண்ட சோழ சதுர்வேதி மங்கலம் - திருவேள்விக்குடி |
| திருவைகாவூர் | கும்ப | திருவைகா |
| தீபங்குடி | நன் | தீபங்குடி |
| துக்காட்சி | கும்ப | விக்கிரம சோழநல்லூர் |

| | | |
|---|---|---|
| துறையூர் | நாகை | துறையூர் |
| தேமங்கலம் | நாகை | சேந்தமங்கலம் |
| தேவங்குடி | மன் | தேவன்குடி |
| தோப்புத்துறை | வேதா | தோப்புத்துறை |
| நடுக்காவேரி | தஞ் | நடுவேலிக்காவேரி |
| நரிமணம் | நன் | நரிமன்றம் |
| நல்லூர் | பாப | பஞ்சவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம்-திருநல்லூர் |
| நன்னிமங்கலம் | தஞ் | நல்லிமங்கலம் |
| நன்னிலம் | நன் | நன்னிலம் |
| நாகப்பட்டினம் | நாகை | சோழகுல வல்லிப்பட்டினம் - நாகப்பட்டினம் |
| நாகூர் | நாகை | திருநாஹூர் |
| நாங்கூர் | சீர் | நாங்கூர் |
| நாலூர் | நன் | வானவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம் நாலூர் |
| நீடாமங்கலம் | மண் | நீடூர் |
| நீடூர் | மயில் | நீடூர் - ராஜசிம்ம சதுர்வேதி மங்கலம் |
| நீலப்பாடி | நாகை | மேல் நீலப்பாடி வீரராசேந்திரபுரம் |
| நெடுங்காடு | மயில் | நெடுங்காடு |
| நெடும்பலம் | திருத் | நெடும்புலம் |

| | | |
|---|---|---|
| நெடுமணல் | நன் | மதனமஞ்சரி சதுர்வேதி மங்கலம் - நெடுமணல் |
| நெம்மேலி | மண் | நன்மலை |
| நெற்குப்பை | நன் | நெற்குப்பை |
| நேமம் | தஞ் | அட்டப்பள்ளி நியமம் |
| நேமம் | தஞ் | ஆயிரத்தளி அட்டப்பள்ளி நேமம் |
| பசுபதி கோவில் | தஞ் | புள்ள மங்கலம் - புள்ள மங்கை |
| பட்டம் | திருவிடை | பட்டம் |
| பண்டாரவாடை | மயில் | ராசேந்திர சிம்ம சதுர்வேதி மங்கலம் ஆக்கூர் |
| பத்தூர் | நன் | நல்ல பெருமாள் சதுர்வேதி மங்கலம் – பத்தூர் |
| பருத்தியூர் | நன் | அநபாயபுரம் - பருத்தியூர் |
| பல்லவராயன்பேட்டை | மயில் | குளத்தூர் |
| பழமாரனேரி | தஞ் | மாறனேரி - ஜினசிந்தாமணி சதுர்வேதி மங்கலம் |
| பழையாறை | கும்ப | பழையாறை - முடி கொண்ட சோழபுரம் |
| பழையானூர் | திருத் | பழையனூர் ராஜராஜன் பழையானூர் |
| பழையவலம் | நாகை | பழைய வல்லம் |
| பள்ளியாற்றி | மன் | பள்ளியாற்றி |
| பள்ளிவரமங்கலம் | நாகை | பள்ளி |
| பள்ளூர் | நன் | பள்ளூர் |

| | | |
|---|---|---|
| பன்னத் தெரு | திருத் | பன்னகாபரணம் — பன்னத் தெரு |
| பனையூர் | நன் | திருப்பனையூர் |
| பாண்டூர் | மயில் | பாண்டூர் |
| பாப்பார் கோவில் | நாகை | பாப்பார்குடி |
| பாம்புரம் | நன் | பாம்புரம் — குலோத்துங்கச் சோழ சருப்பேதி மங்கலம் |
| பாமணி | மன் | பாம்புணி தியாகபுரம் |
| பாலையூர் | நாகை | பாலையூர் |
| பாவட்டக் குடி | நன் | பாவடைகுடி — தியாக வினோத நல்லூர் |
| புத்தகளூர் | நன் | புத்தகை |
| புஞ்சை | மயில் | திரு நனிப்பள்ளி — கிடாரங் கொண்டான் |
| புதர்குடி | நன் | புதர்குடி |
| புதுக்குடி | நன் | புதுக்குடி |
| புதுத்துறை | சீர் | விக்கிரமச் சோழநல்லூர் — எதிரிலிச் சோழ சதுர்வேதி மங்கலம் — புதுத்துறை |
| புலிவலம் | நாகை | புலிவலம் |
| பூசலங்குடி | மன் திருத் | பூசலாங்குடி |
| பூதக்குடி | நன் | பூதக்குடி |
| பூதமங்கலம் | பாப | பூதமங்கலம் |
| பெருக வாழ்ந்தான் | மன் | பெருக வாழ்ந்தான் சதுர்வேதி மங்கலம் |

| | | |
|---|---|---|
| பெருங் கடம்பனூர் | நாகை | பெருங்கடம்பூர் |
| பெருஞ்சேரி | மயில் | மேலஞவகை |
| பெருநல்லூர் | நன் | பெருநல்லூர் |
| பெரும் பன்னியூர் | நன் | பன்னூர் |
| பெருமக்கா நல்லூர் | தஞ் | பெருமக்களூர் |
| பெருமங்கலம் | நன் | மங்கலம் |
| பெருமண்குடி | பாப | மண்குடி |
| பெருமூர் | நன் | பெருமூர் |
| பெருவிடமருதூர் | மன் | பெரும்பாலமருதூர் |
| பெருனங்காரை | பாப | பெருனங்காரை |
| பேராவூர் | மயில் | பேராவூர் |
| பொற்கரைக்குடி | நன் | பொற்காலக்குடி |
| மணக்குடி | திருத் | மணக்குடி |
| மணக்குடி | மயில் | மன்னூர்குடி—உத்தமச்சோழச்சலூர் வேதிமங்கலம் |
| மணக்குடி | நாகை | மன்னார்குடி |
| மருத்துவக்குடி | திருவிடை | மருத்துவக்குடி |
| மயிலாங்குடி | நாகை | மயிலையான்குடி |
| மாணுங்கோஃஷர | கும்ப | வாணூர்கூரை |

| | | |
|---|---|---|
| மாத்தூர் | தஞ் | மாத்தூர் |
| மாதிரிமங்கலம் | மயில் | மதுரைகொண்டசதுர்வேதிமங்கலம் |
| மாவூர் | நாகை | மாவூர் |
| மானம்பாடி | கும்ப | இலட்சியக்குடி—வீர நாராயணபுரம் |
| மிலட்டூர் | பாப | பெருமெலட்டூர் |
| மின்னாமநல்லூர் | மன் | மின்னுவநல்லூர் |
| மீகளத்தூர் | தஞ் | களத்தூர்—மேல்களத்தூர் |
| முத்தியூர் | தஞ் | முத்தையிலி |
| முல்லாலைநத்தம் | கும்ப | மிழலை |
| முள்ளங்குடி | கும்ப | முள்ளங்குடி |
| முனியூர் | கும்ப | முன்னியூர் |
| மேக்கிரிமங்கலம் | மயில் | மேற்கிள்ளிமங்கலம் |
| மேல்காசாக்குடி | மயில் | காயாக்குடி |
| மேல்பூதனூர் | நன் | பூதனூர் |
| மேல்மருதாந்நல்லூர் | மயில் | மதுராந்தகநல்லூர் |
| மேலக்காவேரி | கும்ப | மேல்காவேரி—பழங்காவேரி |
| ராசேந்திரசோழநல்லூர் | நன் | தோட்டக்குடி—ராசேந்திரசோழநல்லூர் |
| ராஜகிரி | பாப | ராஜகேசரிபுரம்—ராஜகேசரி சதுர்வேதிமங்கலம் |
| லட்சிக்குடி | கும்ப | விக்கிரமசிங்கசதுர்வேதிமங்கலம்—இலட்சியக்குடி |
| வங்கநகர் | மன் | வங்கநகர் |

| | | |
|---|---|---|
| வஞ்சியூர் | நாகை | வாஞ்சியூர் |
| வடக்குடி | நாகை | வடகுடி — நல்லூர் |
| வடமட்டம் | நன் | வடமுட்டங்குடி—வடமுட்டம் |
| வடுவக்கொத்தமங்கலம் | திருத் | கொற்றமங்கலம் |
| வண்டுவாஞ்சேரி | கும்ப | வண்டாழஞ்சேரி |
| வல்லம் | தஞ் | கருவாக்காலவல்லம் |
| வலத்தூர் | கும்ப | வல்லத்தூர் |
| வலவநல்லூர் | மன் | வலவநல்லூர் |
| வலிவலம் | நாகை | உபயசுத்தசதுர்வேதிமங்கலம்—வலிவலம் |
| வன்னிக்குடி | கும்ப | தியாகசமுத்திரசதுர் வேதிமங்கலம் — வன்னிகுடி |
| விச்சியூர் | கும்ப | வெட்சியூர் |
| விசலூர் | கும்ப | விசலூர் |
| விடங்கநல்லூர் | நாகை | தென்விடங்கநல்லூர் |
| விடையாத்திமங்கலம் | தஞ் | இடையாற்றுமங்கலம் |
| விரையூர் | நன் | விரையூர் |
| வில்லியநல்லூர் | நன் | வில்லியநல்லூர் |
| வைப்லூர் | நன் | வைப்பூர் |
| வையச்சேரி | தஞ் | வைகுருச்சேரி |
| வேதாரண்யம் | வேதா | திருமறைக்காடு |
| வேப்பத்தூர் | திருவிடை | வெம்பற்றூர் — சோழமார்த்தாண்டசதுர்வேதிமங்கலம் |
| வேலங்குடி | நாகை | வேலங்குடி |

# சிறப்புக் கூறுகள்

## பிற்சேர்க்கை—3

### 1. விலங்குகள் பெயர்கள்

அத்திப்புலியூர்—அத்தி,புலி—திரு—44
அரவூர்—அரவு—(பாம்பு)வலங்—68
ஆட்டுக்கால்மடப்புரம்—ஆடு—மயில்—69/1
ஆடிப்புலியூர்—புலி—குட—98
ஆந்தக்குடி—ஆந்தை—திரு—63
ஆவூர்—ஆ(பசு)—வலங்—30
ஆனைமங்கலம்—ஆனை—திரு—20
ஆனைமாகாணம்—ஆனை—திரு—20/1
ஆனைமேலகரம்—ஆனை—மயில்—58
ஆனைவடபாதி—ஆனை—குட—227
எருமைப்படுகை—எருமை—வலங்—79/1

ஏனங்குடி—ஏனம்(பன்றி)—நன்—131
ஏனநல்லூர்—ஏனம்(பன்றி)—கும்ப—131
கபிஸ்தலம்—கபி(குரங்கு)—பாப—21
கருமயில்நாதன்பேட்டை—கருமயில்—மயில்—73/2
காக்கையாடி—காக்கை—நீடர்—54
கிடாத்தலைமேடு—கிடா(எருமை—மகிஷாசுரன்)—மயில்—33/2
கிளிமூலை—கிளி—மயில்—141/2
கிளியனூர்—கிளி—பொ—121
கிளியூர்—கிளி—வலங்—29/1
குருவிக்கரம்பை—குருவி—பேரா—112
கொக்கூர்—கொக்கு—மயில்—132

கோமல்—கோ—(பசு)—திரு—13

கோமல்—கோ—(பசு)—மயில்—134/A

கோழிக்குத்தி—கோழி—திருவிடை—34/4

சிறுபுலியூர்—புலி—நன்—23

தப்பாலம்புலியூர்—புலி—திரு—59

திருநாரையூர்—நாரை—கும்ப—130

திருவாவடுதுறை—ஆ(பசு)மயில்—41

நர்க்குடி—நரி—திருவிடை—54

நரிமணம்—நரி—நன்—152

நல்லாவூர்—ஆ(பசு)மயில்—138

நாகக்குடி—நாகம்—நன்—110/1

நாகக்குடையான்—நாகம்,—வேதா—60

நாகமங்கலம்—நாகம்—மயில்—36/1

பன்னித்தலைமேடு—பன்னி(பன்றி)—மயில்23/2

புள்ளமங்கலம்—புள்(பறவை)—நீடா—68

புள்ளமான்குடி—மான்—திருவிடை—3/1

புலிமங்கலம்—புலி—பாப—102/2

புலிவலம்—புலி—திரு—48/1

பூனைக்குத்திக்காடு—பூனை—பேரா—110

பேராவூர்—ஆ(பசு)—மயில்—135

பெரியநரியங்குடி—நரி—நாகை—85/1

பொன்மான்மேய்ந்தநல்லூர்—பொன்மான்—பாப—97

மணப்பறவை—பறவை—குட—191

மயிலாடுதுறை—மயில்—மயில—62

மீனநல்லூர்—மீன்—நாகை—132

முதலைமேடு—முதலை—சீர்—29

வண்டுவாஞ்சேரி—வண்டு—கும்ப—144

வண்டுவாஞ்சேரி—வண்டு—வேதா—113

வலங்கைமான்—மான்—வலங்—46

வலிவலம்—வலியான் (கரிக்குருவி)—திரு—117

## 2. தாவரப் பெயர்கள்

அகரமாங்குடி—மா—பாப—96
அத்திக்கோட்டை—அத்தி—மன்—7/1
அத்திச்சோழமங்கலம்—அத்தி—குட—24
அத்திப்பாக்கம்—அத்தி—திருவிடை—20
அத்தியூர்—அத்தி—சீர்—5
அத்தியூர்—அத்தி—கும்ப—60
அத்திவெட்டி—அத்தி—பட்டு—160
அரசவனங்காடு—அரசு—குட—180
அரசலங்கரம்பை—அரசு—பேரா—35
அரசூர்—அரசு—சீர்—12
ஆலக்குடி—ஆல்—தஞ்—61
ஆலங்காடு—ஆல்—சீர்—23
ஆலங்காடு—ஆல்—திருத்—01
ஆலங்குடி—ஆல்—வலங்—73
ஆலங்குடி—ஆல்—நாகை—81
ஆலங்குடி—ஆல்—பாப—121
ஆலங்குடி—ஆல்—நன்—3
ஆலங்குடி—ஆல்—நாகை—126/1
ஆலங்குடி—ஆல்—மயில்—31
ஆலடிக்காடு—ஆல்—பட்டு—247
ஆலடிக்குமுளை—ஆல்—பட்டு—177
ஆலத்தம்பாடி—ஆல்—திருத்—21
ஆலத்தூர்—ஆல்—நன்—16
ஆலத்தூர்—ஆல்—நன்—51
ஆலத்தூர்—ஆல்—பட்டு—33
ஆலம்பள்ளம்—ஆல்—பட்டு—130
ஆலம்பல்லம்படுகை—ஆல்—நீடா—17/1
ஆலவெளி—ஆல்—திருவிடை—29/3
ஆலவெலி—ஆல்—பொ—69
இஞ்சிக்கொல்லை—இஞ்சி—கும்ப—152
இலந்தவனஞ்சேரி—இலந்தை—குட—105
இலுப்பக்கோரை—இலுப்பை—பாப—2

இலுப்பட்டு — இலுப்பை — மயில் — 4/9
இலுப்பூர் — இலுப்பை — திரு — 70
இலுப்பூர் — இலுப்பை — பொ — 171
இலுப்பைவிடுதி — இலுப்பை — ஒரத் — 108
ஈச்சங்குடி — ஈச்சை பொ — 116
ஈச்சங்குடி — ஈச்சை — மயில் — 141/6
ஈச்சங்குடி — ஈச்சை — பாப — 141
ஊமத்தநாடு — ஊமத்தம் — பேரா — 96
எட்டிவயல் — எட்டி — பட்டு — 2 6
எட்டிவாழ்க்கை — எட்டி — நன் — 150/2
எட்டுக்குடி — எட்டிக்குடி — எட்டி — நாகை 125/1
எடக்கோரை — கோரை — திருவை — 67/1
எடுமாங்குடி — மா — திருவிடை — 68/3
எருக்கூர் — எருக்கு — சீர் — 11
எலந்தங்குடி — இலந்தை — மயில் — 124/1
எலும்மிச்சம்பாத்தி எலும்மிச்சம் — மயில் — 76/1
ஓலைப்பாடி — ஓலை — பாப — 13
ஓலையக்குன்னம் — ஓலை — பட்டு — 20
ஓலையாம்புத்தூர் — ஓலை — சீர் — 6
கடுவங்குடி — கடு — திரு — 56
கடுவேலி — கடு — திருவை — 155
கத்தரிநத்தம — கத்திரி — பாப — 122/1
கத்தரிபுலம் — கத்திரி — வேதா — 61
கமுகக்குடி — கமுகு — குட — 199
கரும்பையூர்தோட்டம் — கரும்பு — திருத் — 22/1
கருவக்காடு — கருவேலம் — மயில் — 34/B/2
கருவேலங்கடை — கருவேலம் — நாகை — 87
கள்ளிக்காடு — கள்ளி — மயில் — 156/1
கள்ளிக்குடி — கள்ளி — மயில் — 21/3
கள்ளிக்குடி — கள்ளி — குட — 183/1
கள்ளிக்குடி — கள்ளி — திருத் — 85
கள்ளிக்குடி — கள்ளி — திரு — 11
கள்ளிமேடு — கள்ளி — வேதா — 53
கள்ளிவயல் — கள்ளி — பட்டு — 258
காயாலூர் — காயா — பட்டு — 269

கீரக்களூர்—கீரைக்கள்ளூர்—கீரை—திருத்—7
கீரைக்கொல்லை—கீரை—தஞ்—97
கீரையூர்—கீரை—மயில்—128
கீழப்பருத்திக்குடி—பருத்தி—மயில்—144
கீழமருதாந்தநல்லூர்—மருது—மயில்—23
கீழவன்னிப்பட்டு—வன்னி—ஒரத்—78
குத்தாலம்—ஆலம்—நன்—154
குத்தாலம்—ஆல்—மயில்—158
கொட்டையூர்—கொட்டை—ஆமணக்கு—வலங்—69
கொடிக்காலூர்—கொடி (வெற்றிலைக்கொடி)—தஞ்—101/1
கொடியாலத்தூர்—கொடி, ஆல்—திரு—119
கொடியாலம்—கொடி, ஆலம்—திருவிடை—27/7
கொடியாலம்—கொடி, ஆல்—ஒரத்—136
கொடிவயல்—கொடி—பேரா—102
சின்ன அரசலங்கரம்பை—அரசு—பேரா—18
சுரக்காயூர்—சுரைக்காய், பாப—95
சுரைக்காயூர்—சுரைக்காய், நன்—15
செண்பகச்சேரி—செண்பகம்—மயில்—32/4

சோளம்பேட்டை சோளம்—மயில்—51
சோலைக்காடு—சோலை—பேரா—187
தண்டாங்கோரை—கோரை—தஞ்—82
தண்டாமரைக்காடு—தண்டாமரை—பட்டு—263
தாமரைப்புலம்—தாமரை—வேதா—53/1
தாழஞ்சேரி—தாழம்—மயில்—21
திருப்பனந்தாள்—பனை—திருவிடை—34
திருமருகல்—மருகல் (கல்வாழை) நன்—144
திருவாலங்காடு—ஆல்—மயில்—40
திருவாலம்பொழில்—ஆல், பொழில்—திருவை—70/1
திருவேம்பநல்லூர்—வேம்பு—திருவிடை—12/3
தெற்குப்பனையூர்—பனை—திரு—120
தென்னங்குடி—தென்னை—சீர்—53/1
தென்னங்குடி—தென்னை—பேரா—50
தென்னஞ்சேரி—தென்னை—திருவை—76/2
தோட்டக்காடு—தோட்டம்—தஞ்—84
தொந்துபுளிக்காடு—புளி—பேரா—37
நந்தவனப்பட்டி—நந்தவனம்—தஞ்—33

நல்லமாங்குடி—மா—நன்—76
நார்த்தங்குடி—நார்த்தை—வலங்—70
நெல்லூடாச்சேரி—நெல்—திரு—74/1
நெல்லித்தோப்பு—நெல்லி—பாப—119
நெல்லியடிக்காடு—நெல்லி—பேரா—88
நொச்சியூர்—நொச்சி—மன்—123
பருத்திக்குடி—பருத்தி—திருவை—74/2
பருத்திக்குடி—பருத்தி—திருவிடை—64
பருத்திக்குடி—பருத்தி—மயில்—12/1
பருத்திக்கோட்டை—பருத்தி—ஒரத்—27
பருத்திக்கோட்டை—பருத்தி—மன்—145
பருத்திச்சேரி—பருத்தி—கும்ப—148
பருத்தியப்பர்கோயில்—பருத்தி—ஒரத்—27/1
பருத்தியூர்—பருத்தி—குட—96
பருத்தியூர்—பருத்தி—குட—221
பருத்தியூர்—பருத்தி நன்—116
பயத்தஞ்சேரி—பயறு—வலங்—68/1
பனங்காட்டான்குடி—பனங்காடு—நன்—33

பனங்காட்டான்குடி—பனை—திருவிடை—69/3
பனங்குடி—பனை—திருத்—31
பனங்குடி—பனை—நன்—150
பனங்குடி—பனை—நன்—129
பனங்குளம்—பனை—பேரா—122
பனஞ்சேரி—பனை—பேரா 84
பனவேலிதோட்டம்—பனை—தஞ்—102/10
பனையங்குடி—பனை—மயில்—9/2
பனையூர்—பனை—திருத்—1
பனையூர்—பனை—மயில்—30/1
பனையூர் பனை—மன்—105
பனையேரி—பனை—மயில்—125/1
பாலையப்பட்டி—பாலை—தஞ்—138
பாலையூர்—பாலை—மன்—127
பாலையூர்—பாலை—நாகை—32
பாலையூர்—பாலை—மயில்—146
பின்னத்தூர்—பின்னை—திருத்—98
பின்னவாசல்—பின்னை—திரு- 114

பின்னவாசல்—பின்னை—பேரா—52
பின்னைநல்லூர்—பின்னை—தஞ்—111
பின்னையூர் – பின்னை—ஒரத்...93
புங்கனூர்...புன்கு...தஞ்33/1
புளியங்குடி...புளி...மயில்...138/1
புளிச்சங்காடுபுளி...பேரா...16/1
புளியங்குடி...புளி...வலங்...87
புளியங்குடி...புளி...வலங்...52
புளியங்குடி புளி...பட்டு..145
புளியந்துறை...புளி...சீர்...34
புளியந்தோப்பு...புளி...தஞ்...99
புளியஞ்சேரி...புளி...குட 95
புளியாடி...புளி... திருவிடை...69/2
புளியூர்...புளி...குட...228/1
புஷ்பவனம்...புஷ்பவனம்(பூ)வேதா...50
பூங்குடி...பூ...நன் 1/2
பூங்குளம்...பூ—நன்—114
பூசலாங்குடி—பூ—மயில்—13/1
பூந்தோட்டம்—பூ—திருவிடை—55/4
பூந்தோட்டம்—பூ—வலங்—78
பூவத்தூர்—பூ—ஒரத் 12
பூவனூர்...பூ...நீடா 13
பூவாணம்...பூ...பட்டு 217
பூவானூர்...பூ...பட்டு...195
பூவாலை...பூ...மயில்...125/2
பைங்காட்டுவயல்...பைங்கா...பட்டு...203
பைங்காட்டூர்...பைங்காடு (பசுமையானகாடு) ...மன் 103
பைங்காநாடு...பசுமையான சோலை . மன்...103
மகிழங்கோட்டை...மகிழம்...நன்...126
மஞ்சக்குடி...மஞ்சள்—குட...188
மஞ்சமல்லி...மஞ்சள்...திருவிடை—66
மருதக்குடி...மருது...தஞ்...29
மருதங்காவயல்...மருது பட்டு...252
மருதங்குடி...மருது...சீர் 58
மருதடி...மருது—கும்ப—82/2

மருதநல்லூர்—மருது—கும்ப—132
மருதம்பள்ளம்—மருது—பொ—104
மருதவளம்—மருது—திருத்—80
மருதுவாஞ்சேரி—மருது—நன்—72
மல்லியக்கொல்லை—மல்லி—மயில்×22/1
மாங்குடி—மா—திருத்—82
மாங்குடி—மா—குட—104
மாங்குடி—மா—திரு—53
மாங்குடி—மா—கும்ப—119
மாங்குடி—மா—மயில்—33/2

மாவடுக்குறிச்சி—மாவடு—பேரா—88
மானாங்கோரை—கோரை—தஞ்—88
முக்கரும்பூர்—கரும்பு—பொ×94
முடப்புளிக்காடு—புளி—பேரா—51/1
மூங்கில்குடி—மூங்கில்—நன்—171
மேல்பருத்திக்குடி—பருத்தி—மயில்—148
வடக்குப்பனையூர்—பனை—திரு—102

வடக்குமாங்குடி—மா—பாப—103
வழுதலைவட்டம்—வழுதல்—பட்டு—194
வன்னிக்குடி—வன்னி—திருவிடை—6
விளக்குடி—விளம்—திருத்—8
விளங்குளம்—விளம்—பேரா—61
விளாங்காடு—விளம்—திருத்—107 1/1
விளாங்குடி—விளம்—கும்ப×75
விளத்தூர்—விளம்—திருத்—17
விளத்தொட்டி—விளம்—திருவிடை 2/2
விழுந்தமாவடி=விழுந்துஎழுந்தமாவடு—32மா=
நாகை—137

வில்வங்குளம்—வில்வம்—திரு—5/6
வெண்டையம்பட்டி—வெந்தயம்—தஞ்—144
வேப்பங்காடு—வேம்பு—பட்டு—117
வேப்பங்குளம்—வேம்பு—பட்டு—25
வேப்பஞ்சேரி—வேம்பு—நாகை×9)
வேப்பத்தாங்குடி—வேம்பு
வேம்பு—வேம்புகுடி—பாப—111

# பிற்சேர்க்கை—4

## ஊர்ப்பெயர்கள் பற்றிய குறிப்புகள்

அகத்தியான்பள்ளி

அகத்தியர் தங்கி தவம் செய்தமையால் பெற்ற பெயர் என்ப. கல்வெட்டு "திருவகத்தியான் பள்ளி" என்று குறிப்பிடு கிறது.

அதிராம்பட்டிணம்

அதிவீரராமபாண்டியனுடைய பெயரினை உடையது என்ப. அதிரை என்று சுருக்கமாக வழங்கப்படும்.

அம்பர்மாகாளம்

அம்பன் அம்பாசூரன் என்ற இரு அரக்கர்களைக் கொன்ற பாவம் போக காளிபூசித்ததால் பெற்ற பெயர் என்ப. கோயில் மாகாளம் என்பது வேறு பெயர். மாகாளன் என்ற முனிவர் வழிபட்டதால் பெற்ற பெயர் எனவும் உரைப்ப. கல்வெட்டு "உய்யக்கொண்ட வளநாட்டு அம்பர் நாட்டு அம்பர் திருமாகாளம்" எனவும் "பூபாலகுலவல்லி வளநாட்டு அம்பர் நாட்டு அம்பர் திருமாகாளம்" எனவும் குறிப்பிடுகிறது.

அரிசிற்கரைப்புத்தூர்

அரிசிலாற்றின் கரையில் அமைந்தமையால் பெற்ற பெயர் என்ப. இன்றை பெயர் அழகாபுத்தூர் அரிசொல் — அரிசில் என்றாயிற்று என்றும், விஷ்ணுவின் சொற்படியே இவ்வாறு வோடியது என்றும் அதனால் பெற்ற பெயர் என்றும் கூறப்படும். செருவிலிபுத்தூர் எனவும் கூறப்படும்.

அரித்துவாரமங்கலம்

சிவனின் அடி முடி தேடிய புராண வரலாற்றின்போது அரி வாரக உருவம் எடுத்துச்சென்ற இடமே அரித்துவார மங்கலம் ஆயிற்று என்பர்.

### அவளிவநல்லூர்

இவ்வூர் கும்பகோணம் வட்டத்தில் உள்ளது. இவ்வூர்க் கோயில் குருக்கள் மகளை மணந்திருந்த அந்தண இளைஞர் ஒருவர், தீர்த்த யாத்திரை சென்று திரும்பி வந்தவர் தன் மனைவியின் தம்கையை தன் மனைவி என்று மயக்கமாக எண்ணிவிட, கோயில் இறைவன் உன்னுடைய மனைவி இவள் என்று மூத்தவளை அவள் இவள் என சுட்டிக்காட்டிய தால் இவ்வூருக்கு அவளிவணல்லூர் என்ற பெயர் ஏற்பட்டது என்ப. இவ்வூர்ப் பெயர் கல்வெட்டில் "அவளிவள நல்லூர்" என்றே காணப்படுகிறது. இப்பெயரே பேச்சுவழக்கில் இவ்வாறு திரிந்துள்ளது.

### அழுந்தூர்

அகத்திய முனிவர் கீழே இறைவனை வழிபட்டு இருந்ததை உணராது ஊர்த்துவரதன் என்னும் அரசன் ஆகாயத்தில் செலுத்திய தேர் செல்லாது அழுந்தியதால் பெற்ற பெயர் என்ப. இன்றைய பெயர் தேரழுந்தூர். கல்வெட்டு இவ்வூரை "செயங்கொண்ட சோழநாட்டுத் திரைமூர் நாட்டு திரு வழுந்தூர் நாட்டுத் திருவழுந்தூர் என்று குறிப்பிடும்.

### அன்னிகுடி

பாபநாசத்திற்கு அருகில் உள்ள ஊர். அன்னி என்னும் குரு நிலத் தலைவன் ஊராக இருக்கலாம் எனத் தோன்றுகிறது. அவன் பெயராலேயே இப் பெயர் தோன்றி இருக்க வேண்டும். இவனைப் பற்றி சங்க இலக்கியங்களில் (அகம்-196, 262, 45 145, நற்றிணை 180) குறிப்பிடப் படுகிறது.இவன் பொருட்டு கோசர்களுடன் திதியன் மாயவரத்திற்கு அருகில் அழுந்தூரிலும், (தேரழுந்தூர்) திதியனுக்கும் அன்னிக்கும் குடந்தைக்கு அருகில் உள்ள குருக்கையிலும் போர் நிகழ்ந்ததாகவும் கூறுப.

### ஆச்சாள்புரம்

சிவலோகபுரம், நல்லூர், திருமணவை, முத்திபுரம், நல்லூர்பெருமணம் என்பன வேறு பெயர்கள். இறைவியின் பெயர் ஆச்சாள், ஆயாள் என்பன. ஆதலால் இப்பெயர்

பெற்றிருக்கலாம். சம்பந்தர் திருமணத்தின்போது சோதியில் கலந்தது இவ்வூரிலேயே என்ப.

ஆண்டான் கோவில்

அமைச்சர் (சோழ மன்னன் ஒருவனின் அமைச்சர்) ஒருவரை இவ்வூர் இறைவன் ஆட்கொண்டமையால் பெற்ற பெயர். அமைச்சர்களையும் மக்களையும் ஆண்டுகொண்டதால் ஊரும் இப்பெயர் பெற்றது.

ஆடுதுறை

இவ்வூர் திருவிடை மருதூர் வட்டத்தில் உள்ளது. கல்வெட்டில் இவ்வூர் 'திருக் குரங்காடு துறை' என்றுவழங்கப் படுகிறது. காவிரியின் தென் கரையில் உள்ளது' இவ்வூர் ''வேளாண்மை ஆய்வகம்'' பல புதிய படைப்புக்களைத் தந்துள்ளது. வாழை இவ்வூரில் மிக அதிகமாக பயிரிடப் படுகிறது. வாலி வழிபட்டதால் 'குரங்காடு துறை' என்ற பெயர் வந்தது என்பார்.

ஆதிச்சமங்கலம்

இவ்வூரார் சூரியனுக்கு வழிபாடு செய்தமையால் ஆதித்தன் மங்கலம் என அழைக்கப்பட்டு பின் ஆதிச்சமங்கலம் ஆயிற்று,

ஆயக்காரன்புலம்

ஆயக்காரர்கள் (வரிவசூலிப்பவர்) வாழ்ந்த இடமாதலால் பெற்ற பெயர்.

ஆவூர்

ஆ (பசு) வழிபட்டமையாலும், இறைவன் பெயராலும் (பசுபதிஸ்வரர்) பெற்ற பெயர். கோயில் பெயரே ஊருக்கும் வழங்கப்படுகிறது.

இஞ்சிக்குடி

இஞ்சி மிகுதியாக விளைந்தமையால் பெற்ற பெயர். கேரள மாதேவி சதுர்வேதி மங்கலம், எதிரிலிச்சோழநல்லூர்,

என்பன கல்வெட்டுப் பெயர்கள். பார்வதீஸ்வரம் என்பது வேறு பெயர்.

இடும்பாவனம்

இடும்பன் என்ற அரக்கன் இவ்வூர்க் கோயில் இறைவனை வழிபட்டு உய்ந்தமையால் பெற்ற பெயர் என்ப.

இராமனதீச்சுரம்

இராமன் சிவபெருமானை வழிபட்டுய்ந்த தலம் ஆதலால் இப்பெயர் பெற்றது.

இரும்பூளை

இன்றைய பெயர் ஆலங்குடி. பூளை என்ற செடியைத் தல விருட்சமாகக் கொண்டதால் பெற்ற பெயர். "சுத்த மல்லி வள நாட்டு முடிச் சோணாடு திரு இரும்பூளை என்கிற ஜன நாத சதுர் வேதி மங்கலம்" என்று கல்வெட்டு இவ்வூரைக் குறிப்பிடும்.

உச்சிக்கட்டளை

வேதாரண்யம் கோவில் உச்சிக்கட்டளை வழிபாட்டின் பொருட்டு மானியமாக வழங்கப்பட்டமையின் பெற்ற பெயர்.

எட்டுக்குடி

எட்டிக்குடி என்பதே வழக்கில் இவ்வாறு ஆயிற்று. எட்டி (காஞ்சிரங்கொடி) தலவிருட்சமாதலின் பெற்ற பெயர்.

கச்சூர்

கச்சப ஊர் என்பதே கச்சூர் என்றுயிற்று. திருமால் ஆமை வடிவில் (கச்சபம்) இறைவனை வழியட்ட இடம். கல்வெட்டுப் பெயர் "நித்திய விநோத நல்லூர்"

கதிராமங்கலம்

இவ்வூர் திருவிடை மருதூர் வட்டத்தைச் சார்ந்தது. இவ்வூர் முன்னாளில் 'கதிர் வேய் மங்கலம்' "கதிர் வேய்ந்த மங்கலம்" என்று வழங்கப் பட்ட தென்ப. இவ்வூரில்தான் சடையப்ப வள்ளல் வாழ்ந்ததாகவும் கம்பன் இராமா

யணத்தை அரங்கேற்றிய பின் இவ்வூர் வந்த போது வள்ளல் நெற்கதிரால் பந்தலிட்டு வரவேற்றதால் இப்பெயர் பெற்ற தென்ப. ஒரு பழங்காலக் கோயில் வயல் நடுவிணதாக உள்ளது. இதனைச் ‘சடையப்பரின் சமாதி’ என்று கூறுவர் இவ்வூரார்.

கன்னுரப்பேட்டை

கன்னுர் என்ற இனத்தவர் வாழ்ந்த பகுதியாக இருந்த மையால் பெற்ற பெயராக இருக்கலாம்.

காவிரிப்பூம்பட்டிணம்

காவிரியாறு கடலோடு கலக்கும் இடத்தில் 2000 ஆண்டு கட்கு முன்பிருந்த சோழர் தலைநகரம். புகார், பூம்புகார் என வும் வழங்கப்படும். இலக்கியங்கள் இதன் சிறப்பைப் பல வராகப் பகரும். இன்று இப் பெயரில் காணப்படுவது ஒரு சிற்றூர்.

கிடாய்த்தலைமேடு

மகிஷாசூரனை வதம் செய்த போது கிடாய் விழுந்த இடம் (தலை) ஆதலால் பெற்ற பெயர். துர்க்கைச் சிறப் புடையது.

குண்டையூர்

ரிஷபம் பூஜை செய்தால் குண்டையூர் (ரிஷபம்) எனப் பட்டது.

கீழ்வேளூர்

வேள் (முருகன்) வழி பட்டமையால் பெற்றபெயர்

குத்தாலம்

இவ்வூர் குற்ருலம் என்றும் அழைக்கப்பெறும். மயிலாடு துறை வட்டத்தைச் சார்ந்தது. காவிரி ஆற்றின் கரையில் அமைந்துள்ள அழகிய ஊர். இவ்வூர் தேவாரப் பாடல்களில்

திருத்துருத்தி என்று வழங்கப்படுகிறது துருத்தி என்பதற்கு ஆற்றிடைக் குறை என்று பெயர். குறுகிய ஆலமரங்கள் நிறைய இருந்தமையால் பெற்ற பெயரெனவும், இவ்வூர்க் கோயிலில் தல விருட்சமாகக் காணப்படும் உத்தாலம் என்ற மரத்தின் காரணமாக பெற்ற பெயரெனவும் இவ்வூர்ப் பெயர்க் காரணத்தை இருவிதமாக உரைப்பர். மீனாட்சிசுந்தரம்பிள்ளை இயற்றிய சிறந்த தல புராணம் உள்ளது. இன்றும் உத்தால மரம் இவ்வூர்க் கோயிலில் உள்ளது.

குறிச்சி

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் குறவர்கள் என்று அழைக்கப்பட்டனர். இக்குறிஞ்சி நிலத்து மக்கள் வாழ்ந்த பகுதி குறிச்சி ஆயிற்று. இப் பெயரில் பல ஊர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகிறது. பின்னாளில் இவ்வினப் பாகுபாடு இன்றி பல இனத்தவர்களும் சேர்ந்து வசிக்கும் பகுதிகள் சிற்றூர்கள் குறிச்சி எனப்பட்டன.

கூந்தலூர்

ஜம்புசாரண்யம் என வழங்கப்படும் கும்பகோணத்தின் கிழக்கே உள்ளது, ரோமரிசி என்பவர் தாடிவழியே பொன் பெற்று அனைவர்க்கும் கொடுத்துவர, ஒரு நாள் பொன் வருவது நின்றுவிட, ரிசி தாடியை நீக்கிவிட்டு கோவிலுக்குச் செல்ல விநாயகரும் முருகரும் ஓடிவந்து நீராடாது உள்ளே வருகின்ற ரிசியைத் தடுக்க, இறைவன், புறத்தூய்மையைவிட அகத்தூய்மையே பக்திக்கு அடிப்படை என அருளிய அடிப்படையால் இப்பெயர் பெற்றது என்பர்.

கோயில்வெண்ணி

கோயில் உண்ணி, திருவெண்ணியூர் என்றும் வழங்கப்படும். கரிகாற் சோழன் இளமையில் பகை முடித்த ஊர். வெண்ணிப்பறந்தலையே இன்றைய கோயில்வெண்ணி. "சுத்தமலி வளநாட்டு வெண்ணிக் கூற்றத்து வெண்ணி நகரம்" என்பது கல்வெட்டுப் பெயர்.

கோவந்தபுத்தூர்

கோ- பசு வழிபட்ட மையினுல் பெற்ற பெயர். வழக்கில் கோகறந்த புத்தூர் எனப்படும்.

கோவிந்தக்குடி

நாயக்கர் அரசாட்சியின் போது கோவிந்த தீட்சதர் என்னும் அமைச்சருக்கு மானியமாக வழங்கப் பட்டமையின் பெற்ற பெயர்.

சித்தன்வாழர்

சித்தர்கள் வாழ்ந்த இடம் என்பதால் பெற்ற பெயர். அகத்தியர் இங்கு தங்கி யிருந்தார் என்ப. அவரால் உருவாக்கப் பட்ட நதி அகத்திய நதி எனப்படும்.

சூரியனுர்கோயில்

திருவிடை மருதூர் வட்டத்தைச் சேர்ந்தது. தமிழகத்தில் சூரியனுக்கு என்று தனிக் கோயில் உள்ளது இவ்வூரில் மட்டுமே எனலாம். மற்ற எட்டு கோள்களுக்கும் இக் கோயினுள் தனித் தனி வழிபாடிடம் உள்ளது. சைவத்தை வளர்க்கும் திருமடம் ஒன்று உள்ளது.

செம்பனுர்கோவில்

செம்பொன்பள்ளி என்பதே இவ்வாறு மாறியது. இந்திரபுரி, ஸ்கந்தபுரி என்பன வேறு பெயர்கள்.

செம்பியன் மாதேவி

சோழமாதேவியான செம்பியன் மாதேவியார் பெயரால் ஏற்பட்டது. இவ்வம்மையார் இவ்வூர்க் கோயிலைக் கற்றளி ஆக்கி உள்ளார். இவருக்கு தனிக்கோயிலும், உருவச்சிலையும் உள்ளது. இது கல்வெட்டில் செம்பியன்மாதேவிச்சதுர்வேதி மங்கலம் என்று குறிக்கப்பெற்றுள்ளது.

தடுத்தாவூர்

சுந்தரரை தடுத்தாட்கொண்ட ஊர் ஆதலின் வழக்கில் தடுத்தாவூர் என்னும் பெயர் பெற்றுள்ளது.

தரங்கம்பாடி

இவ்வூரைக் கல்வெட்டுக்கள் "சடங்கன்பாடியானகுல சேகரம்பட்டினம்" என்று குறிப்பிடும். சடங்கன் பாடி என்பதே தடங்கன்பாடி – தரங்கம்பாடி என மருவி இருக்கவேண்டும். தரங்கம்பாடி என்பதற்கு அலைகள் பாடி வரும் கடற்கரையை உடைய ஊர் என்று பொருள் கூறுவர். இவ்வூர் மேலை நாட்டின் ஆதிக்க காலத்தில் சிறந்த துறைமுகமாக விளங்கியது. அக்காலத்தில் அவர்களால் கோட்டைகள் கட்டப்பெற்று சிறப்புடன் விளங்கி இருந்தது.

தலையாமங்கலம்

வாண்மங்கலம்,குடை மங்கலம் என்பது போன்று தலைமங் கலம் என்பதே வழக்கில் இவ்வாறு மாறி இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

தாராசுரம்

இராஜ ராஜபுரம் என்னும் கல்வெட்டுப் பெயர் ராராபுரம் என்ருகி' பின் தாராபுரம் என்ருகி பின் இதுவும் மாறி தாராசு ரம் என்று ஆயிற்று என்ப.

திலதைப்பதி

இராம லக்குவணர்கள் தசரத மகாராஜனுக்கு எள்ளும் புனலும் தெளித்தமையின் இப்பெயர் பெற்றது என்ப.

திருக்கஞ்சனூர்

கஞ்சன் (பிரம்மன்) வழிபட்டமையால் பெற்ற பெயர். பலா சவனம், பராசரபுரம், பிரமபுரி, அக்கினித் தலம், கம்சபுரம், முத்திச் சேத்திரம், என்பன வேறு பெயர்கள். "விருது ராஜ பயங்கர வள நாட்டு நல்லாற்றூர் நாட்டுக் கஞ்சனூர்" என்பது கல்வெட்டுப் பெயர்.

திருக்கண்ணபுரம்

நன்னிலம் வட்டத்தில் உள்ளது. இவ்வூரில் சிறந்த தொரு வைணவக் கோயில் உள்ளது. கண்ணுவ முனிவரால் இவ்வூர் இறைவன் வழிபாடு செய்யப்பெற்றதாகவும், அவர்

நினைவாகவே கண்ணுவர்புரம் என்று வழங்கப்பட்டது. நாளடைவில் கண்ணபுரம் என்று ஆயிற்று என்பர். வைணவத் தலமாதலின் திருக்கண்ணன்புரம் எனத் திருமால் பெயரில் வழங்கி, பின் அதுவே இவ்வாறு மாறி இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

திருக்கண்ணார் கோவில்

இன்றைய பெயர் குறுமானக்குடி. இந்திரனுக்கு 1000 கண் அருளிய வரலாற்றுச் சிறப்பால் பெற்ற பெயர். மாபலி பால் சென்று மூவடி மண் கேட்ட வாமன மூர்த்தி ஆகிய குருமாணி வழிபட்டமையால் பெற்ற பெயர். கல்வெட்டில் குருவாணியக்குடி எனக் காணப்படுகிறது.

திருக்கண்டியூர்

தஞ்சாவூர் வட்டத்தில் உள்ளது. சிவ பெருமான் பிருமா வின் தலையைக் கண்டித்த- கொய்த இடமாதலால் பெற்ற பெயர் என்பர் அட்ட வீராட்டானத் தலங்களில்இதுவும் ஒன்று பாடல் பெற்ற தலம். இந்தக் கோயிலில் பல கல்வெட்டுகள் உள்ளன. கல் வெட்டில் இவ்வூர்ப் பெயர் திருக்கண்டி யூர் என்றே காணப்படுகிறது.

திருகடவூர்

இவ்வூர் மார்க்கண்டேய நாயனருக்காகச் சிவபெரு மான் இயமனைக் காலால் உதைக்கப் பெற்ற இடம் என்றும் இறப்பின் கொடுமையைக் கடக்க உதவும் ஊராகையால் கடவூர் என்ற பெயரினைப் பெற்றது என்பர். இயமனை உதைத்த இடமாதாலின் நவக் கிரகங்கள் தம் வலிமை இழந்தன என வும், அதனால் இவ்வூர்க் கோயிலின் நவக்கிரகர் சன்னதி இல்லை என்றும் கூறுப. கோயிலில் பல மன்னர்களின் கல் வெட்டுக்கள் காணப்படுகின்றன. பாடல் பெற்ற தலம்.

திருக்கடிக்குளம்

இன்று இவ்வூர் கற்பகனூர் குளம் என அழைக்கப்படுகிறது. கற்பக விநாயகர் இறைவனைப் பூசித்து மாம்பழம் பெற்ற வரலாறுபற்றி இவ்வூர் இப்பெயர் பெற்றதெனப்படும்.

திருக்கடைமுடி

இன்று இவ்வூர் கீழையூர் என்று வழங்கப்பெறுகிறது. மயிலாடுதுறை வட்டத்தைச் சேர்ந்தது. காவிரியாற்றின் கடைமுடியில் இவ்வூர் அமைந்திருப்பதால் இப்பெயர் பெற்ற தென்பர். பாடல்பெற்ற ஊர்.

திருக்கரவீரம்

இன்றைய பெயர் கரையபுரம். ழுதை பூசித்தமையால் பெற்ற பெயர் என்ப. (கரம் – கழுதை) கரவீரம்—பொன்னலரி. பொன்னிறமான பூக்களைத் தரும்மரம் தல விருட்சம் ஆன தாலும் இப்பெயர் பெற்றது.

திருக்கருப்பறியலூர்

பிறவிப் பிணி நீக்குதலால் பெற்ற பெயர். கன்மம் கொடுத்தலால் கன்மநாசபுரம் எனவும், சூரியன் வழிபட்ட தால் தலைஞாயிறு எனவும், முல்லை தலவிருட்சம் ஆதலால் யூதிகாவனம் எனவும் வழங்கப்படும்.

திருக்களந்தை

இன்று களப்பால் என்று வழங்கப்படும். கூற்றுவ நாய ஞர் வாழ்ந்த ஊர். இன்றும் இவ்வூரருகே கூற்றுவன் திடல் கூற்றுவன் குளம் என்ற பெயரில் ஊர்கள் உள்ளன. களப் பிரர் வாழ்ந்தால் ஏற்பட்ட பெயரென்ப.

திருக்களர்

திருத்துறைப் பூண்டி வட்டத்தில் உள்ளது. கல்வெட்டி லும் இப்பெயரே காணப்டுகிறது. நிலத்தின் தன்மையான்—களர் நிலமாக இருந்தமையால் இவ்வூர் இப்பெயர் பெற்றது என்பர். கோயில் துர்வாச முனிவரால் வழிபடப்பட்டச் சிறப்புடையது என்பர். பாடல் பெற்ற தலம். கோயிலில் கல் வெட்டுக்கள் பல உள்ளன.

### திருகற்குடி

நந்திவர்மன் இவ்வூர்க் கோயிலுக்குத் திருப்பணி செய்தால் நந்திவர்மமங்கலம் என்று இவ்வூர்ப் பெயரைக் கல்வெட்டுக் குறிப்பிடும். "பாண்டிய குலாசனி வளநாட்டு ராஜாசரய சதுர்வேதி மங்கலத்துக் கற்குடி எனவும் இராஜ மகேந்திர வளநாட்டு உறையூர் கூற்றத்துப் பிரம்மதேய மான சதுர்வேதி மங்கலத்து கற்குடி" எனவும் கல் வெட்டுகள் இவ்வூரைக் குறிக்கும்.

### திருக்காட்டுப்பள்ளி

இது மேலைத்திருக்காட்டுப்பள்ளி என்று வழங்கப்படும். இப்பெயருடன் காவிரிப்பூம்பட்டிணத்தின் அருகே ஒரு ஊர் இருப்பதால் அதிலிருந்து இதனைப் பிரித்தறிய, இதனை மேலைத் திருக்காட்டுப்பள்ளி எனவும், அதைக் கீழைத்திருக்காட்டுப் பள்ளி எனவும் வழங்குவர். காவிரியிலிருந்து பிரியும் குடமுருட்டி ஆற்றின் கரையில் உள்ளது.

### திருகுறுக்கை

காவிரி வடகரை 26வது தலம். அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று. கடுக்கை மரம் தலவிருட்சமாதலின் கடுவனம் அல்லது அறிதஹிவனத் எனவும், அம்பிகை பிரிந்து தவம் செய்த விடமாதலின் யோகீசபுரம் எனவும், காமதகனத்தால் காமபுரம் எனவும், இலக்குமியின் கம்பத்தை (நடுக்கம்) போக்கியதால் கம்பகரபுரம் எனவும் படும். தீர்க்கவாகு முனிவர் இத்தலத்து இறைவன் அபிடேகத்திற்கு கங்கை நீரை விரும்பி தமது கரங்களை நீட்ட கரங்கள் நீளாது குறுகினமையால் இப்பெயர் பெற்றது என்ப. கல்வெட்டு "விருதுராஜ பயங்கர வளநாட்டு குறுக்கை நாட்டுக் குறுக்கை" எனக் குறிப்பிடும்.

### திருக்கைச்சினம்

இன்று கச்சினம் என்று வழங்குகிறது. இந்திரன் சிவ பெருமானை மணலால் உருவாக்கி வழிபட்டு பின் கையால் எடுக்க முயன்று இயலாது, கையடையாளம் – கைச்சின்னம் பெற்றமையால் பெயர். கல்வெட்டு "ராசேந்திர சோழ வள

நாட்டு ஆர்வலக் கூற்றத்து கச்சினம்'' என்றும், ''ராசேந்திர சோழ வளநாட்டு வடக்கால் வெண்டாழை வேளூர்க் கூற்றத்துக் கச்சினப்பற்று'' என்றும் குறிப்பிடும்.

திருக்கொட்டைவூர்

குடந்தையின் வடமேற்கே உள்ளது. கொட்டையூரில் செய்த பாவம் கட்டை யோடே என்பது பழமொழி. கொட்டைச் செடி (ஆமணக்கு) தல விருட்சமாதலின் பெற்ற பெயர். வேறு பெயர் வில்வாரண்யம், ஏரண்டபுரம் (கொட்டைச் செடி) ராஜேந்திர சிங்க வள நாட்டு இன்னம்பூர் நாட்டு. பிரம தேயம் கொட்டையூர். என்பது கல்வெட்டுப் பெயர்.

திருக்கோட்டாறு

இன்றை பெயர் கொட்டாரம் என்பதாம் 'ராஜராஜ பாண்டி நாட்டு உத்தம சோழவள நாட்டு நாஞ்சில் நாட்டு கோட்டாராலி மும்முடிச் சோழ நல்லூர்'' என்று கல் வெட்டுக் குறிப்பிடும்.

திருக்கோடிக்காவல்

இவ்வூர் திருவிடை மருதூர் வட்டத்தைச் சார்ந்தது. சோலைகள் நிறைந்தமையால் 'திருக்கோடிக்கா' என்ற பெயர் பெற்றதென்ப. திரிகோடி ரிஷிகள் வசித்தத் தலம் ஆகவே இப்பெயர் பெற்றதென்பாருமுளர். கல்வெட்டு 'திருக்கோடிக்காவல், திருக் கோடிக்கா என்று கழறுகிறது. சிற்பங்கள் நிறைந்த கோயில் உள்ளது. தேவாரப் பாடல் பெற்ற தலம்.

திருச்சக்கரப்பள்ளி

சக்கர வாகப் பறவைப் பூசித்தமையால் பெற்ற பெயர்.

திருச்சத்திமுத்தம்

சத்த முற்றம் எனப்படும். இறைவி கழங்கு விளையாட்டாடிய முற்றம் எனவும், இறைவி இறைவனை யணைத்து முத்த மிட்ட இடம் எனவும் கூறுப.

திருச்சாய்க்காடு

சாயாவனம் எனப்படும். ஆதிசேடனது நாகமணி ஒளி வீசியதால் பெற்ற பெயர். ராஜாதி ராஜ வளநாட்டு நாங்கூர் நாட்டுக் காவிரிப்பூம்பட்டிணத்துத் திருச்சாய்க் காடு என்பது கல்வெட்டுப் பெயர். சாய்—கோரை. கோரைக் காடு ஆதலால் பெற்ற பெயர் என்வும் கூறுப.

திருச்சிக்கல்

வசிட்ட முனி காம தேனுவின் வெண்ணெய்யில் சிவ லிங்கத் திருமேனியை உருவாக்கிப் பூசித்து முடிவில் எடுக்க முயன்று முடியாமல் சிக்கியமையால் பெற்ற பெயர். மல்லிகை வனம், வசிட்டாச்சிரமம், தேவசானித்யபுரம் கயாசரஸ் என்பன வேறு பெயர்கள்.

திருச்செங்காட்டங்குடி

விநாயகர் கஜமுகாசுரனைக் கொன்றபோது இரத்தம் பெருகிப் பரவியதால் செங்காடு, செங்காட்டங்குடி எனப்பட் டது. ‘‘காயமாணிக்க வளநாட்டு மருகல் நாட்டுத் திருச் செங்காட்டங்குடி’’ என்பது கல்வெட்டுப் பெயர்.

திருச்சேய்ஞலூர்

சேய் (முருகன்) வழிவட்டத்தலம் ஆதலால் இப்பெயர் பெற்றது. இன்று சேங்கனூர், எனப்படும். சண்டேசுரர் அவதார தலம்.

திருச்சோற்றுத்துறை

திருவையாறு வட்டத்தைச் சேர்ந்தது அருளாளன் என் னும் அந்தணரின் பசியைத் தனிப்பதன் பொருட்டு இறை வன் எடுக்க எடுக்கக் குறையாத அளவிற்கு சோறளித்தமை யால் இவ்வூருக்கு இப்பெயர் வந்தது என்ப. சோறுடையான் வாய்க்கால் என்று ஒரு வாய்க்கால் இவ்வூரருகே ஓடுகிறது. கோயில் சிறப்புடையது. பாடல்பெற்ற தலம். பல கல்வெட் டுக்கள் காணப்படுகின்றது.

திருத்தேவூர்

தேவர்கள் பூசித்தமையான் பெற்ற பெயர் என்ப.'' அருள்மொழி தேவ வளநாட்டுத் தேவூர் நாட்டுத் தேவூர் என்பது கல் வெட்டுப் பெயர்.

திருநல்லம்

கோனேரிராசபுரம் என்றும் வழங்குவ. பாடல் பெற்ற தலம். திருவிடை மருதூர் வட்டத்தைச் சேர்ந்தது. கோனோரிராசன் கோனோரின்மை கொண்டான் என்ற மன்னன் பெயரால் வழங்கப்படுவது. கோயில் சிறப்புடையது இவ்வூர்க் கல் வெட்டுக்களில் இக்கோயிலக் கண்டராதித்தச் சோழன் மனைவியார் செம்பியன் மாதேவியார் கருங்கற் பணியாகக் கட்டியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இக் கோயிலில் இவ்விருவர் உருவச் சிலைகளும் உள்ளன.

திருநல்லூர்

இவ்வூர் கல்வெட்டுக்களில் பஞ்சவன்மாதேவி சதுர் வேதி மங்கலம் என்றிருக்கிறது. இக்கல்வெட்டு முதல் இராசராசன் காலத்தது. ஆதலின் இப்பெயர் இவன் மனைவியருள் ஒருத்தியின் பெயராக இருக்கலாம். இவ்வூர் வலங்கைமான் வட்டத்தில் உள்ளது.

திருநள்ளாறு

நளன் பூசித்தமையால் பெற்ற பெயர். ''உய்யக்கொண்டனர் வளநாட்டு முழையூர் நாட்டு நள்ளாறு'' என்பது கல் வெட்டுப்பெயர் இவ்வூர் சனிபகவான் கோயிலுக்குப் பிரசித்தி பெற்றது. காரைக்காலுக்கு அருகில் உள்ளது. இவ்வூர்க் கோயில் இலிங்கத்தின் வடிவம் தருப்பைக் கொழுந்துகள் ,சேர்த்து வைத்ததுபோல் இருக்கிறது. சம்பந்தர் மதுரையில் சமணருடன் வாதிட்டபோது இப்பதிகப் பாடல்களையே நெருப்பில் இட்டதாக வரலாறு உரைக்கும்.

திருநாகேசுச்சுரம்

இவ்வூர் கும்பகோணத்தில் உள்ளது நாகம் வழிபட்ட சிறப்புடைமையால் இப்பெயர் பெற்றதென புராண வரலாறு

கூறும். சண்பகாரணியம் என்று வேறு பெயரொன்றும் உரைப்ப. கல்வெட்டுக்களிலும் இவ்வூர் திருநாகேசுரம் என்றே குறிப்பிடப்படுகிறது இவ்வூர் சேக்கிழாருக்கு விருப்ப மான ஊரென்றும், இவர் தம்முடைய ஊராகிய குன்றத் தூரில் ஒரு கோயிலைக்கட்டி அதற்கு இப்பெயரை வைத்தார் என்றும் கூறுவ. நாகராசன் வழிபட்டத் தலமாதலின் இப் பெயர் பெற்றது. "உய்யக் கொண்டார் வள நாட்டு திரைமூர் நாட்டுத் விண்ணகர் திரு நாகேச்சுரம்" என்பது கல்வெட்டுப் பெயர்.

திருநீரூர்

செல்வ வளத்தில் நீடிய ஊராதலாவும் ஊழிக் காலத் தும் அழியாது நீடித்து இருந்த மையாலும் இப்பெயர் பெற் றது என்ப. கல்வெட்டு இவ்வூரை. "ராஜாதி ராஜவள நாட்டு இந்தலூர் நாட்டு நீரூர்" எனக் குறிப்பிடுறது. எவ் விக்கு உரிய ஊர் என்று குறிப்ப.

திருநெய்த்தானம்

தில்லை தானம் என்பது இன்றையை பெயர். சப்ததானத் தலங்களில் ஒன்று. "ராஜராஜ வள நாட்டுப் பைங்கா நாட்டுத் திரு நெய்தாளம்" என்பது கல்வெட்டுப் பெயர்.

திருநெல்லிக்கா

திருநெல்லிக்காவல் என்றும் இவ்வூரை வழங்குவ. திருவா ரூரின் அருகே உள்ளது. கோயில் தலவிருட்சம் நெல்லி மரம் ஆதலால் இப்பெயர் பெற்றது. இவ்வூர்க் கோயில் சிவலிங் கத்தின்மீது ஐப்பசி தேய்பிறையில் சதுர்த்தசி ஏழு நாளும், மாசியில் பதினெட்டாம் நாள்முதல் ஏழு நாளும் ஞாயிறு மறையும்போது ஞாயிற்றின் கதிர்கள் (சூரியனின்) விழும். இந்நாவல் மரத்தின் கனிகளை கோயில் இறைவனுக்கு மட்டுமே பயன்படுத்துகின்றனர்.

திருபந்தணைநல்லூர்

இறைவி பந்தாடல் புரிய, இறைவன் இறைவியை அழைத்தும், செல்லாததால் இயைவன் காலால் பந்தினை உதைக்க அணைந்த இடமாதலால் பெற்ற பெயர் என்ப. வேறு பெயர் தென்கயிலை, கோவூர், கொன்றைவனம், பானு புரம், விஷ்ணுபுரம், இந்திரிபுரி, கண்ணுவராச்சிரமம், வாலி நகர், அண்ணமிடும்மெய்ப்பேரூர், கந்துகபுரி, ஆவூர் என்பன. கல்வெட்டு இவ்வூரை, "வடகரை விருதராச பயங்கர வள நாட்டு விளத்தூர் நாட்டுப் பந்தணைநல்லூர்" என்று குறிப் பிடும்.

திருப்பழமண்ணிப்படிக்கரை

காவிரியின் வட கரையின் அமைந்த ஊர். இன்று இலுப் பைப் பட்டு என்றும் வழங்கப் படுசிறது. மண்ணி யாற்றின் படிக் கரையில் அமைந்தமையாான் இப் பெயர் பெற்றது." விருது ராஜ பயங்கர வளநாட்டு ராஜராஜ நாட்டுத் திருப் பழ மண்ணிம் படிக்கரை என்பது கல்வெட்டுப் பெயராகும்.

திருப்பழனம்

திருவையாறு வட்டத்தில் உள்ளது இவ்வூர் சப்ததானத் தலங்களில் ஒன்ருகும். இவ்வூருக்கு அருகில் அப்பூதியடி களின் ஊரான திங்களூர் உள்ளது. பாடல் பெற்ற தலம். சோழர் கல்வெட்டுகள் பல இக்கோயிலில் உள்ளன. இயற்கை அமைப்பின் காரணத்தால் ஏற்பட்ட பெயர். பழனம் – வயல்.

திருப்பனந்தாள்

இன்று இவ்வூர் சுருக்கமாக் "பனசை" என்றும் அழைக் கப்படுகிறது இயற்கையிலேயே பனை மரங்கள் மிகுதியாக இருப்பதாலும், ஊர்க் கோயில் இறைவன் பனந்தாளில் – பனை மரத்தின் அடியில் தோன்றியிருப்பதாலும் இப்பெயர் பெற்றது. பாடல்பெற்ற தலம். குங்கிலியக் கலநாயனுருக்கு அருள் கொடுத்ததலம். பல்வேறு சிறப்புக்களை உடைய இவ்வூருக்கு மேலும் அணிசெய்வன சைவமடம் ஒன்றும், செந்தமிழ்க் கல்லூரி ஒன்றுமாம்.

### திருப்பனையூர்

திருப்பனையூர் என்றே கல்வெட்டும் குறிப்பிடும். நன்னிலத்தின் அருகே உள்ளது. பனைமரத்தினைத் தலவிருட்சமாகக் கொண்டமையால் பெற்ற பெயர்.

### திருப்பாம்புரம்

நாகராசன் வழிபட்டமையால் பெற்ற பெயர் என்ப. உய்யக்கொண்டார் வளநாட்டுப் பாம்புரம்'' என்பது கல்வெட்டுப் பெயர்.

### திருப்புகலூர்

ஆன்மாக்கள் இறைவனிடம் புகலடைந்தமையால் பெற்ற பெயர். சரண்யபுரம் எனவும் கூறுவ. ''பனையூர் நாட்டுப் பிரம்மதேயமான திருப்புகலூர்'' என்பது கல்வெட்டுப் பெயர்.

### திருபுவனம்

திரிபுவனச் சக்கரவர்த்திகள் என்று விருதுபூண்ட மூன்றும் குலோத்துங்கனது பெயரினின்று தோன்றியிருக்கலாம்.

### திருப்புறம்பயம்

கும்பகோணம் வட்டத்தில் உள்ள இவ்வூர் வரலாற்றுச் சிறப்புடயைது. பிராளக்காலத்திலும் அழியாமல் புறம்பாய்இருந்தமையால் புறம்பயம் என்ற பெயர் பெற்றது என்பர். கோயில் சிறப்புடையது. வெள்ளை விநாயகர் உள்ளது. பாடல்பெற்ற தலம். திருப்புறம் பயப்போர் வரலாற்றுச் சிறப்புடையது. கோயில் பெயர் கல்வெட்டின் ஆதித்தேச்சுரம் எனவும், ஊர்ப் பெயர் திருப்புறம்பியம் எனவும் கானப்படுகிறது.

### திருபுன்கூர்

புன்கு மரத்தைக் கோயில் தல விருட்சமாகக் கொண்டமையால் இப்பெயர் பெற்றது. வட மொழியில் ''கரிஞ்சாரண்யம்'' என்று வழங்கப்படுகிறது. ''ராசாதிராச வளநாட்டு திருவாலி நாட்டுத் திருப்புன்கூர்'' என்பது கல்வெட்டுப் பெயர்.

திருப்பூந்துருத்தி

சோழ அரசன் ஒருவன் துருத்தியை (பூக்குடலை) வைத்து பூசை செய்தபோது அதுவே சிவலிங்கம் ஆகியதால் பெற்ற பெயர்.

திருப்பெரும்புலியூர்

புலிக்கால் முனிவர் பூசித்ததால் பெற்ற பெயர். புலிக்கால் முனிவர் — வியாக்ரபாதர்.

திருமக்கோட்டை

கல்வெட்டுக்கள் இவ்வூரை "திருமேற்கோட்டை எனக் குடுப்பிடுகின்றன. கோயில் இறைவன் பெயர் திருமெஞ்ஞான முடையார் என்பதாம். இதன் வழியே திருமக்கோட்டை என்பது வந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. திருமெய்க் கோட்டை – திருமக்கோட்டை என ஆகி இருக்கலாம்.

திருமங்கைச்சேரி

திருமங்கையாழ்வார் நாகையில் உள்ள புத்த விகாரத்தில் இருந்த பொன்னாலான புத்த விகாரத்தைக் களவாடிச்சென்ற போது, ஸ்ரீரங்கம் செல்லும் வழியில் தங்கியமையால் பெற்ற பெயர்.

திருமணஞ்சேரி

இறைவன் இறைவியை மணங்கொண்ட ஊராதலின் பெற்ற பெயர். கல்வெட்டில் "விருதுராச பயங்கர வளநாட்டு திருக்குறுக்கைநாட்டுத் திருமணஞ்சேரி" என்று காணப்படு கிறது.

திருமருகல்

மருகல் (கல்வாழை) தலவிருட்சமாதலால் பெற்ற பெயர்.

திருமெய்ஞ்ஞானம்

இவ்வூர்த் திருக்கடவூர் மயானம் என்றும் அழைக்கப் பெறும். சிவபெருமான் பிரமாவை கோபத்தால் அழித்து நீருக்கிப் பின் மீண்டும் உயிர்ப்பித்த இடமாதலின் மயானம் என்ற

பெயரையும் பெற்றது என்ப. திருக்கடவூரின் அருகே உள்ள தால் திருக்கடவூர் மயானம் என்ற பெயர் பெற்றது என்ப. திருக்கடவூர் மயானமே காலப்போக்கில்—பேச்சு வழக்கில் திரு மெய்ஞ்ஞானம் என்று திரிந்து வழங்கியிருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.

திருலோக்கி

இவ்வூர் திருவிடைமருதூர் வட்டத்தில் உள்ளது. இவ் வூர் பேச்சு வழக்கில் ''தைலி'' 'தைலிக்கி' என்று வழங்கப் படுகிறது. கல்வெட்டுகள் இவ்வூரை 'ஏமநல்லூராகிய திரை லோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலம்' என்று நவில்கிறது. முதலாம் இராஜேந்திரனின் [பட்டத்தரசியருள் 'திரைலோக்கிய மாதேவி' என்பவளால் அந்தணர்க்கு தானமாக வழங்கப்பட் டது. சோழர்காலத்திய சிவன் கோயில்கள் இவ்வூரில் உள்ளது. ஹொய்சளர்களின் கைவண்ணத்தில் உருவான ரிஷபாரூர் சிலை கலைத்திறம் மிக்கது, 'திரைலோக்கிய மல்லன்' என்ற குறுநில மன்னன் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது. இவ்வூரைப் பற்றிப் பல நாட்டுப்புறக் கதைகள் வழங்கப்படுகின்றன. சான் ருக இவ்வூரில் ஓடும் ஆற்றின் பெயர் 'இராமரோடை' அல்லது 'அம்பட்டன் வாய்க்கால்' என்பது, இப்பெயர் பெற்ற தற்கான காரணமாக இராமர் இலங்கை செல்லும் வழியில் இவ் ஊரில் முகமழித்துக் கொண்டபோது குளிக்க தண்ணீரின்றி இவ்வாற்றை கையால் கிழித்து உருவாக்கினர்; ஆகவே இவ் விரு பெயர் பெற்றதென்ப: இவ்வூர் நாயன் மார்களால் பாடல் பெற்றதலம்.

திருவல்லம்

வல்லாளன் வழிபட்டமையால் பெற்ற பெயர். இறைவன் வல்லநாதர் ஆகையால் பெற்ற பெயருமாம். தீக்காளி வல்லம் எனவும்படும்.

திருவலஞ்சுழி

பிலத்துள் சென்றுவிட்ட காவிரி வெளிப்படும்பொருட்டு ஏரண்ட முனிவர் பிலத்துள் இறங்க, காவிரி வெளிவந்து வலமாக சுழித்துச் சென்றமையால் பெற்ற பெயர்.

திருவலிவலம்

வலியான் (கரிக்குருவி) வழிபட்டு உய்ந்தமையால் பெற்ற பெயர். "அருள்மொழி தேவ வளநாட்டு வலிவலக் கூற்றத்து உபயகுல சுத்த சதுர்வேதி, மங்கலமான வலிவலம்" என்பது கல்வெட்டுப்பெயர்.

திருவலிதாயம்

ஊர்க்கோயில் இறைவன் பெயரால் (வலிதாயமுடையார்) பெற்றது. இன்றைய பெயர் பாடி. "ஜயங்கொண்ட சோழ மண்டலத்து புலியூர் கோட்டமான சங்கம சோழ வளநாட்டு அம்பத்தூர் நாட்டு வலிதாயம்" என்பது கல்வெட்டுப் பெயர்.

திருவன்னியூர்

இன்றைய பெயர் பொன்னூர். அன்னி என்னும் குறுநிலத் தலைவன் வாழ்ந்த ஊர் ஆதலின் இப்பெயர் பெற்றது என்பர். விகுசாரண்யம், பாஸ்கர சேத்திரம் என்பன வேறு பெயர்கள். வன்னி – நெருப்பு - அக்னி தேவன் வழிபட்டமையால் பெற்ற பெயர் எனவும் உரைப்பர். தமனியப்பதி எனவும் வழங்கப்படும்.

திருவாஞ்சியம்

இலக்குமியை வாஞ்சித்து (விரும்பி) திருமால் வழிபட்ட தலமாதலின் பெற்ற பெயர். ஸ்ரீவாஞ்சியம் எனவும் கூறப்படும். "குலோத்துங்க சோழ வளநாட்டு பனையூர் நாட்டுத் திருவாஞ்சியம்" என்பது கல்வெட்டுப் பெயர்.

திருவாய்பாடி

சண்டேசரநாயனர் ஆக்களை மேய்த்த இடம். அதனாலேயே இப்பெயர் பெற்றது. சாண்டேசர நாயனரால் சிறப்பு பெற்ற ஊர்.

திருவாலங்காடு

ஆலங்காட்டால் பெற்ற பெயர். "வடகரை மண்ணிவிற் கோட்டத்து மேல்மாலை பழையனூர் நாட்டுத் திருவலங்காடு" என்பது கல்வெட்டுப் பெயர்,

திருவாழ்கொளிபுத்தூர்

அர்ச்சுணன் வாளினை மறைத்து வைத்த இடத்தில் இறைவன் அர்ச்சுனனை ஆட்கொள்ளக் கருதி வாளினை மறைக்க வாளைத்தேடிச் சென்று வாளாயுதம் இருந்த இடத்தில் வாசுகி என்னும் பாம்பு இருக்கக்கண்டு மலைத்து பின் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டமையின் பெற்ற பெயர். வாள் ஒளி புற்றூர் என்பதே வாழ்கொளிபுத்தூராய் ஆயிற்று என்ப. வாகை அரதனபுரம் என்பன வேறு பெயர்கள்.

திருவாவடுதுறை

சாத்தனூர் என்பதே பழைய பெயர், இறைவி பசுவாக வழிபட்ட இடமாதலால் பெற்ற பெயர். "தென்கரைத் திரைமூர் நாட்டுப் பிரமதேயம் சாத்தனூர்" என்பது கல்வெட்டுப் பெயர். கோயில் பெயரே ஊருக்கு வழங்குகிறது. "கோமுத்தி பூக்கைலாயம், நந்திநகர், தியாகபுரம், சிவபுரம், வேதபுரம், சித்தபுரம், நவகோடிசித்தபுரம் என்பன வேறுபெயர்கள்.

திருவெண்காடு

வடமொழிப்பெயர் சுவேதவனம் (சுவேதம்- வெண்மை வனம்- காடு) வேறுபெயர்கள் முத்திநகர் தமோநாசபுரம் பாபநாசபுரம், முருகன்பூண்டி, சித்திநகர், பாதாலகைலாயம், ஞானவனம், சிவானந்தக்காடு, கணபதிநகரம், ஆதிசிதம்பரம், திருஉமையூர், மாலூர், தலநாயகம், பெரியமயானம் என்பனவாம்.

திருவிடைவாயில்

விடையவன் என்னும் சூரியகுலத்து மன்னன் உண்டு பண்ணிய ஊராதலின் பெற்ற பெயர் என்ப. திருவிடைவாய் எனவும் வழங்கப்படும்.

திருவீழிமிழலை

திருமான் சிவனை தினமும் 1000 தாமரைமலர் கொண்டு அர்ச்சிக்க ஒருநாள் ஒருதாமரைமலர் குறைய கண்களில் ஒன்றையே மலராகக் கொண்டு வழிபட்டமையின் பெற்ற பெயர் கல்யாணபுரம், பூங்கையிலாயம், பஞ்சாக்ரபுரம், தட்சிணாகாசி,

சண்பகமங்கலத்தலம், ஸ்வேதகாணனம் ஆகாசநகரம் பலசாரண்யம், நேத்திரார்பனபுரம் என்பன வேறுபெயர்கள் ''உலகுய்யக்கொண்ட சோழவளநாட்டு வேணாட்டுப் பிரமதேயம் திருவீழிமிழலை'' என்பது கல்வெட்டுப் பெயர்.

துகிலி

இவ்வூர் திருவிடைமருதூர் வட்டத்தில் உள்ளது. பேச்சு வழக்கில் 'துயிலி' எனப்படுகிறது. இவ்வூர் ''துகில்'' செய்வதில் பெரும் பெயர் பெற்றதால் இப்பெயர் பெற்றது. நெசவுத் தொழிலால் பெயர் பெயர் பெற்ற 'துகிலி'யைப் போல் மற்றவூர் கூறைநாடு இவ்வூரில் இன்றும் கைத்தறி ஆடைகள் நெய்யப்பட்டு உயர்ந்த நிலையில் உள்ளது. கோவலனும் கண்ணகியும் மதுரைக்கு இவ்வூர் வழியே நடந்து சென்றதாக ஒரு செவி வழிச்செய்திஉண்டு.

தென் திருமுல்லைவாயில்

முல்லைதல விருட்சம் ஆனதால் பெற்றபெயர். வடதிரு முல்லைவாயில் என்று ஒன்றும் உள்ளது.

நல்லம்பூர்

நல்லன்பர்களாகிய சிவநெறி அன்பர்கள் வாழ்ந்த காரணத்தால் நல்லன்பர்கள் என அழைக்கப்பட்டுப் பின் அதுவே நல்லம்பூர் ஆயிற்று பாடல் பெற்றதலம்.

நெய்விளக்கு

வேதாரண்யம் கோயில்விளக்கு எரிப்பதற்கென்று இவ்வூரில் இலுப்பை மரங்கள் வளர்க்கப்பட்டு மானியமாக விடப்பட்டமையின் பெற்றபெயர்.

பஞ்சநதிக்குளம்

பஞ்சபாண்டவர்கள் வசித்தமையால் பெற்றபெயர் என்ப. ஐந்துசிறுகுளங்கள் உள்ளமையாலும் பெற்றபெயர் என்பர்,

பட்டீசுரம்

பட்டி (காமதேனு) வழிபாடு செய்து சிறப்புப்பெற்றமையால் பெற்றபெயர்.

பண்டிதசோழநல்லூர்

இன்றைய பெயர் பண்டிதநல்லூர். பண்டிதர்களுக்கு மானியமாக அளிக்கப்பட்டமையின் பெற்றபெயர் எனலாம்.

பாடகச்சேரி

இராவணன் தன்னைத் தூக்கிச்சென்றபோது, சீதை தன் ஒவ்வொரு அணியாகக் கழற்றி கீழே போட, பாடகம் என்ற அணிகலன் வீழ்ந்த இடமாதலால் இப்பெயர் பெற்றது என்பர்.

பாதிரிபுரம்

விருபாட்சிபுரம் எனவும் அழைக்கப்படும் பாதிரி மரங்கள் நிறைந்த காடாக இருந்தமையால் பெற்ற பெயர். விருபாட்சி – பாதிரி.

பாஸ்கரராஜபுரம்

திருவிடைமருதூர் வட்டத்தைச் சேர்ந்தது. பாஸ்கரர் என்ற முனிவர் தவம் செய்த இடம் ஆதலால் இப்பெயா பெற்றதென்ப. அதை உறுதிசெய்யும் வண்ணம் பாஸ்கரரின் சமாதியை அவ்வூரில் காணலாம்.

புள்ளிருக்குவேளூர்

இன்றைய பெயர் "வைத்தீஸ்வரன்கோயில்" – கோயில் இறைவன் பெயர் கோயிலுடன் இணைத்து வழங்கப்பட்டு பின் அதுவே ஊருக்கும் வழங்கப்படலாயிற்று.

புள் – ஜடாயு, இருக்கு - வேதம், வேள் – முருகன் ஆகிய மூவரும் வழிபட்டுச் சிறப்படைந்தமையால் இப்பெயர்பெற்றது என்பர். இக்காரணத்தினாலேயே இவ்வூர் சடாயுபுரி, வேதபுரி கந்தபுரி எனவும் வழங்கப்படும். மேலும் சூரியன் வழிபட்டமையால் பாரிதிபுரி எனவும், அங்காரகன் வழிபட்டமையால் அங்காரபுரம் எனவும், அம்பிகை வழிபட்டதால் அம்பிகாபுரம் எனவும் வழங்கப்படுகிறது.

புஷ்பவனம்

வேதாரண்யம் கோயில் இறைவனுக்காக மலர் வனமாக வளர்க்கப்பட்டமையின் பெற்றபெயர்.

பெருமாநத்தம்

திருமக் கோட்டையில் உள்ள பெருமாள் கோவிலுக்கு உடையதாகலின் பெருமாள் நத்தம் எனப்பட்டுப்பின் பெருமா நத்தம் ஆயிற்று.

பேரளம்

பெரிய உப்பளம் என்னும் பொருள் கொண்டது.

மணமந்தபுத்தூர்

முதலில் புத்தூர் என்று இருந்தஇவ்வூர் அந்தரருக்கு மணம் வந்தமையால் மணம் வந்தபுத்தூராய் மாறி திருமணம் நின்றமையால் மணமந்த புத்தூராய் மாறியது.

மறவாதி

மறவர்பாதி என்னும் பெயரே வழக்கில் இவ்வாறு மாற்றம் பெற்றுள்ளது.

மாதேவப்பட்டிணம்

மகாதேவப்பட்டிணம் என்பதே மாதேவப்பட்டிணம் எனப் படுகிறது, துளசாஜி வழியில் வந்த அரசன் ஒருவரால் கோயிலும் அரன்மனையும் கட்டிவாழ்ந்தமையால் பெற்றபெயர்.

முடிகொண்ட சோழபுரம்

குடந்தைக்கு தென்மேற்கே மூன்று மைல் தொலைவில் இப்பொழுது பழையாறை என்னும் பெயருடன் உள்ள சிற்றூர். இச்சிற்றூரும் இதனைச் சார்ந்த வேறு சில ஊர்களும் சேர்ந்தே இது ஒரு பெரிய நகரமாகச் சோழர்களின் தலைநகரமாக வெவ்வேறு பெயர்களுடன் இருந்ததெனத் தெரிகிறது. பெரியபுராணத்தில் அமர்நிதிபுராணம் முதற் செய்யுளில் "பாரில் நீடிய பெருமைசேர்பதி பழையாறை" எனக் குறிக்க பெறுகிறது. கி. பி. 7ம் நூற்றுண்டில் பழையாறை எனவும்

8ம் நூற்றுண்டில் நந்திபுரம் எனவும் 9, 10ம் நூற்றுண்டில் முடிகொண்ட சோழபுரம் எனவும், 12ம் நூற்றுண்டில் இராசராசபுரம் எனவும் வழங்கப்பெற்றதென்பதைத் தமிழ் நூல்களும், கல்வெட்டுக்களும் அறிவிக்கின்றன. அக்காலத்தில் அந்நகரில் சோழ மன்னர்களின் அரண்மனை இருந்த இடம் இப்பொழுது சோழ மாளிகை என்னும் ஊராக உள்ளது.

முனியூர்

அகத்திய முனிவர் தங்கி இருந்த காரணத்தால் பெற்ற பெயர்.

வடமட்டம்

இவ்வூர் திருவிடை மருதூர் வட்டத்தைச் சேர்ந்தது. இதன் கல்வெட்டுப் பெயர். "வடமுட்டம்" என்பதாம். இறைவனின் திருத்தேரின் வடம் இவ்வூரில் முட்டியதால் "வடமுட்டம்" என்று பெயர் பெற்றதென்ப.

வழுவூர்

வராகபுரி என்பது வேறு பெயர். ஸ்ரீநாருயண தீர்த்தரை வராக மூர்த்தியாய்த் திருமால் வந்து ஆட்கொண்டமையால் பெற்றபெயர்.

வழுவார்

பிரதளய காலத்திலும் அழியாமல் வழுவியதால் ஏற்பட்ட பெயர் என்ப. வழுவை, சயுதபுரி, பரகைலாயம், ஞான பூமி, வழுகூர், பிப்புலாரண்யம் என்பன வேறு பெயர்கள்.

வேடம்பூர்

சிவபெருமானை நோக்கித் தவம் செய்த அர்ச்சுனனுக்கு சிவபெருமான் வேடன் உருவில் காட்சியளிக்க இவ்வூரிலிருந்து சென்றமையால் ஊர் வேடம்பூர் என்றும் இறைவன் வேடம் புரீஸ்வரர் எனவும் அழைக்கப்படுகிறது.

வேள்விக்குடி

சிவபெருமானது திருமணம் நடைபெற்றபோது வேள்வி நடந்தமையால் பெற்ற பெயர்; அம்பிகைக்கு கங்கண தாரணம் செய்த தலமாதலின் "கௌது காவந்தன சேத்திரம்" எனவடமொழியில் குறிப்பர்,

# சொல்லகராதி

# துணை நூற்பட்டியல்

## நூல்கள்


1. அரங்கம் முதலான ஆற்றங்கரையிலே — கோபால கிருஷ்ண நாயுடு, ஜி. டி , மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை — 1976

2. அருணகிரிநாதர் அடிச்சுவட்டிலே, சிவபாதசுந்தரம், வானதி பதிப்பகம், சென்னை

3. ஆற்றங்கரையிலே—சேதுப்பிள்ளை, ரா. பி , பழனியப்பா பிரதர்ஸ், சென்னை—1968

4. ஊர்ப்பெயர்களின் உண்மைக் காரணம்—பரமசிவம், த. கோ., இ. ப. க. த ம. 14வது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி3—1982

5. ஊரும் பேரும்—சேதுபிள்ளை, ரா. பி , ராஜன் எலெக்ட்ரிக்பிரஸ், சென்னை—1946

6. குடவாயிற் கோட்டம்—பாலசுப்பிரமணியம், எம்., வரலாற்றுப் பேரவை, சென்னை—1978

7. சோழர் கோயிற் பணிகள், சோமசுந்தரம், ஜே. எம்., ஜீவன் பிரஸ், சென்னை, 1978

8. சேக்கிழார் அடிச்சுவட்டிலே, சிவபாத சுந்தரம், வானதி பதிப்பகம், சென்னை–1978.

9. தஞ்சாவூர் மாவட்டம், சோமலே, பாரிநிலையம், சென்னை, 1961

10. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் (பகுதி-1), நாகசாமி, இரா , தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை 1969

11. தஞ்சை மாவட்டக் கோயில் தலவரலாறுகள், தஞ்சை மாவட்ட அறநிலையத்துறை, தஞ்சை மாவட்டம்

12. தஞ்சை வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி, சொக்கலிங்கம், வீ. (பதி), சரஸ்வதி மகால் நூல்நிலையம், தஞ்சாவூர், 1965

13. தமிழ்நாடு பயணக்கட்டுரைகள், செட்டியார், ஏ. கே. 1968,

14. தமிழ்நாடு மாவட்டக் குறிப்புகள், பெருமாள், கே. ப., கவிக் குயில் பப்ளிக்கேஷன்ஸ், சென்னை, 1967

15. தமிழக வரலாற்றுச் செய்திகள், கோவிந்தராசன், சி., சாந்தி நூலகம், சென்னை, 1962

16. தனிப்பாடல் திரட்டு (பகுதி 1), சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1969

17. திருஞான சம்பந்தர் தேவாரம் (1-3), ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், ஞானசம்பந்தம் அச்சகம், தருமபுரம் 1954

18. திருத்தொண்டர் புராணம், சுப்பிரமணிய முதலியார், சி. கே., (உரை), கோவைத் தமிழ்ச் சங்கம், கோவை, 1965

19. திருநாவுக்கரசர் தேவாரம் (4-6) சொக்கலிங்கத் தம்பிரான் (பதி), ஞானசம்பந்தன் அச்சகம், தருமபுரம், 1957

20. தென்னாட்டுக் கோயில்கள் (பகுதி-2), ராதாகிருட்டிணப்பிள்ளை ம., அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை, 1957

21. தென்னிந்திய வரலாறு (பகுதி-1), நீலகண்ட சாஸ்திரியார் கே.ஏ. (மூலம்), பெருமாள்முதலியார் மு ரா (மொழிஆக்கம்), தமிழ்நாட்டுப்பாடநூல் நிறுவனம், சென்னை, 1973

22. தென்னிந்தியாவைப் பற்றிய வெளிநாட்டார் குறிப்புகள், பெருமாள் முதலியார், மு. ரா., தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1976

23. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், தேவநாதன், வி. என், (பதி), 1971

24. மூவர் தேவாரம் தலமுறை (அடங்கன்முறை), குமரகுருபரன் பிள்ளை, டி என். (பதி), குமர குருபரன்சங்கம், ஸ்ரீவை குண்டம் 1968

25. மொழியியல், சீனிவாசன், ரா., அணியகம், சென்னை, 1972

26. வாருங்கள் பார்க்கலாம், ஜகந்நாதன், கி. வா., அமுத நிலையம், சென்னை, 1966

27. வேங்கடம் முதல் குமரிவரை, பாஸ்கரத் தொண்டைமான், தொ. மு., சுப்பிரமணியப்பிள்ளை பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி 1961

28. Historic place names of Tamilakam upto 10th century AD., Chockalingam. A., M. phil Thsis, Madras university, Madras.

29. South Indian Temple Inscriptions. (Vol III-part I, II, Subramanian, T. N., Government Oriental Manuscripts Library, Madras-1957.

30. Temples of Tamil Nadu (Vol, VII – I) Chockalingam, K, 1971.

## இதழ்கள்

1. குமரகுருபரன் (பல தொதிகுகள்), குமர குருபரர் அச்சகம், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்

2. ஞானசம்பந்தம் (பல தொகுதிகள்), நமச்சிவாய மூர்த்திகள் அச்சகம், தருமபுர ஆதினம், தருமபுரம், மயிலாடுதுறை

3. செந்தமிழ்செல்வி (பலதொகுதிகள்), சைவ சித்தாந்த நூற் பதிப்புக்கழகம், சென்னை.

## ஆய்வேடுகள்

1. சுசீந்தரம் கல்வெட்டுகளில் பெயராய்வு, நயினார், மா., கேரளப் பல்கலைக் கழக முதுகலைத் தேர்வுக்கு அளிக்கப்பட்ட ஆய்வேடு, 1974.

2. திருநெல்வேலி மாவட்ட இடப்பெயராய்வு, சுப்பரமணியன், ஆ. கேரளப் பல்கலைக் கழக முதுகலைப்பட்ட மேற்படிப்பு ஆய்வேடு, திருவனந்தபுரம், 1974.

3. Place names of Coimbatore District, Nachimuthu, K., 1973

## அகராதிகள்

1. இஸ்லாமியக் கலைக்களஞ்சியம், அப்துல்ரஹிம், (தொ. பதி), யுனிவர்சல் பிரிண்டிங், சென்னை, 1976

2. கழகத் தமிழ்க் கையகராதி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1976

3. கலைக்களஞ்சியம், (தொகுதி 1-10), தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1959.

# நினைத்துப் பார்க்கிறேன்

செல்வி. அம்பிகா, பால. தஞ்சாவூர்

திரு. அருணாசலம், மு., எம். ஏ., திருச்சிற்றம்பலம், மயிலாடுதுறை

திரு. அழகப்பராசு. த., எம். ஏ., உ த. ஆ நி., சென்னை

திரு. இராசாமணி, வெ., எம். ஏ, சிதம்பரநாதபுரம், திருவிடைமருதூர்

திரு. இராசாமணி அய்யர், வில்லியநல்லூர், மயிலாடுதுறை

திரு. இராசராசன் ச., திருமக்கோட்டை, மன்னார்குடி.

திரு. இராசு, எம். ஏ., தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

திரு. கல்யாணசுந்தரம், சாமி பி. லிட், துகிலி, திருவிடை மருதூர்

திரு. கண்ணன் கு, எம். ஏ., திருலோக்கி,—திருவிடை மருதூர்

திரு. கண்ணன், ஆர்., பி. ஏ., திருவாய்ப்பாடி, திருவிடைமருதூர்

திரு. குமார் மா, திருவாவடுதுறை, மயிலாடுதுறை

செல்வி. கோதை, க. எம். ஏ, திருப்பனந்தாள்

திரு கோவிந்தராசனுர், தலைமையாசிரியர், நடுநலைப்பள்ளி, நீடாமங்கலம்,

திரு சந்திரசேகர அதியமான், திருமக்கோட்டை, மன்னார்குடி

திரு. சந்திரவாணன், சொ., எம் ஏ., தொல் பொருளாய்வு பதிவு அலுவலகம், தஞ்சாவூர்

திரு. சத்தியமூர்த்தி, மா., ஆய்வாளர், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

திரு. சம்பத், குத்தாலம், திருவிடை மருதூர்.

திரு. சம்பந்தம் தேசிகர், பந்தனை நல்லூர், திருவிடைமருதூர்

திரு. சித்திரவேலனுர், உறந்தைராயன் குடிகாடு, ஒரத்தநாடு

திரு. சீனிவாசன், சி. ஆர்., எம். ஏ, பி எச். டி., சுவடிப் புலம், தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை

திரு. சுந்தரேசன், எஸ்., எம். ஏ., திருவிடைமருதூர்

திரு. சுப்பிரமணியம், பொன்., திருவிடைமருதூர்

திரு. சுப்பிரமணியம், சி, திருநாகேஸ்வரம், கும்பகோணம்

திரு. சுவாமிநாதன், ஆர், எம். ஏ., திருவாவடுதுறை, மயிலாடுதுறை

திரு. சுவாமிநாதன், முருகு., எம். ஏ, திருப்னந்தாள், திருவிடைமருதூர்.

திரு. சொக்கலிங்கம், வீ, சரஸ்வதி மகால் நூல் நிலையம், தஞ்சாவூர்

திரு. ஜெயச்சந்திரன், எம் ஏ., எம். ஏ., கரந்தை, தஞ்சாவூர்

திரு. தர்மராசன், எம். ஏ., உப்புக்காய்ச்சிப்பேட்டை, திருவையாறு
திரு. தனபாலன், வீ., எம். எஸ். சி., பூவத்தூர், ஒரத்தநாடு
செல்வி. தனலட்சுமி, அ., எம். ஏ., திருப்பனந்தாள்,
திருவிடைமருதூர்
திருமதி. தென்னவன் கண்ணி, கு., திருலோக்கி, திருவிடைமருதூர்
திரு. பக்கிரிசாமிச் செட்டியார், வை., தலைமையாசிரியர்,
அரசினர்மேனிலைப்பள்ளி, ஆயக்காரன் புலம், வேதாரண்யம்
திரு பசுபதி, ம. வே., பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி,
திருப்பனந்தாள், திருவிடைமருதூர்
திருமதி. பத்மாவதி, தெ., எம். ஏ., தொல்பொருளாய்வுத்
துறை, சென்னை
செல்வி. பழனியம்மாள், அ., எம். ஏ., எம். பில், சென்னை
திரு. பாலசுப்பிரமணியம், எஸ்., ஆசிரியர், அரசினர் மேனிலைப்பள்ளி,
நீடாமங்கலம்
திரு. பாலசுப்ரமணியம், எஸ்., சரஸ்வதி மகால் நூல் நிலையம்,
தஞ்சாவூர்
திரு. பாலசுப்பிரமணியம், கோ., ஆசிரியர், அரசினர் உயர்நிலைப்பள்ளி,
வேதாரண்யம்
திரு. புவனேஸ்வரன், வலங்கைமான்
திரு. மகாதேவன், ம. வே., எம். ஏ., எம் பில்., ஸ்ரீ குமர
குருபரர் மேனிலப்பள்ளி, ஆடுதுறை, திருவிடைமருதூர்
திரு. மங்களேஸ்வரன், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்,
திருவிடைமருதூர்
திருமதி. மங்கையர்க்கரசி, பால., தஞ்சாவூர்
திரு. மனோகரன், சி., எம். ஏ., எம். பில்., திருப்பனந்தாள்
திரு. மாசிலாமணிதேசிகர், வேதாரண்யம்
திரு. முத்துசாமி மல்லிக் கவுண்டர், பூவத்தூர், ஒரத்தநாடு.
திரு. முருகன், திருப்பனந்தாள்
திரு. முருகையன், பொன்., ஆசிரியர், உயர்நிலைப்பள்ளி
திருப்பனந்தாள், திருவிடை மருதூர்
செல்வி. லலிதாம்பிகா, எம். ஏ., சுவடியியல், உ. த.ஆ. நி., சென்னை
திரு. வெள்ளைவாரணம், தா. ம., பேராசிரியர், செந்தமிழ்க்
கல்லூரி, திருப்பனந்தாள், திருவிடைமருதூர்
திரு. வேங்கடராமையா, கா. ம., எம் ஏ., எம். லிட், பேராசிரியர்,
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர்
திரு. வேதசுப்பிரமணியம், மா., பி. எஸ்ஸி, ஆசிரியர்,
அரசினர் மேல்நிலைப்பள்ளி, ஆயக்காரன்புலம், வேதாரண்யம்

மற்றும் பலர்

**நன்றி**

# நிறுவன வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | எண்பதில் தமிழ் | ரூ. 45 | 00 |
| 2. | பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள் | 8 | 00 |
| 3. | தமிழர் ஆடைகள் | 16 | 00 |
| 4. | தமிழர் கண்ட மனம் | 9 | 00 |
| 5. | தமிழக நாட்டுப்புறக் கலைகள் | 10 | 00 |
| 6. | தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 14 | 00 |
| 7. | தமிழர் உணவு | 12 | 00 |
| 8. | தமிழர் தோற்கருவிகள் | 10 | 00 |
| 9. | தமிழும் தமிழரும் | 5 | 00 |
| 10. | Lauguage & Grammar (Heritage of the Tamils) | 22 | 00 |
| 11. | Cultural Heritage of the Tamils | 20 | 00 |
| 12. | Literary Heritage of the Tamils | 50 | 00 |
| 13. | தொல்காப்பியம்—சிறப்புப்பாயிரம் | 10 | 00 |
| 14. | தொல்காப்பியம்-உரைவளம்-நூன்மரபு | 9 | 00 |
| 15. | தொல்காப்பியம்-உரைவளம்-மொழிமரபு | 9 | 00 |
| 16. | தொல்காப்பியம்-உரைவளம்-பிறப்பியல் | 8 | 00 |
| 17. | தொல்காப்பியம்-உரைவளம்-புணரியல் | 10 | 00 |
| 18. | தொல்காப்பியம்-உரைவளம்-மரபியல் | 10 | 00 |
| 19. | தொல்காப்பியம்-உரைவளம்-தொகைமரபு | 8 | 00 |
| 20. | தொல்காப்பியம்-உரைவளம்-கிளவியாக்கம் | 20 | 00 |
| 21. | தொல்காப்பியம்-உரைவளம்-உருபியல் | 8 | 00 |
| 22. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-3 | 8 | 00 |
| 23. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-5 | 12 | 00 |
| 24. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-6 | 16 | 00 |
| 25. | தமிழ் இலக்கியக் கொள்கை-தொகுதி-7 | 15 | 00 |
| 26. | கூவ நூல் | 7 | 00 |
| 27. | மனை நூல் | 15 | 00 |
| 28. | பிரபந்தத்திரட்டு | 16 | 00 |
| 29. | தந்திவனப்புராணம் | 15 | 50 |
| 30. | திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ் | 7 | 00 |
| 31. | சின்ன மகிபன் குளுவ நாடகம் | 5 | 00 |
| 32. | பணவிடுதூது | 6 | 00 |
| 33. | கருவூரார் பலதிரட்டு | 12 | 00 |
| 34. | சுவடியியல் பயிற்சி-கையேடு | 6 | 00 |
| 35. | கும்மிப்பாடல்கள் | 16 | 00 |
| 36. | பிரபந்த தீபிகை | 12 | 00 |
| 37. | கண்மருத்துவம் | 50 | 00 |
| 38. | தமிழில் விடுகதைகள் | 12 | 00 |
| 39. | அடியார்க்கு நல்லார் உரைத்திறன் | 12 | 00 |
| 40. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | 6 | 00 |
| 41. | The Tamil Writers Directory | 10 | 00 |
| 42. | Tamil Resarch through Journals | 7 | 00 |
| 43. | Dr. MU· VA | 20 | 00 |
| 44. | Dissertations on Tamilology | 10 | 00 |
| 45. | Tirumurugan | 5 | 00 |
| 46. | Epigraphical Evidence for Tamil Studies | 10 | 00 |
| 47. | A Study of Peruṅkatai | 12 | 00 |
| 48. | Tamil Drama | 20 | 00 |
| 49. | Papers on Tamil Studies | 15 | 00 |

இயக்குநர், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
டி.டி.டி.ஐ. தரமணி, சென்னை-600113.